# ஸ்ரீமத் பாகவதம்

எழுதியவர்: அ.லெ.நடராஜன்



# ஸ்ரீ முகம்

உ

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

## ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஸ்ரீ மடம்; காஞ்சிபுரம்

முகாம் பால்வாஞ்சா
கம்மம் ஜில்லா
ஆந்திர பிரதேசம்

தேதி : 18-3-1968.

பல ஆஸ்திக்ய நூல்களை வெளியிட்டுக்கொண்டு, கல்வி உலகத்திற்குத் தொண்டு புரிந்துவரும், சென்னை புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்டின் நிர்வாகத்தினர், ஸ்ரீ ராமாயணம், மஹா பாரதம், இவைகளைத் தமிழில் சுருக்கமாய் எழுதி, ப்ரஸித்தம் அடைந்துள்ள ஸ்ரீ அ. லெ. நடராஜனைக் கொண்டே, புராண ரத்னமான ஸ்ரீமத் பாகவதத்தை, சுருக்கமாக எழுதச் செய்து, ஆரம்பமாக முதல் ஆறு ஸ்கந்தங்களை, தகுந்த படங்களுடன் வெளியிடுவதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

இந் நூலில் சிருஷ்டி, காலம் முதலியவைகளின் சொருபங்களும், கபிலர், தக்ஷன், துருவன், பிருது சக்கரவர்த்தி, புரஞ்ஜனன், ஜடபரதர், அஜாமிளன், முதலியவர்களின் வியாக்யானங்களும், எளிய தமிழ்

நடையில், முக்கிய கருத்துக்களை விடாமல், சுருக்க மாக விளக்கப்பட்டு இருக்கின்றன. முக்யமாக, பிருது சக்கரவர்த்திக்கு ஸனத் குமாரரும், தாயான தேவஹூதிக்குக் கபிலரும் செய்த உபதேசங்களை, ஆசிரியர் ரத்ன சுருக்கமாய் தெளிவுபடுத்தி இருப் பது, ஆஸ்திகர்கள் கவனிக்கத் தகுந்ததாகும். அவை யாவன :

"புறம்பான தர்மங்களை விட்டுவிட்டு, அவ ரவர்களது, வருணாசிரம தர்மங்களைக் கடைப் பிடித்து, தாம் செய்யும் காரியங்கள் அனைத்தை யும் பகவானுக்கு அர்ப்பணம் என்னும் கருத் துடன் பலனில் நாட்டமின்றிச் செய்ய வேண் டும். பகவானிடம் பூரண பக்தி செலுத்த வேண்டும். பகவானுடைய கதைகளை விருப்ப முடன் கேட்க வேண்டும். சான்றோரோடு இணங்கி வாழ வேண்டும். இவ்விதம் வாழ்ந்து வந்தால், ஞான யோகம் கைகூடி, இறைவ னோடு இரண்டறக் கலக்கும் மோக்ஷ நிலையை, ஜீவாத்மா அடைகிறான்' என்பனவாகும்.

ஆஸ்திகர்கள், இவ்வுத்தம நூலைப் படித்தும், மேற் கண்ட உபதேசங்களை மனதில் நிலைநிறுத்தி இயன்ற அளவு இவைகளைப் பின்பற்றி நடந்தும், பகவானின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரர்களாகி, இஹ பர மேன்மைகளை அடைவார்களாக.

# முன்னுரை

ஆனந்தமாக வாழ வேண்டும் என்னும் விருப்பம் ஒவ்வொரு உயிருக்கும் உண்டு.

இம்மையில் மட்டும் ஆனந்தமாக வாழ்வது போதாது: மறுமையிலும் ஆனந்தமாக வாழும் வகையில், மனிதன் இம்மையிலேயே வழி வகுத்துக்கொண்டு வாழ முயல வேண்டும்; வாழப் பழக வேண்டும். அதன் பயனாய்க் கிடைக்கும் ஆனந்தமே நிலையான ஆனந்தம் என்று ஒரு சாரார் கருதுகின்றனர்.

''இம்மை ஆனந்தமும் மறுமை ஆனந்தமும் நிலையில்லாதவை; வீடுபேறு என்பதே நிலையான ஆனந்தத்தைத் தருவது; ஆகவே, இம்மை வாழ்வு, மறுமை வாழ்வு இரண்டும் வீடுபேறு என்னும் பேரானந்த நிலைமை அடையப் பயன்படும் பயிற்சிக் கூடங்கள் ஆகுமே யன்றி வேறு இல்லை'' என்று மற்றொரு சாரார் கூறுகின்றனர்.

நிலையான ஆனந்தம் என்பதையே தமது இறுதி இலட்சியமாக ஒவ்வொரு சாராரும் கொண்டிருந்தபோதிலும், நிலையான ஆனந்தம் எது? அதை அடைவதற்குரிய மார்க்கங்கள் எவை? இவற்றில்,ஒவ்வொருவரும் வேறுபட்டு நிற்கின்றனர்.

நிலையான ஆனந்தத்தை ஆத்மா அடைய வேண்டுமாயின், அதை, அறிவு மூலமாகத்தான்—அதாவது ஞானம் பெறுவதன் மூலமாகத்தான்—அடைய முடியும் என்று ஒரு சாரார் கூறுகின்றனர்.

நான் என்பது என்ன? இந்த உலகம் என்பது என்ன? நான் என்பதற்கும் இந்த உலகத்துக்கும் உள்ள தொடர்பு என்ன?

இதுபற்றி ஆராய்ந்து, உலகம் முழுதும் ஒரே பொருள் தான் இருக்கிறது. அது பல்வேறு பொருள்களாகத் தோற்றம் அளிக்கிறது; எல்லாப் பொருளிலும் ஊடுருவிக் கலந்து நிற்கும் அந்தப் பரம் பொருளை அறிந்து, அது வேறு, தான் வேறு என்ற பேதமற்ற அறிவைப் பெறுவதே ஆனந்த நிலை என்று ஒரு சாரார் கூறுகின்றனர்.

இத்தகைய கொள்கையுடையோரை, ஏகான்மவாதிகள் என்றும், வேதாந்திகள் என்றும், அத்துவைதிகள் என்றும் கூறுவர்.

மற்ெருரு சாரார் ஆனந்த நிலையில் உயிர்கள் இருப்பதற்கு அறிவு மட்டும் போதாது; ஊக்கத்தோடும் உண்மையோடும் தீமைகளைக் களைந்து, தனக்கும் பிறருக்கும் நன்மை பயக்கும் செயல்களில் ஈடுபட வேண்டும். உழைப்பும் ஊக்கமுமே ஒருவனை மேன்மைப்படுத்தும்; பிறரையும் மேன்மையடையச் செய்யும். முயற்சி செய்யாத சோம்பேறியால் இறைவனை அடைய முடியாது; காண முடியாது. ஆகவே, நிலையான ஆனந்தத்தைப் பெறுவதற்கு, செயலே காரணம் என்று கூறுகின்றனர்.

பிறிது ஒரு சாரார், நிலையான ஆனந்தத்தைப் பெறுவதற்கு, அறிவு, முயற்சி ஆகிய இரண்டு மட்டும் போதா; அன்பு என்னும் உளப்பாங்கும் அதற்கு அவசியம் தேவை என்று கூறுகின்றனர்.

தன் உயிரைப்போல், பிற உயிர்களை நேசிக்காதவனிடத்தில் காணப்படும் அறிவும் முயற்சியும் பொது நலத்துக்கு உகந்தவை ஆகா. ஆகவே, நிலையான ஆனந்த நிலைக்கு அன்பே அடிப்படை ஆகும் என்று கூறுகின்றனர்.

முதல் சாரார் பின்பற்றுவதை ஞான யோகம் என்றும், இரண்டாவது சாரார் பின்பற்றுவதைக் கர்ம யோகம் என்றும், மூன்றாவது சாரார் பின்பற்றுவதைப் பக்தி யோகம் என்றும், ஹிந்து சமய நூலோர் பாகுபடுத்திக் குறிப்பிடுவர்.

ஸ்ரீமத் பாகவத புராணம் என்னும் இந்த நூல் பக்தி யோகத்தைப்பற்றிக் கூறும் மிக உயர்ந்த ஒரு நூலாகும்.

உலகில் வாழும் உயிர்களுக்கு, அன்பு என்னும் பண்பு அவசியமாகத் தேவைப்படுவது. அன்பு வளர வளர, சமுதாயத்தில் நல்லெண்ணமும் நல்லொழுக்கமும் மிகுதி யாகும். இதனால் இம்மையிலும் மறுமையிலும், நல்ல முறையில் வாழ முடிவதோடு, வீடு பேற்றை அடைவதற்கு அதுவே சிறந்த மார்க்கம் ஆகும் என்பது, ஸ்ரீமத் பாகவதத்தின் முடிந்த முடிபு.

பக்தி என்னும் சொல் கடவுளிடம் மனிதனோ,வேறு எந்த உயிருமோ, காட்டும் அன்பை மட்டும் குறிக்கவில்லை; தன் உயிரைப்போல், பிற உயிர்களை நேசிப்பதையும் அந்தச் சொல், குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும். இறைவன் படைத்திருக்கும் உயிர்களை நேசியாமல், இறைவனை மட்டும் நேசிப்பது, உண்மையில் இறை பக்தி ஆகாது. இந்த உண்மையை ஒவ்வொரு அறிஞரும் உணர்வது நல்வாழ்க்கைக்கு அவசியம். ஆகும் என்று பாகவத புராணம் போதனை செய்கிறது. அந்த வாசகம் வருமாறு :

''எல்லா உயிர்களிலும் நான் அந்தர்யாமியாய் இருக்கிறேன். இந்த உண்மையை அறியாது என்னை ஒருவன் வழிபடுவானாயின், அது சாம்பலில் பெய்த ஆகுதிக்கு ஒப்பாகும்.

''பிற உயிர்களைப் பேத புத்தியோடு நோக்குபவன், என்னைப் பகைப்பவன் ஆவான்; பேத புத்தி உள்ளவன் மனத்தில் ஒருபோதும் சாந்தி நிலவாது.

''பல வகையான திரவியங்களைக் கொண்டு, பல வகையில் எனது விக்கிரகத்தைப் பூசித்த போதிலும், சமுதாயத்தை யார் அவமதிக்கிறார்களோ, அவர்கள் செய்யும் பூசைகளால் நான் ஆனந்தம் அடைவதில்லை.''

மேலே குறிப்பிட்டு இருக்கும் வாசகங்கள் ஸ்ரீமத் பாகவதம், மூன்றாவது ஸ்கந்தம், இருபத்து ஒன்பதாவது அத்தியாயம், 22, 23, 24வது ஸ்லோகங்கள் ஆகும்.

இதே உண்மையை, தமிழ்ச் சான்றோர் பலரும் வலியுறுத்திச் சொல்லி இருக்கிறார்கள்.

அன்பெனும் பிடியுள்
    அகப்படு மலையே !
அன்பெனும் குடில்புகும்
    அரசே !                    —திருவருட்பா

என்று பாடி இருக்கிறார் இராமலிங்க அடிகள் என்னும் தமிழ்ப் பெரியார்.

அன்பும் சிவமும்
    இரண்டு என்பர் அறிவிலார்;
அன்பே சிவமாவது
    யாரும் அறிகிலார் ;
அன்பே சிவமாவது
    யாரும் அறிந்த பின்
அன்பே சிவமாய்
    அமர்ந்திருப் பாரே                    —திருமந்திரம்

என்று பாடி, அன்பே தெய்வம் என்பதை வலியுறுத்துகின்றார் திருமூலர் என்னும் மற்றொரு தமிழ்ப் பெரியார்.

இந்த இரு பாடல்களாலும் நாம் அறிவது என்ன ?

அன்பு இருக்கும் இடத்தில் கடவுள் இருப்பார்; அன்பில்லாத இடத்தில் கடவுள் இருக்க மாட்டார் என்பதே.

மா பெரும் இந்த உண்மையையே பாகவத புராணம் அழுத்தம் திருத்தமாக, கலையுணர்ச்சியுடன் விவரிக்கிறது.

அன்பையே—அதாவது பக்தியையே—பாகவதம் அழுத்தமாகப் போதித்தபோதிலும், அறிவையும் செயலையும்—அதாவது ஞானத்தையும் கருமத்தையும்—அது புறக்கணித்து

இது பாகவதத்தில் காணும் முதல் சிறப்பு அம்சம்.

பாகவத மதம் அன்பை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், அகச் சயமங்களுக்குள் காணப்படும் பூசலையும் பிணக்கையும் முதலில் களைய முயல்கிறது பாகவதம்.

திருமாலையே பரம்பொருளாகக் கொண்டிருப்பினும், சிவனையோ பிரம்மாவையோ, பாகவதம் குறைவுபடுத்திப் பேசவில்லை. திருமாலும் சிவனும் ஒன்று என்பதை, பாகவதம் திருமால் வாய்மொழி மூலமே கூறுகிறது. அந்த வாசகம் வருமாறு :

''நானும் பிரமனும் சிவனும் ஒன்றே. எனது முக்குணமாகிய மாயைக்கொண்டு, படைக்கவும் காக்கவும் அழிக்கவும் வேண்டி, பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் பெயர்களை நான் அடைகிறேன். பரப்பிரமத்தைக் காட்டிலும் எங்கள் மூவரையும் வேருக நினைப்பவர்கள், அறிவிலிகள் ஆவர். எங்கள் மூவருக்குள் எவன் பேதத்தைக் காணவில்லையோ, அவனே சாந்தி அடைவான்.''

இந்த வாசகம், நான்காம் ஸ்கந்தம் தக்ஷன் கதையில் வருகிறது.

இது பாகவதத்தில் காணப்படும் இரண்டாவது சிறப்பு அம்சம்.

இதோடு மட்டும் நின்றுவிடாமல், புறச் சமய குரவர்களையும் பாகவதம் பெருமையுடன் பேசுகிறது.

ஜைன சமய முதல் தீர்த்தங்கரர் ரிஷப தேவரையும், பௌத்த சமயத்தின் பிரதான புருஷர் புத்தர்பெருமானையும், திருமாலின் அவதாரம் எனப் பாகவத புராணம் கொண்டாடு

இது பாகவதத்தில் காணப்படும் மூன்ருவது சிறப்பு அம்சம்.

இந்த மூன்று சிறப்பு அம்சங்களுமே, பாகவதத்துக்கு ஏற்றத்தைக் கொடுப்பதாகக் நாம் கருதலாம். பாரதம், இராமாயணம் போன்ற பண்டைய இதிகாசங்களுக்கு நிகராக, பாகவத புரணத்தை ஏற்றிப் போற்றி மக்கள் கொண்டாடுகிருர்கள்.

மிகவும் பிற்காலத்தில் தோன்றிய பாகவத புராணம், புராதன இதிகாசங்களுக்குச் சமதையான பெருமையையும் மேன்மையையும் பெற்று இருக்கிறது என்ருல், அதை ஒரு

சாதாரணமான சாதனையாகக் கருதக் கூடாது. மா பெரும் அரிய சாதனை என்றே அதைக் கருத வேண்டும்.

மகாபாரதத்தை இயற்றிய வியாச மகரிஷியே, இந்தப் பாகவத புராணத்தையும் செய்தார் என்பது மரபு.

ஆனால், ஆராய்ச்சியாளர்கள் இதை உண்மை என்று ஒப்புக்கொள்ள வில்லை. காரணம், புத்தர் பெருமானைப் பாகவதம் திருமாலின் அவதாரம் என்று கூறுகிறது. அப்படி யானால் வியாச முனிவர் புத்தர் பெருமானுக்குப் பிற்பட்ட காலத்தவர் ஆகிறார். புத்தருக்குப் பிற்பட்ட காலத்தவர் வியாச மகரிஷி என்பதை, பண்டைய மரபினர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆகவே, பாகவதம் புத்தருக்குப் பிற் காலத்தில் தோன்றிய ஒரு நூல் ஆகும் என்பதும், பாகவ தத்தை இயற்றிய வியாசர் என்பவர், அதே பெயரைக் கொண்ட வேறு ஒரு பெரியவராய் இருக்கலாம் என்பதும், ஆராய்ச்சியாளர்கள் காணும் முடிவு.

அப்படியானால் பாகவதம் எந்த நூற்றாண்டில் இயற்றப் பட்ட நூலாக இருக்கலாம்?

பாகவதம் என்பது தமிழ் நாட்டில் தோன்றிய ஒரு நூல் என்றும், ஆழ்வார்களின் தெய்வ பக்தி, பாகவதம் முழுதும் பிரதிபலிக்கிறது என்றும், பாண்டிய நாட்டில் தென் மதுரை யில் இருக்கும் வைகைக் கரையில், கி. பி. ஒன்பதாம் நூற் றாண்டில் இயற்றப்பட்ட ஒரு நூலாகும் என்று, ஆராய்ச்சி யாளர் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

பகவத் கீதையைக் காட்டிலும் பாகவதம் மக்களி டையே அதிக செல்வாக்கைப் பெற்று இருக்கிறது என்றும் கூறுகிறார்கள்.

இந்த நூல் தமிழ் நாட்டின் பழக்க வழக்கங்களையும் வழி பாட்டு முறைகளையும் பின்பற்றி எழுதப்பட்டிருக்கிறது. வைகை, தாம்பிரபரணி, காவேரி, முதலிய தமிழ் நாட்டு ஆறுகளையும். தென் மதுரை, காஞ்சிபுரம், திருவரங்கம் முதலிய தமிழ்நாட்டுத் தலங்களையும் பயபக்தியுடனும் ஆர்வத்துடனும் போற்றி வருணிப்பதால், பாகவதம்

தமிழ் நாட்டில் தோன்றிய நூல் என்பதில் சந்தேகம் இல்லை என்று முடிவுகட்டி இருக்கிறார்கள்.*

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கரா சாரிய சுவாமிகளின் ஆசி பெற்று, முன்பு **வியாசர் அருளிய மகா பாரதத்தையும், வால்மீகி இராமாயணத்தையும்** எளிய, தமிழில் எழுதி வெளியிட்டேன். அந்த இரு இதிகாசங்களை யும் படித்துப் பார்த்த அன்பார்கள், பாகவதத்தையும் அவ்வாறு எளிய தமிழில் எழுதி வெளியிடும்படி சொன் னார்கள்.

மக்களின் இந்த அபிப்பிராயத்தை, ஆசாரிய சுவாமி களிடம் தெரிவித்தபோது, எழுதும்படி கட்டளையிட்டு ஆசீர் வதித்தார்கள்.

அவர்களின் நல்லாசியும் ஸ்ரீமுகமும் பெற்று, பாகவதம் என்னும் இந்த நூல், இப்போது இரண்டு பகுதிகளாக வெளி வருகிறது.

முதல் பகுதியில் ஆறு ஸ்கந்தங்களும், இரண்டாம் பகுதி யில் ஆறு ஸ்கந்தங்களும் வெளிவருகின்றன.

இந்த நூலைத் தமிழ் மக்கள் வரவேற்பார்கள் என நம்பு கிறேன்.

மொத்தம் இருபத்து இரண்டு படங்கள் இந்த நூலில் இடம்பெற்று இருக்கின்றன. இந்தியப் பாணியில் ஓவியங்களை வரைவதில் ஆர்வமுள்ள ஓவியர் எஸ். ராஜம் அவர்கள் வரைந்த ஓவியங்கள் இவை.

குறைபாடுள்ள ஒருவன் எழுதும் நூலில் குற்றங் குறை கள் இல்லாமற் போகா. குற்றங்கள் குறைகள் ஏதாவது இந்த நூலில் தென்பட்டால், எடுத்துக் காட்டுமாறு, வாசக அன்பர்களைப் பணிவுடன் வேண்டுகிறேன்.

15–3–'68
60, பாரதி நகர்
சென்னை-17.

அன்புள்ள
**அ. லெ. நடராஜன்**

---

* The Lord of the Autum moons. by Radhakamal Mukerjee; Vice Chancellor, Lucknow University. என்னும் ஆங்கில நூலைப் படிக்கவும்.

# பதிப்புரை

நாடு சுதந்திரம் அடைந்த பின்னர், நம் நாட்டுப் புராதன இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், ஆகியவற்றைப் படிக்க வேண்டும் என்னும் விருப்பமும் ஆர்வமும் மக்களிடையே ஏற்பட்டு இருக்கின்றன.

குப்பைகள் என்று புராணங்களை ஒதுக்கித் தள்ளிய கருத்து மங்கி மறைந்து, மக்களுக்கு வழி காட்டும் நல்ல பல கருத்துக்கள் புராணங்களில் இருக்கின்றன என்னும் கருத்து, பரவி வரும் காலம் இது.

புராணங்களில் அறநெறிகள் இருக்கின்றன; நீதிகள் இருக்கின்றன; தத்துவங்கள் இருக்கின்றன; தத்துவங்களை விளக்கும் நல்ல கதைகள் இருக்கின்றன; இறைவனைப்பற்றிய கதைகள் இருக்கின்றன; இறைவனின் அடியார்கள், ஞானிகள் இவர்களின் வாழ்க்கைகளும் உபதேசங்களும் இடம் பெற்று இருக்கின்றன. ஆகவே, புராணங்களுக்கு நம் நாட்டு இலக்கியத்தில் முக்கியமான ஒரு இடம் உண்டு.

நம் நாட்டில் வழங்கி வரும் பிரசித்தமான பதினெண் புராணங்களில், பாகவத புராணத்துக்கு, சிறப்பான ஒரு ஸ்தானம் உண்டு. இந்தியப் பண்பாட்டுக்கே ஆதர்ச புருஷராக இன்றும் விளங்கும் கண்ணபிரானின் வாழ்க்கையையும் உபதேசங்களையும் கூறும் புராணம் இது.

ஒப்பற்ற இந்தப் பாகவத புராணம் இரண்டு பகுதிகளாக, எளிய தமிழில் இப்பொழுது வெளி வருகின்றன

வண்ணப் படங்களுடன் எளிய தமிழில் வெளி வந்திருக்கும் இந்த நூலை, தமிழ் அன்பர்கள் விருப் புடன் வாங்கிப் படிப்பார்கள் என நம்புகிறோம்.

இந்த நூலுக்கு, ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதி பதி, ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் ஆசி கூறி, ஸ்ரீமுகம் வழங்கி இருக்கிறார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றியும் வணக்கமும் உரியன.

சென்னை
19-3-68

சித. இராமநாதன்.

# பொருளடக்கம்

## முதல் ஸ்கந்தம்


1. தோற்றுவாய் ... 19
2. சூதர் சொன்ன பதில் ... 22
3. பாகவத புராணம் ... 25
4. வியாசரின் மனக் கவலை ... 28
5. நாரதரும் வியாசரும் ... 32
6. நாரதரின் முற் பிறப்பு ... 37
7. தோற்றுவாய் ... 43
8. அசுவத்தமா அடைந்த அவமானம் ... 46
9. குந்தி செய்த தோத்திரம் ... 51
10. பீஷ்மரின் துதி ... 59
11. துவாரகை சென்றார் ... 63
12. துவாரகையில் வரவேற்பு ... 66
13. பரீட்சித்தின் பிறப்பு ... 70
14. மேலான கதி ... 76
15. கலிபுருடன் இருக்கும் இடங்கள் ... 81
16. சுக முனிவரின் வருகை ... 85


## இரண்டாம் ஸ்கந்தம்


1. ஸ்தூல சொரூபம் ... 93
2. பக்தி மார்க்கம் ... 96
3. திருமால் சீர் ... 99
4. படைப்பின் இரகசியம் ... 102
5. பாகவத வரலாறு ... 106
6. பொருளடக்கம் ... 109


## மூன்றாம் ஸ்கந்தம்


1. விதுரரும் உத்தவரும் ... 116

| | | | |
|---|---|---|---|
| 3. | கடவுளும் காலமும் | ... | 126 |
| 4. | சுவாயம்புவ மனு | ... | 130 |
| 5. | வராகவாதாரம் | ... | 134 |
| 6. | கசியபரும் திதியும் | ... | 137 |
| 7. | துவாரபாலகர்களுக்கு நேர்ந்த சாபம் | ... | 142 |
| 8. | திதியின் கருப்பம் | ... | 145 |
| 9. | இரண்யாக்கன் வதம் | ... | 148 |
| 10. | கர்த்தமர் திருமணம் | ... | 155 |
| 11. | ஆண் குழந்தை வேண்டும் | ... | 160 |
| 12. | கபிலர் | ... | 164 |
| 13. | முக்தி நிலை | ... | 168 |
| 14. | கபிலர் செய்த உபதேசம் | ... | 172 |
| 15. | மேலான கதி | ... | 177 |


## நான்காம் ஸ்கந்தம்


| | | | |
|---|---|---|---|
| 1. | தக்ஷன் கதை | ... | 184 |
| 2. | துருவன் கதை | ... | 206 |
| 3. | பிருது சக்ரவர்த்தி கதை | ... | 227 |
| 4. | புரஞ்சனன் கதை | ... | 246 |


## ஐந்தாம் ஸ்கந்தம்


| | | | |
|---|---|---|---|
| 1. | பிரியவிரதனுடைய வமிசம் | ... | 261 |
| 2. | ரிஷப தேவர் | ... | 266 |
| 3. | ஜடபரதர் சரிதம் | ... | 270 |
| 4. | நாவலம் தீவு | ... | 281 |


## ஆறும் ஸ்கந்தம்


| | | | |
|---|---|---|---|
| 1. | அஜாமிளன் கதை | ... | 285 |
| 2. | தக்ஷனுடைய வம்சம் | ... | 297 |
| 3. | விருத்திராசுர வதம் | ... | 303 |
| 4. | சித்திரகேதுவின் கதை | ... | 315 |

# ஸ்ரீமத் பாகவதம்

---

## முதல் ஸ்கந்தம்

---

### தோற்றுவாய்

ஆதி காலத்தில் அதாவது கலி யுகம் தொடங்கி, ஆயிரம் ஆண்டுகள் முடிவுற இருந்த தருணத்தில்—சௌனகர் முதலிய முனிவர்கள், சொர்க்கவாசிகளும் விரும்புகின்ற வீடுபேற்றை விரும்பி, நைமிசம் என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தில், ஆயிரம் ஆண்டுகள் செய்யத்தக்க ஒரு யாகத்தைச் செய்துகொண்டிருந்தார்கள்.

அப்போது, ஒரு நாள் அதி காலையில் வேள்வி சம்பந்தமான ஹோமம் முதலியவற்றை அந்த முனிவர்கள் முடித்துக்கொண்டனர். பிறகு, மரியாதை செய்யப் பெற்று ஆசனத்தில் அமர்ந்திருக்கின்ற சூதரைப் பார்த்து, "பாவமற்றவரே! சூதரே! இதிகாசங்கள், புராணங்கள், தர்ம சாஸ்திரங்கள் ஆகியவற்றை நீர் நன்கு பயின்றவர். நல்ல முறையில் அவற்றைப் பிறருக்கு எடுத்து விவரிக்கும் ஆற்றலும் திறமையும் பெற்றவர் நீர். வேதங்களை அறிந்தவர்களுள் சிறந்தவரான வியாச முனிவருக்கும் சகுணமாயும் நிர்க்குணமாயும் பிரம்மத்தை வழிபடுகின்ற முனிவர்களுக்கும்

தெரிந்தவற்றை எல்லாம் அவர்களின் அனுக்கிரகத்தால் நீரும் தெரிந்துகொண்டிருக்கிறீர். பிரியமுள்ள தம் சீடனுக்கு, ஆசாரியர்கள் தமக்குத் தெரிந்த இரகசியங்களைச் சொல்லாமல் இருப்பது வழக்கம் இல்லை.

"ஆகையால், பல நூல்களைக் கற்பதன் பயனாய் நலம் பயப்பது எது என்று நீர் நிச்சயித்து இருக்கிறீரோ, அதை எங்களுக்கு நீர் கூற வேண்டும்.

"இந்தக் கலி யுகத்தில் மானுடர்களுக்கு ஆயுள் குறைவு சோம்பலும் புத்திக் குறைவும் அதிகம். நோய்களும் இடையூறுகளும் அடிக்கடி சாடி, அவர்களைத் துன்புறுத்துகின்றன. ஆகையால், நூல்களைக் குருமுகமாக நீடித்த காலம் கேட்கவும், அவற்றின் சாரத்தைத் தாமாகவே தெரிந்துகொள்ளவும் மானுடர்களுக்குப் போதிய அவகாசம் கிடையாது.

"எனவே, நூல்களின் சாரத்தைத் திரட்டி எங்களுக்கு நீர் கூற வேண்டும். எதைக் கேட்டால் மனத் தெளிவு ஏற்படுமோ, எதைச் செவிமடுத்தால் இறைவனுடைய அருள் சித்திக்குமோ, அதை எங்களுக்கு நீர் கூற வேண்டும்

"சூதரே! அடியார்களைப் பாதுகாக்கும் இயல்புள்ள இறைவன், எதன் பொருட்டு, எதைச் செய்ய விரும்பி, வசுதேவரின் மனைவி தேவகி வயிற்றில் அவதரித்தார்.

"எவருடைய பெயரை உச்சரித்தால், பிறப்பு இறப்பு என்னும் பந்தங்களினின்று ஒருவனால் விடுபட முடியுமோ, எவருடைய பெயரை உச்சரித்தால், பயமும் பயந்து விலகிப் போகுமோ, புலன்களை வென்ற முனிவர்களும் எவருடைய திருவடிகளை அடைக்கலம் என நம்பி இருக்கிறார்களோ, அவருடைய சரிதத்தைக் கேட்க,

யாருக்குத்தான் பிரியம் ஏற்படாது. நாங்களும் கிருஷ்ணனுடைய திவ்விய சரித்திரத்தைச் செவிமடுப்பதற்கு அதிக ஆவலுடன் இருக்கிறோம்.

“தமது மாயையினால் பலவித அவதாரங்களை எடுக்க வல்லவரும், நாரதர் போன்ற முனிவர்களால் கொண்டாடப் பெற்றவருமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய அவதாரக் கதைகளை எங்களுக்குக் கூறுங்கள்.

“இறைவனுடைய அவதாரக் கதைகள் கேட்கக் கேட்கத் தெவிட்டாமல் இன்பம் பயக்கும் தன்மையுடையவை. இறைவன் எதற்காகத் தமது மாயா சக்தியால், மச்சாவதாரம் முதலிய பல திருவிளையாடல்களைப் புரிகிறார்?

‘கலியுகம் பிறந்துவிட்டது; அதனால்தான் திருமாலுக்குப் பிரியமான இந்த நைமிசாரண்யத்தில் நாங்கள் சத்ர யாகத்தைத் தொடங்கி இருக்கிறோம். ஆகவே, திருமாலின் அவதாரக் கதைகளைக் கேட்க எங்களுக்குப் போதிய அவகாசம் இருக்கிறது.

“கடலைத் தாண்ட விரும்புபவனுக்கு ஓடம் கிடைத்தாற்போல், கலியைத் தாண்ட விரும்பும் எங்களுக்கு, அதிர்ஷ்டவசத்தால் நீர் கிடைத்தீர்.

“தர்மத்துக்கு அரண் போன்றவரும் அந்தணர்களுக்கு அன்பருமான கிருஷ்ணன், இவ் உலகத்தை விட்டு, பரமபதத்துக்குச் சென்ற பின்னர், தர்மம் இப்பொழுது யாரைச் சரண் அடைந்து இருக்கிறது? சொல்லுங்கள்” என்று கேட்டார்கள்.

## சூதர் சொன்ன பதில்

சௌனகர் முதலிய முனிவர்கள் கேட்ட இந்தக் கேள்விகளைச் செவிமடுத்த சூதர்* பெரிதும் அக மகிழ்ந்தார். தம்மிடம் இந்தக் கேள்விகளைக் கேட்டதற்காக, சௌனகாதி முனிவர்களை அவர் பாராட்டினார். அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு மகிழ்ச்சியுடன் அவர் பதில் சொன்னார்.

முதலில் தமக்கு ஸ்ரீமத் பாகவதத்தை உபதேசித்த சுகருக்கும்,அதன் பின்னர், ஸ்ரீமத் பாகவதத்தை இயற்றி அருளிய வியாச முனிவருக்கும், கல்விக்கு அதிகார தேவதையான கலைமகளுக்கும் வணக்கம் செலுத்தி விட்டு ஸ்ரீமத் பாகவத புராணத்தை, சூதர் சொல்லத் தொடங்கினார்:

"முனிவர்களே! நீங்கள் என்பால் கேட்ட கேள்விகள் உலகத்துக்கு நன்மை பயப்பவை; எதனால் ஆத்மா தெளிவடையுமோ, அத்தகைய ஒரு கேள்வியை— கிருஷ்ண பகவான் சம்பந்தமான ஒரு கேள்வியை— நீங்கள் கேட்டீர்கள்.

"பலனை எதிர்பாராமலும் இடையூறுகளால் அழிந்து போகாமலும் இறைவனிடம் செலுத்தும் பக்தியையே உயர்ந்த தர்மம் எனலாம்.

"பகவான் வாசுதேவரிடத்தில் பக்தி செலுத்தினால், அதன் பயனாய், வைராக்கியம் உண்டாகும்; நிஷ்காமியமான உண்மை ஞானமும் ஏற்படும்.

* இதே சூதர்தான், முன்பு மகா பாரத இதிகாசத்தை நைமிசாரண்யத்தில் சௌனகாதி முனிவர்களுக்குச் சொன்னவர்; இவரை ரோமஹர்ண புத்திரர் என்றும், உக்கிரசிரவஸ் என்றும் சொல்லுவார்கள்.

"இறைவனிடம் ஈடுபாட்டை உண்டாக்காத எந்த நற்செயலும், விழலுக்கு இரைத்த நீரேபோல் வீணாகி விடும்.

"வீடுபேற்றை அடைய உதவுவது அறம் செய்தல் என்றும், அறங்கள் செய்ய உதவியாய் இருப்பது பொருள் என்றும், பொருளின் பயன் இன்பம் என்றும், சிலர் கூறுகின்றனர்.

இதை முனிவர்கள் உண்மை என ஒப்புவது இல்லை.

"இன்பத்துக்குப் பயன் புலன் நுகர்ச்சி என்பது பொருந்தாது. உயிர் வாழ்வதற்கு எவ்வளவு தேவையோ, அந்த அளவுக்குத்தான், புலன் நுகர்ச்சியில் ஒருவன் ஈடுபடலாம். வாழ்க்கையின் முடிவாய பயன் தத்துவ விசாரமே யன்றி,—அதாவது ஞானமே யன்றி—புலன் நுகர்ச்சி அன்று.

"தத்துவ விசாரம் என்பது இறைவனை அறிதலே. இதையே அழிவில்லாத ஞானம் என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

"இரண்டற்ற நிலையில் விளங்கும் இந்தப் பரம் பொருளையே, பிரம்மம் என்றும், பரமாத்மா என்றும், பகவான் என்றும், வேதத்தை அறிந்தவர்கள் கூறுகின்றனர்.

"சிரத்தையுள்ள முனிவர்கள் ஞானத்தாலும் வைராக்கியத்தாலும் இறைவன்பால் பக்தி செலுத்தி, இறைவனைத் தம்முள்ளேயே காண்கின்றனர்.

"இறைவன்பால் இடையருது செலுத்தும் பக்தியினுல், தியானத்தினுல், அகந்தை என்னும் கட்டை அறுத்து எறியலாம்; எறிய முடியும்.

"ஆகையால் அந்தணர்களே! புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்வது பக்திக்கு அடிகோலும்; புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்ருல் மகான்களுக்குத் தொண்டு

செய்வதற்கு வாய்ப்பு ஏற்படும். அப்போது மகான்களின் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து ஒழுக, அவா உண்டாகும். இறைவனுடைய பெருமைகளை அறியவும், உணரவும், அவற்றைச் செவிமடுப்பதில் ஈடுபாடும் உண்டாகும். தம் கதைகளைக் கேட்பவர்களின் உள்ளத்தில் எப்பொழுதும் இருந்துகொண்டு அங்கு இருக்கும் மாசுகளைக் கிருஷ்ண பகவான் போக்கிவிடுகிறார். இறைவனுடைய பெருமைகளையும் புகழையும் இடைவிடாது செவிமடுப்பதனால் தீய சிந்தனைப் போக்குகளுக்கு மனதில் இடம் இல்லாமல் போகிறது. இதனால் இறைவனிடம் நிலையான பக்தி ஏற்படுகிறது. நிலையான பக்தியின் பயனாய், காமம், குரோதம், லோபம் முதலிய தீய குணங்கள் விலகிப் போகின்றன.

"இதனால் மனத்தில் தெளிவு ஏற்பட்டு இறைவனைப் பற்றிய அறிவு விகசிதம் அடைகிறது.

"இறைவன் ஒருவர்தான்; ஆயினும் உலகத்தைக் காக்கும் பொருட்டு, அரி, அயன், அரன் போன்ற வெவ்வேறு என்றும் பெயர்களை அவர் தரிக்கிறார்.

"வேதங்கள் வாசுதேவனைப் பற்றியே பேசுகின்றன. வாசுதேவனைக் குறித்தே வேள்விகள் நடைபெறுகின்றன. செயல்கள் அனைத்தும் வாசுதேவனையே அடைகின்றன. ஞானத்தின் இலட்சியமும் வாசுதேவன்தான்; தவத்தின் இலட்சியமும் வாசுதேவன்தான்; தர்மத்தின் இலட்சியமும் வாசுதேவன்தான்."

## பாகவத புராணம்

மேலும் தொடர்ந்து சூதர் சொன்னார் :

உலகம் முன்பு ஒரே நீர் மயமாய் இருந்தது. அந்த நீராழியில் படுத்து, பகவான் யோக நித்திரை செய்து கொண்டு இருந்தார்; அப்போது உலகத்தைப் படைக்க விரும்பி, பதினாறு கலைகளுள்ள புருஷ ரூபத்தை அவர் எடுத்துக்கொண்டார்.

இறைவன் எடுத்துக்கொண்ட அந்தப் புருஷ ரூபம் பரிசுத்தமானது; சாத்விகமானது; உயர்ந்தது.

அந்த ரூபம் ஆயிரம் பாதங்களும், ஆயிரம் தொடைகளும், ஆயிரம் தோள்களும், ஆயிரம் முகங்களும் அமைந்து, மணி மகுடங்களும் பீதாம்பரங்களும் தரித்து, வெகு அற்புதமாய் இருந்தது.

இந்த அற்புத உருவத்தை ஞானிகள் தங்கள் மனக் கண் மூலம் காண்கிறார்கள்.

அற்புதமான இந்த உருவத்துக்கு அநிருத்தன் என்று பெயர். பல வித அவதாரங்களுக்கும் இந்த உருவமே மூல காரணம் ஆகும். இந்தத் தேகத்தில் இருந்துதான் அனேக அவதாரங்கள் வெளிப்படுகின்றன. அந்த அந்த அவதாரத்தின் காரியம் முடிந்தவுடன், திரும்ப அதனிடத்திலேயே சென்று ஒடுங்குகின்றன.

இந்தப் புருஷ தேகத்தின் அம்சமாக, அவருடைய நாபியில் உண்டான தாமரைப் பூவிலிருந்து, பிரம்மா தோன்றினார். அவருடைய அம்சங்களாக, மரீசி முதலிய பிரஜாபதிகள் உண்டானார்கள்; பிரஜாபதிகளிலிருந்து தேவர், மானுடர், விலங்குகள், பறவைகள் இவற்றின் படைப்பு ஏற்படலாயிற்று.

நான்முகனுடைய சரீரத்தின் மூலம் இறைவன் சனத் குமாரராக அவதரித்தார். இதுதான் இறைவ

னுடைய முதலாவது அவதாரம். இப்படி இறைவன் பல சந்தர்ப்பங்களில் அவதரித்து இருக்கிறார். அந்த அவதாரங்கள் வருமாறு :

| | | |
|---|---|---|
| 1. | கௌமார | அவதாரம் |
| 2. | வராக | ,, |
| 3. | நாரத | ,, |
| 4. | நர நாராயண | ,, |
| 5. | கபில | ,, |
| 6. | தத்தாத்ரேய | ,, |
| 7. | யக்ஞ | ,, |
| 8. | ரிஷப | ,, |
| 9. | பிருது | ,, |
| 10. | மச்ச | ,, |
| 11. | கூர்ம | ,, |
| 12. | தன்வந்தரி | ,, |
| 13. | மோஹினி | ,, |
| 14. | நரசிம்ம | ,, |
| 15. | வாமன | ,, |
| 16. | பரசுராம | ,, |
| 17. | வேத வியாச | ,, |
| 18. | ராம | ,, |
| 19. | பலராம | ,, |
| 20. | கிருஷ்ண | ,, |
| 21. | புத்த | ,, |
| *22. | கல்கி | ,, |

* இந்த அவதார எண்ணிக்கையைச் சிலர் இருபத்து நான்காகவும், சிலர் இருபத்து ஒன்றாகவும்

இந்த அவதாரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முக்கிய காரியத்தை நிறைவேற்ற எடுத்த அவதாரம் ஆகும். வற்றாத பெரிய ஏரியிலிருந்து வாய்க்கால்கள் பல பெருகி வருவதுபோல, இறைவனுடைய அநிருத்த மான அந்தத் தேகத்திலிருந்து அனேக அவதாரங்கள் உண்டாகின்றன.

முனிவர்கள், தேவர்கள், ரிஷிகள், மனு புத்திரர்கள், பிரஜாபதிகள் அனைவரும் திருமாலின் அம்சங்களே ஆவர். அதாவது இறைவனுடைய அம்சத்தின் ஓர் அம் சத்தினின்று உண்டானவர்கள் ஆவர். ஆதலால் இவர் களும் திருமாலின் அம்சங்களே ஆவர்.

அசுரர் முதலியவர்களால் உலகுக்குத் தீமை நேரும் பொழுது, அந்தத் தீமையை அகற்றும் பொருட்டு இறை வன் இப்படி அவதரிக்கிறார்.

இப்படி ஏற்பட்ட அவதாரங்களில் கிருஷ்ண அவ தாரம் பரிபூரண அவதாரமாகும்.

இதைத் தெரிந்துகொண்டு, யார் பகவான் கிருஷ்ண னிடம் இடைவிடாது பக்தி செலுத்துகிறார்களோ, அவர் களே பாக்கியசாலிகள்; அவர்களுக்குப் பிறப்பு இறப்பு முதலியன நேரா.

உத்தம ஸ்லோகனான கிருஷ்ண பகவானுடைய சரிதத்தை, **பாகவத புராணம்** என்னும் பெயரில் வியாச மகரிஷி இயற்றி அருளி இருக்கிறார்.

இந்தப் புராணம் வேதங்களை நிகர்த்தது.

உலகத்துக்கு நன்மை செய்யக் கருதி, மேன்மையும் சிறப்பும் வாய்ந்த இந்தப் பாகவத புராணத்தை, தம் புதல்வர் சுகருக்கு, வியாச மகரிஷி உபதேசம் செய்தார்.

வேதங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றின் சார மான இந்தப் பாகவத புராணத்தை, ரிஷிகள் சூழ, கங்

கைக் கரையில் பிராயோபவேசம்* செய்து படுத்து இருந்த பரீட்சித்து மன்னருக்கு, சுகர் உபதேசித்தார்.

பரீட்சித்து மன்னருக்குச் சுகர் பாகவத புராணத்தைச் சொன்ன சமயம், நானும் அங்கு இருந்தேன். சுகருடைய அனுக்கிரகத்தால், பாகவத புராணத்தைச் செவிமடுக்கும் பேறு எனக்குக் கிடைத்தது.

அந்தண சீலர்களே! அந்தப் பாகவத புராணத்தைச் செவிமடுக்க வேண்டும் என்ற விருப்பம் உங்களுக்கு இருக்கிறது.

சுக முனிவரிடம் கேட்ட பிரகாரம், பாகவத புராணத்தை உங்களுக்கு நான் சொல்லுகிறேன்.

பகவான் கிருஷ்ணன் இவ்வுலகத்தை விட்டுப் பரம பதம் சென்ற பிறகு, கலி யுகத்தின் இருளில் மூழ்கித் திக்குத் திசை தெரியாமல் தவிக்கும் மானுடர்களுக்கு, இந்தப் பாகவத புராணம் இருளைப் போக்கி, வழிகாட்டும் சூரியனாக விளங்கி வருகிறது.

## வியாசரின் மனக் கவலை

நைமிசாரண்யத்தில் சத்ர யாகத்தைச் செய்து கொண்டிருந்த முனிவர்களில், சௌனகர் என்பவர் முதன்மை பெற்றவர்; வயது முதிர்ந்தவர்; ரிக் வேதத்தை ஓதியவர்.

அவர் சூதரைப் பாராட்டினார்; பிறகு, பின்வரும் கேள்விகளை அவரிடம் சௌனகர் கேட்டார் :

---

**பிராயோபவேசம்** : உயிர் போகும்வரை, ஆகாரம் உண்பதில்லை என்ற உறுதியுடன், குறிப்பிட்ட ஓர் இடத்தில் இருப்பது.

"சூதரே! திறமையாகப் பேசத் தெரிந்தவரே! பரீட்சித்து மன்னருக்கு, சுக மகரிஷி சொன்ன பாகவதத்தை நாங்களும் கேட்கப் பிரியப்படுகிறோம். அதை எங்களுக்குத் தாங்கள் சொல்ல வேண்டும்.

"இந்தக் கதை எந்த யுகத்தில் நடந்தது? எந்த இடத்தில் நடந்தது? யாருடைய தூண்டுதலால் வியாச மகரிஷி பாகவத சம்ஹிதையைச் * செய்தார்.

"வியாச மகரிஷியின் புதல்வரான சுகரோ மகா யோகி; பேதபுத்தி இல்லாதவர்; எல்லா உயிரினும் இறைவன் இருக்கிறான் என்னும் பெருநோக்கு உடையவர்; இறைவனிடம் இடையறாத அன்பு பூண்டவர்; மாயையின் வசப்படாமல் விழிப்புடன் இருப்பவர்; தமது மகிமைகளை வெளிப்படுத்தாமல் அடக்கத்துடன் வாழ்பவர். பார்வைக்கு மூடனைப்போலத் தோற்றம் அளிப்பவர். ஒரு முறை ஆடையின்றி, சுகர் நிர்வாணமாய்ச் சென்றார் என்றும், அவரைத் தொடர்ந்து அவருடைய தந்தை வியாச மகரிஷி ஆடை யுடுத்துக்கொண்டு சென்றார் என்றும், அப்போது ஒரு குளக்கரையில் தேவமாதர்கள் சிலர் நீராடிக்கொண் டிருந்தனர் என்றும், சுகர் சென்றபோது நாணப்படாமல் அந்தப் பெண்கள் நீராடினர் என்றும், வியாச மகரிஷியைக் கண்டதும் நாணமுற்று, அந்தத் தேவ மாதர்கள் தத்தம் ஆடைகளை எடுத்து உடனே உடுத்துக்கொண்டனர் என்றும் கேள்விப்படுகிறோம்.

இதைக் கண்டு ஆச்சரியமடைந்த வியாச முனிவர் அந்தத் தேவ மடந்தையரை நோக்கி, "என்னைக் கண்டதும் நாணமுற்று ஆடையை எடுத்து நீங்கள் அணிந்து

* சம்ஹிதை : வேதத்துக்கு நிகரான கிரந்தம்.

கொண்டீர்கள். வாலிப தசையிலும் நிர்வாணக் கோலத்திலும் இருக்கும் என் புதல்வனைக் கண்டபோது நீங்கள் நாணப்பட வில்லையே? காரணம் என்ன?'' என்று வினவினார்.

அதற்கு அந்த அப்ரசுகள், ''ஆண் பெண் என்ற பேத புத்தி உமக்கு இருக்கிறது. சம திருஷ்டியுள்ள உம் புதல்வருக்கு அத்தகைய பேதபுத்தி கிடையாது'' என்று பதில் சொன்னார்களாம்.

''பித்தன்போலும் ஊமையன்போலும் மூடன் போலும் தோற்றமும் நடையும் கொண்ட சுகர் அஸ்தினாபுரத்துக்கு எவ்வாறு வந்தார்? தம் நகருக்கு வந்த சுகரை மகா ஞானி என்று அந்த நகர மக்கள் எப்படித் தெரிந்து கொண்டார்கள்?

''பாண்டவர்களின் வமிசத்தில் பிறந்த பரீட்சித்து மன்னருக்கும் மகா யோகியான சுகருக்கும் இடையில், சம்வாதம் எப்படி உண்டாயிற்று? சகல பற்றுகளையும் விட்டொழித்த மகா யோகியான சுகர் இல்லறத்தாரின் வீடுகளுக்குச் சென்றால், அவற்றைப் பாவனமாக்கும் எண்ணத்துடன் சிறிது நேரம் மட்டும்தானே தங்கி இருப்பார். அதுவும் பசுவில் பால் கறக்க எவ்வளவு நேரம் பிடிக்குமோ, அவ்வளவு நேரத்துக்கு அதிகமாகத் தங்குவது அவருடைய வழக்கம் இல்லையே! அப்படிப் பட்ட சுகர் நீண்ட காலம் ஓர் இடத்தில் நிலைத்துத் தங்கி, இந்தப் பாகவத புராணத்தை, பரீட்சித்து மன்னருக்கு எவ்வாறு சொன்னார்?

''மகா பாக்கியசாலியான பரீட்சித்து மன்னர் என்ன காரணத்துக்காகக் கங்கைக் கரையில் உபவாசம் இருந்து உயிரைவிடத் தீர்மானித்தார்? அரச போகத்தையும் அதிகாரத்தையும் விட்டுவிட யாருக்கும் மனம் வராதே! வற்றாத செல்வத்தையும் அரச போகத்தையும் எதற்காக

அந்த வாலிப அரசர் விடத் துணிந்தார்? பரோபகாரம் செய்வதற்கு அவசியம் தேவைப்படுவதான உத்தம தேகத்தை எதற்காக அந்த அரசர் துறக்க நிச்சயித்தார்?" என்று கேட்டார்.

சௌனக முனிவர் இவ்வாறு கேட்டதும், அடியில் வருமாறு சூதர் பதில் சொன்னார்:

"மூன்றாவது யுகமான துவாபர யுகம் முடியப் போகும் தருணத்தில், சத்தியவதி வயிற்றில், பராசர முனிவருக்கு வியாசர் பிறந்தார். அவர் திருமாலின் அம்சம்.

ஒரு நாள், அதி காலையில், வியாச முனிவர் நீராடி விட்டு, பரிசுத்தராக, சரஸ்வதி நதிக்கரையில் தனியாக உட்கார்ந்து இருந்தார். அப்போது அவர் மனம், சென்ற காலத்தையும் எதிர் காலத்தையும்பற்றி ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கிற்று.

காலம் வேகமாகக் கழிவதனால் யுக தர்மங்கள் கலந்து போகின்றன; பஞ்ச பூதங்களும் ஆற்றல் குறைந்து இயங்குகின்றன. நல்ல மனப்பாங்கு இன்றியும், முயற்சி இன்றியும், பலம் குறைந்தும் ஆயுள் குறைந்தும், மக்கள் காலத்தைக் கழிக்கின்றனர். நேரிய வழியில் செல்லத் தெரியாது புத்தி தடுமாறுகிறது. ஆகவே, நான்கு வகை வருணத்தைச் சேர்ந்தவர்களுக்கும், நான்கு நிலையிலுள்ள ஆசிரமவாசிகளுக்கும் நன்மை பயக்கத்தக்க ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என்று நினைத்தார்.

மனத் தெளிவடைந்து மக்கள் காரியத்தில் ஈடுபடும் பொருட்டு ஒன்றாய் இருந்த வேதத்தை நான்காகப் பிரித்தார். அதன் பின்னர், ஐந்தாவது வேதம் எனப்படும் இதிகாச புராணங்களைச் செய்தார்.

மக்களுக்கு நன்மை செய்வதில் நாட்டமுடைய வியாச முனிவர் இவ்வாறு நன்மையான பல காரியங்

களைச் செய்தும் அவர் மனதில் மகிழ்ச்சி ஏற்படவில்லை; அமைதியும் ஏற்படவில்லை. "நான் வேதங்களை ஓதி இருக்கிறேன்; தவம் செய்து இருக்கிறேன்; ஆசாரியரை மதித்து, அவருடைய கட்டளைப்படி தவறாமல் நடந்து இருக்கிறேன்; ஆடவரும் பெண்டிரும், பண்டிதரும் பாமர ரும், தர்மத்தை அறிந்து அதன்படி நடக்கத்தக்க காரியங் களைச் செய்து இருக்கிறேன். அப்படி இருந்தும் எனக்கு மனத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் ஏற்படவில்லையே! காரணம் என்ன? இறைவனுடைய அடியார்களுக்குப் பிரியமாய் இருக்கும், பக்தி மார்க்கத்தை நான் விவரித் துக் கூறாததுதான் காரணமாய் இருக்குமோ? கிருஷ்ண பரமாத்மாவுக்குத் திருப்தி அளிக்கும் அந்தக் காரியத் தைச் செய்யாதபடியால்தான் என் மனதில் ஆனந்தம் நிலவவில்லையோ?" என்று நினைத்தார்.

சிந்தனையில் ஆழ்ந்து, இவ்வாறு கவலையுடன் வியாச மகரிஷி, சரஸ்வதி ஆற்றங்கரையில் * இருந்த சமயம், வியாசருடைய ஆசிரமத்துக்கு, நாரத முனிவர் வந்தார்.

அவரைக் கண்டதும் வியாச முனிவர் எழுந்து, நாரத முனிவரை வரவேற்று, முறைப்படி பூசித்தார்.

## நாரதரும் வியாசரும்

நாரத முனிவரை முறைப்படி வரவேற்று ஆசனத் தில் அமரச் செய்த பின்னர், வியாச மகரிஷி தாமும் அவருக்குப் பக்கத்திலே அமர்ந்தார்.

அப்போது நாரத முனிவர், தமது முகத்திலே புன்னகை அரும்ப, அவரை நோக்கி, "பராசர முனிவ ரின் புதல்வரே! உமது சரீரத்தில் இருக்கும் ஆத்மா திருப்தியுடன் இருக்கிறதா? மனது மகிழ்ச்சியுடன்

இருக்கிறதா? சகல தர்மங்களும் அடங்கிய மகா பாரத இதிகாசத்தை இயற்றியவர் ஆயிற்றே நீர்? ஆகையால் உமக்கு அனைத்தும் தெரியும். பரமாத்மாவின் சொரூபத்தையும் அறிந்தவர் அல்லவா நீர்? அப்படி இருந்தும், ஒன்றும் அறியாதவர்போல, தமது விருப்பம் நிறைவேறாதவர்போல, நீர் வாட்டமுற்று இருக்கிறீரே ஏன்?" என்று கேட்டார்.

இப்படி நாரத முனிவர் கேட்டதும், வியாச முனிவர் அவரை நோக்கி, "முனிவர் பிரானே! தாங்கள் சொன்னது அனைத்தும் உண்மை; எனது ஆத்மா திருப்தி அடையாமல்தான் இருந்து வருகிறது. அதன் காரணத்தை என்னால் அறிய முடியவில்லை. தாங்கள் பிரம்மதேவருடைய புதல்வர்; உலகத்தைப் படைத்து, காத்து, அழிக்கும் தன்மைபெற்ற இறைவனைப்பற்றிய உண்மைகளை அறிந்தவர்; மறைமுக உண்மைகளையும் தெரிந்துகொண்டிருப்பவர்; மூன்று உலகங்களிலும் சஞ்சரிக்கும் இயல்புள்ளவர்; ஆனது பற்றியே பிரம்மாவின் புதல்வராகிய உம்மை நான் கேட்கிறேன். முறைப்படி வேதங்களை நான் ஓதியிருக்கிறேன்; வேதங்கள் கூறும் பொருளை அறிந்து, அவை கூறும் முறைப்படி வாழ்க்கை நடத்தி இருக்கிறேன்; நோன்பு நோற்றும், தவங்கள் இயற்றியும் இறைவனுடைய தன்மைகளைத் தெரிந்துகொண்டிருக்கிறேன். இப்படி நற்செயல்கள் பலவற்றை நான் செய்து இருந்தும், எனது மனம் நிறைவுபெறாமல் இருக்கக் காரணம் என்ன?" என்று வினவினார்.

அதற்கு நாரத முனிவர், "பரிசுத்தமான இறைவனுடைய குணங்களை இதுவரை எடுத்து உரைக்காமல் நீர் இருந்துவிட்டீர். இறைவனுடைய புகழை உரைக்காமல், அறங்களை மட்டுமே போதிப்பதால் பயன் மகா பாரதம் போன்ற நூல்களில் இடை

யினடயே இறைவனுடைய பெருமைகளையும் மகிமைகளையும் நீர் கூறி இருந்தபோதிலும், அறங்களையும் அவற்றின் சாதனங்களையும் பற்றியுமே நீர் அதிகம் விவரித்து இருக்கிறீர். அதனால் இறைவனின் பெருமைக்கும் புகழுக்கும் முக்கியத்துவம் கொடுக்க நீர் தவறி விட்டீர். மற்ற விஷயங்களை எல்லாம் எவ்வளவுதான் அழகுபட எடுத்துச் சொல்லி இருப்பினும், இறைவனுடைய கல்யாண குணங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதப் பெறாத எந்த நூலையும், சான்றோர்கள் மதிப்பதும் இல்லை; அத்தகைய நூலை, செவி கொடுத்து அவர்கள் கேட்பதும் இல்லை. எச்சில் தொட்டியில் கிடக்கும் சித்ரான்னம் முதலியவற்றை, காக்கை போன்ற பறவைகள் விரும்பிச் சாப்பிடுமே யன்றி, மானசரஸ் என்னும் பொய்கையில், தாமரை மலர்களுக்கு இடையில் நீந்தி விளையாடும் அன்னப் பறவைகள் ஒரு போதும் அவற்றை விரும்ப மாட்டா. அதேபோல, பக்தர்களும், இறைவனுடைய திருவடிகளைப் பற்றிக் கூறும் நூல்களை மட்டும்தான் படிக்க ஆசைப்படுவார்களே யன்றி, அடுக்குச் சொற்களும் அலங்காரச் சொற்களும் நிரம்பிய மற்ற நூல்களைப் படிப்பதில் அவர்கள் நாட்டம் செலுத்த மாட்டார்கள். வாக்கியங்களின் அமைப்பில் தவறுகள் இருந்தபோதிலும், இறைவனுடைய புகழைப் பாடும் நூலாக இருந்துவிட்டால், அதைப் பக்திமான்கள் விரும்பிப் படிப்பார்கள்; மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்வார்கள்; அத்தகைய நூலைப் பிறர் படித்தாலும் செவிமடுத்துக் கேட்பார்கள் விருப்பு வெறுப்பு என்னும் நிலைகளைக் கடந்து, ஆத்ம ஞானம் அடையப் பெறினும், இறைவனிடம் பக்தி செலுத்தாத ஞானம் சோபிப்பது இல்லை. அதே போல, துக்கத்

துக்கே காரணமாய் இருக்கும் காமிய கருமம் இருக்கிறதே, அதுவும், இறைவனுக்கு அர்ப்பணம் என்று பக்தியுடன் செய்யப்படாதவரை, பெருமையைக் கொடுப்பது இல்லை. இதைப் போலவே, நிஷ்காமிய கருமங்களும்—பலனை விரும்பாது செய்யும் கருமங்களும்—இறைவனுடைய பக்திக்குப் புறம்பானவையாய் இருப்பின், அவையும் சோபிப்பது இல்லை. வியாச மகரிஷியே! நீர் உண்மையான அறிவை உடையவர்; மெய்யான கீர்த்தியை உடையவர்; சத்தியத்திலேயே நாட்டமுடையவர்; விரத நியமத்தோடு நடப்பவர்; உயிரினங்கள் நன்மையடைய வேண்டும் என்பதில் அக்கறையுள்ளவர்; ஆகையால் பந்தத்திலிருந்து விடுபட்டு உயிரினங்கள் கடைத்தேறுவதற்காக, இறைவனுடைய மாசில்லாத புகழை, மக்கள் அறியும்படி நீர் எடுத்துக் கூறும். இறைவனுடைய புகழை எடுத்துக் கூறுவதில் நாட்டம் கொள்ளாது, மற்றவற்றில் நாட்டத்தைச் செலுத்துகின்ற மனிதன், நாமங்கள் ரூபங்கள் என்னும் வலைகளில் சிக்குண்டு தவிப்பான். பெரும் புயலில் சிக்குண்டு கடலில் தத்தளிக்கும் கப்பலைப்போல, அவன் மனமும் ஒரு நிலையில் நிலைத்து நில்லாது தத்தளிக்கும். இயல்பாகவே, மனிதன் பற்றுதலுள்ளவன்; ஆகவே, எந்தக் காரியத்தையும் பற்றுதல் இன்றி மனிதனால் செய்ய முடியாது. காமிய கருமங்களை—அதாவது பற்றுதலுடன் செய்யப்படும் கருமங்களை—நீர் தர்மங்கள் என்றே விவரித்து இருக்கிறீர். அதனால் பண்பற்ற மக்களும் அவற்றைத் தர்மங்கள் என்று கருதிக் கடைப்பிடிக்கின்றனர். ஆனால் சான்றோர்கள் காமிய கருமங்களைத் தர்மங்கள் என்று ஒப்புவது இல்லை. இருப்பினும், பாமர ஜனங்கள், நீர் போதனை செய்துள்ளபடி, காமிய கருமங்களைத் தர்மங்கள் என்று கருதி, நெறி தவறிச் சென்று, சான்றோர்கள் எடுத்துக் கூறும் நிஷ்காமிய கருமத்தை—அதாவது

பற்றுதல் இன்றிச் செய்யும் கருமத்தை—ஏற்க மறுக்கின்றனர். நீர் செய்த மா பெரும் தவறு இது; உலகத்தின் பந்த பாசங்களை விட்டுவிட்ட ஞானிகளால் மட்டுமே, கால, தேச, வர்த்தமானங்களைக் கடந்த இறைவனுடைய பெருமையையும் மகிமையையும், அறிய முடியும். பந்த பாசங்களால் கட்டுண்டு அவதிப்படும் பாமர ஜனங்களால் இறைவனுடைய பெருமையை ஒருபோதும் அறிய முடியாது. ஆகையால், காமிய கருமத்தில் நாட்டமுள்ள மக்களும், தேக நலத்தில் விருப்பமுள்ள மக்களும் நலன் அடையும் பொருட்டு. நீர் இறைவனுடைய திருவிளையாடல்களை—அதாவது பகவானுடைய லீலைகளை விவரித்துச் சொல்லும்.

"இறைவனுடைய திருவடித் தாமரைகளில் ஒருவனுக்குப் பக்தி ஏற்பட்டுவிடுமாயின், அவற்றின் இனிமையை நுகர்ந்த அவனுக்கு ஒருபோதும் அவற்றை மறக்க முடியாது. ஆகையால் இறைவனுடைய பெருமைகளையும் மகிமைகளையும் மற்றவர்களுக்கு நீர் எடுத்துக் கூறும். அனைத்தையும் அறிந்தவர் நீர். உலகத்துக்கு நன்மை செய்யும் பொருட்டுத்தான், நீர் மானுட தேகத்தை எடுத்துக்கொண்டு இருக்கிறீர். எனவே, இறைவனுடைய மகிமைகள் அனைத்தையும் விரிவாக நீர் எடுத்துக் கூறும். இறைவனுடைய மகிமைகளை எடுத்துக் கூறினல், என்ன என்ன பலன்கள் உண்டு என்பதற்கு நானே ஒரு எடுத்துக்காட்டாக இருக்கிறேன். ஆகையால் எனது வரலாற்றை உமக்கு நான் கூறுகிறேன் கேளும்" என்று பதில் சொன்னர்.

## நாரதரின் முற்பிறப்பு

"வியாச முனிவரே! முந்தின கல்பத்தில் ஒரு சூத்திரப் பெண்ணுக்கு நான் மகவாய்ப் பிறந்தேன். மறைகள் ஓதும் துறவியர் சிலருக்குப் பணிவிடைகள் புரிந்து என் அன்னை வயிறு வளர்த்து வந்தாள்.

"அப்போது மாரிக் காலத்தில் சில துறவியர்கள் அங்கே வந்து நான்கு மாதங்கள்வரை தங்கினார்கள். இந்தத் துறவியர்களுக்கு விருப்புடன் நான் பணிவிடைகள் புரிந்தேன். சிறு பையனாய் இருந்தும்கூட, விளையாட்டுப் புத்திகளில் கவனம் செலுத்தாமல், அடக்க ஒடுக்கத்தோடு, அவர்களுக்கு நான் பணிவிடைகள் செய்தேன். அதிகம் பேசாமல் அடங்கி நடந்தேன். இதனால் அந்தத் துறவிகள் என்பால் அன்பாக நடந்து கொண்டார்கள். ஒரு நாள், அவர்கள் சாப்பிட்ட பின்னர், மீதம் இருந்த உணவை, அவர்களின் அனுமதி பெற்று நான் சாப்பிட்டேன். அதனால் சகல பாவங்களும் அகன்று நான் பரிசுத்தன் ஆனேன். இப்படி அவர்களுக்கு நான் பணிவிடை புரிந்ததன் பயனாய், மனம் பரிசுத்தமாகி, பக்தி மார்க்கத்தில் ஈடுபாடு ஏற்பட்டு, இறைவன்பால் மனப்பூர்வமாக நான் பக்தி செலுத்தலானேன். கிருஷ்ணன் செய்த லீலைகள் சம்பந்தமான கதைகளை அவர்கள் பாடுவார்கள். அந்தக் கதைகளைக் கேட்டுக் கேட்டு, எனக்குப் பக்தி அதிகரிக்கலாயிற்று; அதோடன்றி, எனது உள்ளத்தில் பக்தி நிலை பெறவும் தொடங்கிற்று. அதன் பயனாய், பரப்பிரம்மம் என்பது என்ன? பிரபஞ்சம் என்பது என்ன? நான் என்பது என்ன? இவற்றைப்பற்றிய உண்மைகளை நான் தெரிந்துகொண்டேன். மழைக் காலத்திலும் இலையுதிர் காலத்திலும் அந்தத் துறவியவர்கள் சொன்ன திருமாலின் பெருமைகளை அடிக்கடி நான் செவிமடுத்தேன். அதனால்

இறைவனிடம் எனக்குப் பக்தி ஏற்பட்டதுடன், அறியாமையும் ஆசையும் என்னைவிட்டு அகன்றன. எளியோர்பால் இரக்கமுள்ள அந்தத் துறவிகள், தாங்கள் யாத்திரை கிளம்புவதற்கு முன்னர், மிகவும் இரகசியமான பிரம்ம வித்தையை எனக்கு உபதேசித்துச் சென்றார்கள். இறைவனுடைய மகிமைகளையும் அவருடைய திருவடிகளை அடைவதற்குரிய வழிகளையும் நான் தெரிந்துகொண்டேன். விரதங்களைக் கடைப்பிடிப்பதில் சிறந்த முனிவரே! ஒரு மருந்துச் சரக்கு, நோய்க்குக் காரணமாய் இருப்பினும், அதே சரக்கு மற்ற சரக்குகளின் சேர்க்கையால் நோயைக் குணப்படுத்திவிடுவதை நாம் காண்கிறோம். அதேபோல, சம்சார பந்தத்தில் ஈடுபட்டு, காமிய கருமங்களைச் செய்தபோதிலும், அவற்றை இறைவனுக்கு என்றே அர்ப்பணித்துச் செய்தால், பந்தங்களின் கட்டை அவை அறுத்துவிடுகின்றன என்னும் உண்மையை, அந்தத் துறவியர்கள் எனக்கு உபதேசித்துவிட்டுச் சென்றனர். பக்தியுடன் கூடிய கருமம் ஞானத்தை உண்டாக்கும்'' என்று சொன்னார்.

நாரதர் இவ்வாறு சொல்லி முடித்ததும், வியாச முனிவர் அவரை நோக்கி, ''முனிவர் பிரானே! உமக்கு உபதேசம் செய்த துறவிகள் புறப்பட்டுச் சென்ற பிறகு, சிறு பிராயமுள்ள நீர் என்ன செய்தீர்? உமது எஞ்சிய வாழ்க்கையை எவ்வாறு நீர் கழித்தீர்? மரணம் நெருங்கியபோது, உமது தேகத்தை நீர் எவ்வாறு விட்டீர்? ஒரு சரீரத்தை விட்டு, மற்றொரு சரீரத்தில் புகும்போது, ஜீவனுக்கு முந்திய ஜன்மத்தின் விளைவுகள் நினைவில் இருப்பது இல்லையே! அப்படி இருக்கும்போது, உமது முற்பிறவி பற்றிய விஷயங்கள் உமக்கு எப்படி நினைவுக்கு வருகின்றன?'' என்று கேட்டார்.

அதற்கு நாரத மகரிஷி, "வியாச முனிவரே! ஞான உபதேசம் செய்துவிட்டுத் துறவியர்கள் போன பின்பு, சிறுபிள்ளையாய் இருந்த நான், என் அன்னையுடன் வசித்து வந்தேன். என் தாயாருக்கு நான் ஒரே பிள்ளை; வயது எனக்கு ஐந்துதான் இருக்கும். அதனால் என் அன்னை என்னை மிகுந்த பிரியத்துடன் வளர்த்தாள். ஒன்றும் அறியாதவளாயும் வேலைக்காரியாயும் இருந்த அவளுக்கு, விருப்பம் இருந்தும் என்னைக் கருத்துடன் வளர்க்கப் போதிய சாமர்த்தியம் இல்லை. ஆட்டுபவன் விருப்பத்துக்கு இயைய மரப் பொம்மை ஆடுவது போல், இந்த உலகம் இறைவனின் திருவுளத்துக்கு இயைய நடைபெறுகிறது. காலம், திக்குகள், தேசங்கள் இவற்றைப்பற்றி ஒன்றும் அறியாமல் சிறுபிள்ளையாக இருந்த நான், என் அன்னையின் அன்புக்கு வயப்பட்டு, அந்த அந்தணருடைய வீட்டிலேயே வசித்து வந்தேன்.

"ஒரு நாள் இரவு, பால் கறப்பதற்காக என் அன்னை வெளியே போனாள். அப்போது காலனால் ஏவப்பட்டு, ஒரு பாம்பை அவள் காலால் மிதித்துவிட்டாள். மிதியுண்ட பாம்பு கடிக்கவே என் அன்னை இறந்து போனாள்.

'தம் அடியார்களுக்கு நல்லருள் பாலிக்கும் இறைவனுடைய கருணை என்று இதை எண்ணிக்கொண்டு, வடக்குத் திக்கை நோக்கி நான் கிளம்பினேன். அந்தத் திக்கில் இருக்கும் விசாலமான நாடுகளையும் ஊர்களையும் கிராமங்களையும் இடைச்சேரிகளையும் தங்கச் சுரங்கங்களையும் கடந்து சென்றேன். பாக்கு மரத் தோப்புகளையும், பயிர்விளையும் நிலங்களையும், மலையடிவாரங்களையும், தெளிந்த நீருள்ள குளங்களையும், பார்த்துக் கொண்டு சென்றேன். தாமாகவே மரங்கள் முளைத்து இருக்கும் காடுகளையும், மனிதர்களால் விருத்தி செய்

யப்பட்ட மரங்களுள்ள தோப்புகளையும், யானைகளால் முறிக்கப்பட்ட கிளைகளுள்ள மரங்களையும், தேவர்கள் நீராடும் தாமரை ஓடைகளையும், அங்கே வாசம் செய்கின்ற இனிய குரலுள்ள பறவைகளையும், தேனீக்கள் மொய்க்கும் தாமரைத் தடாகங்களையும், பார்த்துக் கொண்டு, தனி ஒருவனாக நடந்து, பயங்கரமான ஒரு காட்டை அடைந்தேன்.

"அங்கே நாணல்களும் கோரைகளும் மூங்கில்களும் தர்ப்பைகளும் அடர்த்தியாக முளைத்திருந்தன. அதனால் பாம்புகளும் கோட்டான்களும் நரிகளும் அங்கு வாசம் செய்தன.

"இப்படி வெகு தூரம் நடந்து வந்தபடியால் களைப்புற்று நான் சோர்ந்து போனேன். பசியாலும் தாகத்தாலும் நலிந்து பலம் குன்றிப் போனேன். ஆகவே, ஓர் ஆற்றின் மடுவில் இறங்கி, நீராடி, ஆசமனம் செய்து நீர் பருகி, எனக்கு இருந்த களைப்பை நான் போக்கிக்கொண்டேன்.

"பிறகு ஜனசஞ்சாரமற்ற அந்தக் காட்டில் ஒரு அரச மரத்தின் அடியில் உட்கார்ந்து, பெரியோர்கள் எனக்கு உபதேசித்த முறைப்படி, இறைவனை நான் தியானம் செய்தேன். அப்போது மெல்ல மெல்ல, கிருஷ்ண பகவானுடைய திருவுருவம் என் மனக்கண் முன்னே தோன்றலாயிற்று. அவருடைய திருவடித் தாமரையில் ஈடுபட்டு, எனது கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தன. அன்பின் பெருக்கால் எனது உடல் முழுதும் புளகாங்கிதம் அடைந்து, புல்லரித்துப் போயிற்று இந்த ஆனந்தப் பெருக்கில் திளைத்துத் திளைத்து, என்னையும் நான் மறந்தேன். நான் பார்க்கும் இறைவனையும் மறந்தேன். மீண்டும் அழகு ஒழுகும் அந்தத் திவ்விய வடிவத்தைப் பார்க்க ஆசை கொண்டு, அகக் கண்ணால் நோக்கினேன். அந்தத் திரு

வுருவத்தை மீண்டும் என்னால் காண முடியவில்லை. அதனால் விருப்பம் நிறைவேறாமல் கவலையுற்று, சமாதி நிலை கலைந்து, நான் விழித்துக்கொண்டேன்.

"காட்டில் தனியாக இருந்து, இப்படி நான் கவலைப் பட்டுக்கொண்டிருந்தபோது, வார்த்தைகளுக்கு எட்டாத நிலையில் இருக்கும் பகவான் எனது மனக் கவலையை அகற்ற விரும்புபவர் போல, கருத்துக்கள் நிறைந்த பின்வரும் சொற்களை மெதுவாகச் சொல்லத் தொடங்கினார் :

"குழந்தாய்! கருமம் முதலிய பற்றுகளை விடாதவர்களும், யோகத்தில் பக்குவ நிலையை அடையாதவர்களும், என்னைக் காண்பது அரிது. இந்தப் பிறவியில் என்னை முழுதும் காண்பதற்கு நீ இன்னும் தகுதி பெறவில்லை. ஒரு முறை என் வடிவத்தைக் காண நேர்ந்தவனுக்கு, மறு முறையும் என் வடிவத்தைக் காண வேண்டும் என்ற ஆவல் ஏற்படும். அதன் பொருட்டாகத்தான் எனது உருவத்தை ஒரு முறை நீ காண நேர்ந்தது. என்னிடத்தில் பற்றுதல் வைத்தவனுக்கு, மற்ற எதிலும் பற்றுதல் ஏற்படாது போகும். சிறிது காலம் மட்டுமே துறவியர்களுக்குப் பணிவிடை புரியும் வாய்ப்பு ஏற்பட்ட போதிலும், அதன் பயனாய், என்பால் உனக்கு நிலைத்த பக்தி ஏற்பட்டு இருக்கிறது. இப்பொழுது இந்தச் சடலத்தைவிட்டு நீங்கிய பின், எனது பக்தன் ஆகும் தகுதி உனக்கு ஏற்பட்டுவிடும். என்பால் உனக்கு ஏற்பட்டிருக்கும் உறுதியான பக்தி, இனி எப்பொழுதும் உன்னைவிட்டு அகலாது; பிரளய காலத்தில் படைப்புகள் அனைத்தும் அழிந்து போயினும்கூட, என்பால் ஏற்பட்டு இருக்கும் பக்திக்கு அழிவே ஏற்படாது" என்று அருள் சுரந்தார்.

"இப்படி எனக்கு அருள் சுரந்த இறைவனுக்கு நான் மனப்பூர்வமாக அஞ்சலி செலுத்தினேன்.

"இதன் பின்னர் வெட்கத்தை விட்டொழித்து, இறைவனுடைய திருப் பெயர்களை எல்லாம் இடைவிடாது நான் சொல்லி வந்தேன். ஆசை முதலியவற்றை ஒழித்தும், அகந்தை ஆணவம் முதலியவற்றை விலக்கியும், நான் திருப்தியோடு இந்தப் பூமியில் சஞ்சரித்தேன். கிருஷ்ண பகவானிடம் மனத்தைச் செலுத்தி, வேறு எதிலும் பற்றுதல் இல்லாமல், எனது அந்திம காலத்தை எதிர்பார்த்து, தூய உள்ளத்தோடு நான் சுற்றித் திரிந்தேன்.

"இப்படி நான் திரிந்த சமயம், சுத்த ஆகாயத்தில் மின்னல் தோன்றுவது போல, திடீரென எனக்கு மரணம் சம்பவித்தது. எனது ஸ்தூல சரீரம் கீழே விழுந்தது; சூட்சும சரீரம், பாற்கடலில் பள்ளிகொள்ளும் பரந்தாமனை நாடிப் போயிற்று. அவரை அடைந்து, அரிதுயில் கொள்ளும் அவர் நாசி வழியாக, பிரம்மா உள்ளே புகுந்த சமயம், நானும் மூச்சுக் காற்றாக உள்ளே புகுந்து ஐக்கியமானேன்.

"ஆயிரம் சதுர் யுகங்கள் கொண்ட பிரம்ம தேவரின் இராத்திரி முடிந்த பின்னர், மறு தினம் காலையில், பிரம்ம தேவர் மீண்டும் படைப்புத் தொழிலில் ஈடுபட்டார். அப்போது பிரம்ம தேவருடைய புலன்களிலிருந்து, மரீசி முதலியவர்களும் நானும் உண்டானோம்.

"அன்று முதல், திருமாலின் அருளால் தங்கு தடையின்றி மூன்று உலகங்களிலும் நான் சஞ்சரித்து வருகிறேன். இது எனக்கு இறைவன் தந்த வீணை. அடிப்படையான ஏழு சுரங்கள் இந்த வீணையில் ஒலிக்கின்றன. இந்த ஒலிகள் நாத வடிவான பிரம்மம் ஆகும். இந்த வீணையில் நாராயணனைப் பாடிக்கொண்டே உலகம் முழுவதிலும் நான் சஞ்சரிக்கிறேன். பகவானுடைய திருவடிகளின் பெருமையை நான் பாடப் பாட, நான் விரும்பியதுபோல், இறைவனுடைய தரிசனம் எனக்கு

ஏற்பட்ட வண்ணம் இருக்கிறது. சம்சார சாகரத்தைக் கடப்பதற்கு, இறைவனுடைய திருவிளையாடல்களைப் பாடிப் பரவுவது, ஓடம்போல இருந்து உதவி புரியும்; யோக முறைகளால் மனம் பரிசுத்தமடைவதைக் காட்டிலும், இறைவனுடைய புகழைப் பாடுவதால் மனம் எளிதில் பரிசுத்தமடையும்.

"வியாச முனிவரே! நீர் விரும்பிக் கேட்டபடியால் தான், எனது முற்பிறப்பு முதலியவற்றையும், எனது ஆத்மீக முயற்சிகளையும், உமது ஆத்மா திருப்தியடைவதற்கு ஏற்ற வழிகளையும், உமக்கு நான் வித்தாரமாகச் சொன்னேன்" என்று கூறி முடித்தார் நாரத மகரிஷி.

இவ்வாறு கூறிவிட்டு, வியாச முனிவரிடம் விடை பெற்றுக்கொண்டும், தமது வீணையை மீட்டிப் பாடிக் கொண்டும், அங்கிருந்து நாரதர் புறப்பட்டுப் போய் விட்டார்.•

## தோற்றுவாய்

"இவ்வாறு தெரிவித்துவிட்டு, நாரத முனிவர் விடை பெற்றுச் சென்ற பின்பு, வியாச முனிவர் என்ன செய்தார்?" என்று சூதரிடம் சௌனக முனிவர் வினவினர்.

அதற்குச் சூதர், "சரஸ்வதி ஆற்றின் மேற்குக் கரையில் சம்யாப்பிராசம் என்று ஒரு ஆசிரமம் உண்டு. இந்த ஆசிரமத்தில் மகரிஷிகள் வேள்விகள் இயற்றுவது உண்டு. சுற்றிலும் இலந்தை மரங்கள் நிற்கும் குடில் ஒன்று இந்த ஆசிரமத்தில் இருந்தது. அதில்தான் வியாச மகரிஷி வசித்து வந்தார்.

"நாரத முனிவர் சென்ற பின்பு, வியாச முனிவர் ஆசமனம் செய்து பரிசுத்தராய், மனத்தை ஒரு நிலைப்

படுத்திக்கொண்டு தியானத்தில் அமர்ந்தார். பக்தி யோகத்தில் ஈடுபட்டு, மனது பரிசுத்தமடைந்தபடியால், முதலில் வியாச மகரிஷி, பரம புருஷனை பகவானைத் தரிசித்தார். பிறகு, அவனுக்கே உருவம் ஆகி, அவனையே ஆதாரமாகவுடைய மாயை என்னும் பிரகிருதியைப் பார்த்தார். இந்த மாயைக்கு வயப்பட்டு, மனிதன் உள்ளதை இல்லது என்றும், இல்லதை உள்ளது என்றும், மதிமயங்கி, பிரமிப்பதையும் வியாச மகரிஷி தெரிந்துகொண்டார். இந்த மதிமயக்கத்தைப் போக்கு வதற்குப் பக்தி மார்க்கம் சிறந்தது என்பதையும் வியாச முனிவர் அறிந்துகொண்டார்.

"இந்த உண்மைகளை, அறியாது இருக்கும் மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்பதற்காகத்தான், வியாச மகரிஷி, இந்தப் பாகவத புராணத்தை இயற்றி அருளினார்.

"இந்தப் பாகவத புராணத்தை ஒருவன் செவி மடுத்துக் கேட்பானாகில், அவனுக்கு, பரம புருஷனை கிருஷ்ணனிடம் நிலையான பக்தி ஏற்படும்; அதனால் சோகம், மோகம், பயம்* முதலியன அவனைவிட்டு விலகிப் போகும்.

"தம்மால் இயற்றப்பட்ட இந்தப் புராணம் தாம் எதிர்பார்த்த பலன்களை உண்டுபண்ணுமா என்று வியாச மகரிஷி சோதித்துப் பார்த்தார்.

*சோகம் : மனைவி மக்களைப் பிரிய நேருவதனால் ஏற்படுகிற துயரம்.

மோகம் : தனது அல்லாத ஒன்றைத் தனது என்று கருதுகிற மதி மயக்கம்.

[illegible] என்ற பீதி.

"இதன் பின்னர், வியாச மகரிஷி, இந்தப் பாகவத புராணத்தை, நிவர்த்தி மார்க்கத்தில்* புகழ் பெற்றவரான தம் புதல்வர் சுகருக்கு உபதேசித்தார்."

இப்படிச் சூதர் சொன்னதும், சௌனக முனிவர் அவரை நோக்கி, "சூதரே! இந்த உலகத்தின் ஆசாபாசங்கள் அனைத்தையும் துறந்துவிட்டு, இறைவனிடம் இடையறாத அன்பு பூண்டு வருபவர் ஆயிற்றே சுகர்! பாகவத புராணம் கேட்க வேண்டிய அவசியம் சுகருக்கு எதனால் ஏற்பட்டது?" என்று வினவினார்.

சௌனகர் கேட்ட இந்தக் கேள்விக்குக் கீழ்வருமாறு சூதர் பதில் சொன்னார்:

"ஆத்மானந்தத்தில் திளைப்பவர்களாய் இருப்பினும், அவர்களைத் தன்பால் ஈர்க்கும் தன்மையும் சிறப்பும் கிருஷ்ண பகவானுடைய சரிதத்துக்கு உண்டு. அதனால் தான் சுக மகரிஷி, பாகவத புராணத்தை, விருப்புடன் கேட்டுக் கற்றுக்கொண்டார்" என்று கூறினார். சூதர்

பிறகு மேலும் தொடர்ந்து, "முனிவர்களே! கிருஷ்ண பரமாத்மாவின் மகிமைகளைத் தெரிந்துகொள்வதற்கு, மகா பாரதப் போரின் விளைவுகள், ஒரு தோற்றுவாய் போல் அமைந்திருக்கின்றன. ஆகையால் அவற்றைப் பற்றிச் சிறிது உங்களுக்கு இப்பொழுது முதலில் நான்

*உலக வாழ்க்கையில் அழுந்தி அறத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் பிரவிருத்திகள் எனப்படுவர்; உலக வாழ்க்கையிலுள்ள பற்றுதல்களை அறவே துறந்து, இறைவன்பால் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு வாழ்பவர்கள், நிவர்த்தி மார்க்கத்தைக் கடைப்பிடிப்போர் ஆவர். வியாச மகரிஷியின் புதல்வர் சுகர் ஆரம்பத்திலிருந்தே நிவர்த்தி மார்க்கத்தில் தலைசிறந்து விளங்கிப் புகழ் பெற்றவர்.

சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு, அதைச் சொல்லத் தொடங்கினார் சூதர்.

## அசுவத்தாமா அடைந்த அவமானம்

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையில் நடந்த போரில், கௌரவர்கள் வீர சொர்க்கம் அடைந்தார்கள். போர் நடைபெற்றபோது, கதாயுதத்தை எடுத்து வீசி, துரியோதனனுடைய தொடை எலும்பைப் பீமசேனன் முறித்துவிட்டான்.

இது சமயம், துரியோதனனுக்குப் பிரியமான ஒரு காரியத்தைச் செய்ய விரும்பிய அசுவத்தாமா, புறப்பட்டுச் சென்று, தூங்கிக்கொண்டிருக்கும் உப பாண்டவர்களின் தலைகளை—அதாவது திரௌபதியின் புதல்வர்களின் தலைகளை—வெட்டி எடுத்து வந்து, அவற்றைத் துரியோதனன் முன்னே வைத்தார்.

தன் புதல்வர்களை அசுவத்தாமா வதம் செய்துவிட்டார் என்பது தெரியவந்ததும், திரௌபதி கண்ணீரைப் பெருக்கி அழுதாள்.

இதைக் கவனித்த அர்ச்சுனன் அவளுக்கு ஆறுதல் சொன்னான் :

"நல்ல சுவாபமுடையவளே! நீ கவலைப்படாதே. அந்தணர்களில் இழிந்தவனான அந்த அசுவத்தாமாவின் தலையை, எனது காண்டீவத்தால் துண்டித்து, உன் முன்னர் வைத்து, உனது துக்கத்தை நான் துடைக்கிறேன்" என்று சொல்லிவிட்டு, அர்ச்சுனன் அங்கிருந்து புறப்பட்டான்.

வானரக் கொடியையும், பகவான் கிருஷ்ணனைச் சாரதியாகவுமுள்ள தனது தேரில் ஏறிக்கொண்டு, அசு

தன்னை அர்ச்சுனன் துரத்தி வருவதை வெகு தூரத்தில் இருந்தபடி அசுவத்தாமா பார்த்துவிட்டார். தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டி, ஒரு தேரில் ஏறிக்கொண்டு, சிவபெருமானிடம் பயந்து பிரம்ம தேவர் ஓடியதுபோல, திரும்பிப் பாராமல் அசுவத்தாமாவும் ஓடினார்.

அர்ச்சுனனும் விடாது அவரைத் துரத்தினான். அசுவத்தாமாவின் தேர்க் குதிரைகள் களைத்துப் போனபடியாலும், உதவி செய்து தன்னைக் காப்பாற்றுவார் யாரும் இல்லாதபடியாலும், தன்னைக் காப்பாற்றக் கூடியது பிரம்மாத்திரம்தான் என்ற முடிவுக்கு வந்தார் அசுவத்தாமா.

அந்த முடிவுப்படி, உடனே பிரம்மாத்திரத்தை அர்ச்சுனன்மீது அவர் தொடுத்தார்.

அதன் பிரபாவம் எங்கும் பரவுவதை அர்ச்சுனன் கவனித்தான். இதனால் தனது உயிருக்கு ஆபத்து நேரலாம் என்று கருதிய அவன், தன் சாரதியாகிய கண்ணனிடம், "கிருஷ்ணா! நீர் அனைத்தையும் அறிந்தவர். ஏதோ ஒரு பிரபாவம் பயங்கரமாக எங்கும் பரவி வருகிறது. இது என்ன என்று எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்று சொன்னான்.

"அர்ச்சுனா! அசுவத்தாமா ஏவி இருக்கும் பிரம்மாத்திரத்தின் பிரபாவம் இது. தன் உயிருக்கு ஆபத்து நேர இருக்கிறது என்பது தெரிந்து, அசுவத்தாமா இந்த அத்திரத்தைத் தொடுத்து இருக்கிறார். இதை வேறு எந்த அத்திரத்தாலும் தடைப்படுத்த முடியாது. ஆகையால் அதே பிரம்மாத்திரத்தை நீயும் தொடுத்து, அசுவத்தாமா ஏவின அத்திரத்தின் வேகத்தைத் தடைப்படுத்து" என்று சொன்னார்

அதன்படி அர்ச்சுனனும் பிரம்மாத்திரத்தைத் தொடுத்தான்.

இந்த இரண்டு அத்திரங்களின் பிரபாவத்தைத் தாங்க முடியாது உலக மக்கள் தவித்தார்கள்.

இதைக் கவனித்த அர்ச்சுனன், கிருஷ்ணனுடைய அபிப்பிராயப்படி, அந்த இரண்டு அத்திரங்களையும் உபசம்ஹாரம் செய்தான்.

இதன் பின்னர், கோபத்தால் சிவந்த கண்களுடன் அசுவத்தாமாவை அணுகி, யாகப் பசுவைக் கட்டுவது போல, அசுவத்தாமாவைக் கயிற்றால் கட்டினான் அர்ச்சுனன்.

பிறகு அசுவத்தாமாவைக் கூடாரத்துக்குப் பலாத்காரமாக இழுத்துப் போக ஏற்பாடு செய்தான்.

இதைக் கவனித்த கிருஷ்ணன், அர்ச்சுனனைக் கோபத்துடன் பார்த்தார். "அர்ச்சுனா! யாதொரு குற்றமும் செய்யாத குழந்தைகளை, தூங்கிக்கொண்டிருக்கும் போது, படுகொலை செய்த பாதகன் இவன்; பிராமணத் தன்மையிலிருந்து நழுவியவன். இந்தக் கொடியவனைக் கொல்ல வேண்டுமே தவிர, சும்மா விடுதல் கூடாது. வேண்டும் என்றே அறிந்து கொடுமைகள் புரிபவனைத் தண்டிக்காமல் இருப்பது குற்றமாகும். திரௌபதியிடம் 'உன் புதல்வர்களைக் கொன்றவனின் தலையை உன்பால் நான் கொண்டுவருகிறேன்' என்று நீ உறுதி கூறி வந்திருக்கிறாய். அது மட்டுமல்லாமல், தன் அரசன் துரியோதனன் விரும்பாத காரியத்தை இவன் துணிந்து செய்திருக்கிறான். தன் குலத்துக்கு அவகீர்த்தியைத் தேடிக்கொண்ட இவனைச் சும்மா விடுதல் கூடாது" என்று சொன்னார்.

இவ்வாறு அர்ச்சுனனைக் கிருஷ்ணன் தூண்டிய போதிலும், அர்ச்சுனனுக்கு அசுவத்தாமாவைக் கொல்ல வேண்டும் என்னும் துணிவு உண்டாகவில்லை. தன் புதல்வர்களைக் கொன்ற கொலை பாதகன் என்ற அர்ச்சுனனுக்கு எண்ணம் இருந்தாலும், தன் குருவின் மகன்

என்ற காரணத்தால், அசுவத்தாமாவைக் கொல்ல அர்ச்சுனனுக்கு மனம் வரவில்லை.

ஆகவே கோவிந்தரைச் சாரதியாகவும் நண்பனாகவும் பெற்றுள்ள அர்ச்சுனன், அசுவத்தாமாவை அழைத்துக் கொண்டு கூடாரம் போய்ச் சேர்ந்தான்.

தன் புதல்வர்களை இழந்து, துயரத்தால் நலிந்து கொண்டிருக்கும் திரௌபதியிடம் சென்று, "தேவி! உன் புதல்வர்களைக் கொன்றவனை இதோ பிடித்து வந்திருக்கிறேன். உன் விருப்பம் எதுவோ அதன்படி செய்" என்று சொன்னான்.

யாகப் பசுவைப் போல் கயிற்றால் கட்டுண்டு, தான் செய்த செயலை நினைந்து நாணமுற்று, தலையைக் குனிந்துகொண்டிருக்கும் அசுவத்தாமாவை, திரௌபதி பார்த்தாள்.

நல்ல மனமுள்ளவளானபடியாலும், குருவின் புதல்வர் என்பதாலும், அசுவத்தாமாவைப் பார்த்ததும் திரௌபதி அவரை வணங்கினாள். கட்டுண்டு, அடிமையைப்போல் அசுவத்தாமா நிற்பதைக் காண, பெருந்தன்மையுள்ள திரௌபதியின் மனம் பொறுக்கவில்லை.

ஆகவே அர்ச்சுனனை நோக்கி,"நாதா! இவரை விட்டு விடுங்கள். இவர் பிராமணர்; அல்லாமலும் தங்களுக்கு வில்வித்தையைக் கற்றுக்கொடுத்த, ஆசாரியர் துரோணருடைய புதல்வர்; ஆகவே,இவரையும் குருவாக மதிப்பது நம் கடமை. குரு நிலையில் இருக்கும் ஒருவரை நாம் கொல்லுதல் கூடாது. புதல்வர்களை இழந்து நான் துயரப்படுவதுபோல, தம் புதல்வரை இழந்து, இவருடைய தாயார் கிருபி துயரமடைய நாம் செய்வது கூடாது. ஆகவே, இவரை ஒன்றும் செய்யாது விட்டுவிடுங்கள்" என்று திரௌபதி சொன்னாள்.

திரௌபதி இப்படிப் பெருந்தன்மையுடன் கூறியதைச் செவிமடுத்த யுதிஷ்டிரர் முதலியோர், அதற்காகத் திரௌபதியைப் பாராட்டினார்கள்.

ஆனால், பீமனோ அளவற்ற கோபத்துடன் இடைமறித்துப் பேசலானான்: "தூங்கிக்கொண்டிருந்த குழந்தைகளை வேண்டுமென்றே கொன்றவன் இவன். அதனால் இவனுக்கோ, இவனுடைய அரசன் துரியோதனனுக்கோ ஒரு பயனும் இல்லை. ஆகையால், இவனைக் கொல்வதே மேலானது" என்று சொன்னான்.

திரௌபதி சொன்னதையும் பீமசேனன் சொன்னதையும் செவிமடுத்த கிருஷ்ணன், புன்முறுவல் பூத்தவாறே, அடியில் வருமாறு அர்ச்சுனனிடம் சொன்னார்:

"நிலை தவறி இழிந்து போயினும் பிராமணனைக் கொல்லக் கூடாது என்றும், ஆனால் ஆததாயியைக்* கொல்லலாம் என்றும் நானே தர்ம சாத்திரங்களில் கூறி இருக்கிறேன். ஆகவே, அதன் பிரகாரம் நீ காரியத்தைச் செய். உன் அன்பு மனைவி திரௌபதிக்கு நீ செய்து கொடுத்த வாக்குறுதியையும் நிறைவேற்று. பீமசேனனுக்கும் திரௌபதிக்கும் எனக்கும் பிரியமானதை இப்பொழுது நீ செய்" என்று சிரித்துக்கொண்டே சொன்னார்.

இவ்வாறு கண்ணபிரான் கூறியதும், அவருடைய உள்ளக் கருத்தை அறிந்துகொண்ட அர்ச்சுனன், தனது வாளால் அசுவத்தாமாவின் தலையில் இருக்கும் மணியைக் கூந்தலுடன் துண்டித்து எடுத்தான்.

---

* **ஆததாயி :** நெருப்புவைப்பவன், விஷம் கொடுப்பவன், ஆயுதம் ஏந்தியவன், பணத்தைக் கவர்பவன், பொருளைக் கவர்பவன், மனைவியைக் கவர்பவன் இந்த அறுவரையும் கொல்லலாம் என்பது விதி

பிறகு, கட்டுகளை அவிழ்த்து அசுவத்தாமாவுக்கு விடுதலை அளித்தான். பொலிவு குன்றி, ஆற்றலும் குன்றி, அவமான மடைந்து, அசுவத்தாமா அங்கிருந்து புறப்பட்டுப் போனார்.

இவ்வாறு. அசுவத்தாமாவை அவமானப்படுத்தித் துரத்திய பின்னர், யுதிஷ்டிரர், திரௌபதி, கிருஷ்ணன் முதலியோர் கங்கைக் கரைக்குப் புறப்பட்டுச் சென்று, போரில் மடிந்த உற்றார் உறவினர்களை நினைந்து வருந்தி, நீர்க்கடன் முதலியவற்றைச் செய்தார்கள்.

பிறகு கங்கையில் நீராடிவிட்டு, நகரம் திரும்பினார்கள்.

அரசர் யுதிஷ்டிரரை அரியணை ஏறச்செய்து, மூன்று அசுவமேத யாகங்களை முடித்து வைத்தார் கிருஷ்ணன். இந்திரனுக்கு நிகரான பெயரும் புகழும் யுதிஷ்டிரருக்கு ஏற்படும்படி செய்துவிட்டு, துவாரகைக்குப் புறப்படக் கண்ணபிரான் ஆயத்தமானார்.

பாண்டவர்களிடமும் வியாச முனிவரிடமும் விடை பெற்றுக்கொண்டு, கண்ணன் தமது தேரில் ஏறினார்.

தேரில் ஏறித் துவாரகைக்கு அவர் புறப்பட இருந்த தருணத்தில், அபிமன்யுவின் மனைவி உத்தரை, கலக்க முற்றுப் பயந்து, தன்னை நாடி விரைந்து வருவதைக் கிருஷ்ணன் பார்த்தார்.

## குந்தி செய்த தோத்திரம்

கலக்கமுற்றுப் பயந்து ஓடி வந்த உத்தரை, கண்ண பிரானை நோக்கி, "அனைத்தையும் அறிந்தவரே! தேவர்கள் அனைவருக்கும் தேவரே! என்னைக் காப்பாற்றும். உம்மைத் தவிர்த்து. வேறு யாராலும் எனக்குள்ள பயத்தைப் போக்க முடியாது. எஃகு முனையுள்ள பாணம் ஒன்று, நெருப்பைக் கக்கிக்கொண்டு என்னைத் துரத்தி வரு

கிறது. அது எனது உடலை எரித்தாலும் எரிக்கட்டும். ஆயினும் எனது வயிற்றில் இருக்கும் குழந்தைக்கு எவ்வித ஆபத்தும் நேராதபடி அதைக் காத்து, நீர் அருள் புரிய வேண்டும்'' என்று இறைஞ்சினாள்.

பக்தர்களைப் பாதுகாக்கும் இயல்புள்ள கண்ணன், உத்தரையைத் துரத்துகிற பாணம், பாண்டவர்களைக் குலத்தோடு அழிக்கும் பொருட்டு, அசுவத்தாமா ஏவின பிரம்மாத்திரம் என்பதைத் தெரிந்துகொண்டார்.

இதே சமயம், வேறு ஐந்து பாணங்கள் தங்களை அழிக்க வருவதைப் பாண்டவர்களும் பார்த்தார்கள். இந்தப் பாணங்களைத் தடுக்கும் பொருட்டு, தங்கள் தங்கள் ஆயுதங்களை அவர்கள் கைகளில் எடுத்துக் கொண்டார்கள்.

தன்னையே கதி என்று நம்பி இருக்கும் தன் உறவினர்களான பாண்டவர்களை, சுதர்சனம் என்னும் தமது சக்கரத்தின் மூலம் பாதுகாக்கக் கண்ணன் திருவுளம் கொண்டார். சுதர்சனத்தைத் தவிர்த்து வேறு எதாலும் பிரம்மாத்திரத்தைத் தடுக்க முடியாது. ஆகவே, அதை ஏவி, பிரம்மாத்திரத்தைத் தடுத்து, பாண்டவர்களைக் கண்ணன் காப்பாற்றினார்; தன் மாயா சக்தியின் மூலம் உத்தரையின் வயிற்றிலிருக்கும் குழந்தையை மறைத்து, குரு வம்சம் அழிந்து போகாதபடி பாதுகாத்தார்.

இவ்வாறு பாண்டவர்களையும், அவர்களுடைய வம்சத்தையும் அழிந்து போகாமல் காப்பாற்றிவிட்டு, துவாரகைக்குப் புறப்படக் கண்ணன் தயாரானார்.

இது சமயம் பாண்டவர்களின் அன்னை குந்தி, பாண்டவர்களையும் திரௌபதியையும் அழைத்துக்கொண்டு கண்ணனை அணுகி, அடியில் வருமாறு கண்ணனைத் துதித்தாள்:

ஒன்றும் அறியாத பெண்பாலான நான் உம்மை வணங்குகிறேன்.

அனைத்திற்கும் மூல புருடனான நீர், சகல உயிர்களிடத்திலும் உள்ளும் புறமும் இருப்பவர். ஆகையால், அனைத்துக்கும் நீரே அதிபர்.

மாயை என்னும் திரையையும் கடந்து நிற்கும் உம்மை, பொறி புலன்களால் காண முடியாது.

வேடந்தரித்த நடிகனின் உண்மைத் தன்மையை, மூடர்கள் அறிய மாட்டார்கள்.

அதே போல,கோணல் புத்தியுள்ளவர்களால்,அழிவில்லாத உம்மை அறிய முடியாது.

பரிசுத்த மனமுள்ளவர்களிடத்திலும் பரம ஹம்ஸர்களிடத்திலும் பக்தியை மென்மேலும் வளர்க்கும் பொருட்டு, நீ வேண்டுமென்றே மறைந்துகொள்கிறீர்.

அப்படிப்பட்ட உம்மைப் பெண்பாலான நாங்கள் எப்படித் தரிசிப்போம்.

கிருஷ்ணனே! வாசுதேவனே! தேவகியின் மைந்தனே! நந்தகோபனுடைய புதல்வனே! கோவிந்தனே! உமக்கு வணக்கம்! வணக்கம்!

தாமரை மலரை நாபியில் உடையவனே! உமக்கு வணக்கம்!

தாமரை மலரை மாலையாக உடையவனே! உனக்கு வணக்கம்!

தாமரை மலர்போன்ற கண்களையுடையவனே! உமக்கு வணக்கம்!

தாமரை மலர் போன்ற திருவடிகளையுடையவனே! உனக்கு வணக்கம்!

கொடிய கம்சனிடமிருந்து உம் அன்னை தேவகியை எப்படி நீர் காப்பாற்றினீரோ, அப்படியே என்னையும் என் புதல்வர்களையும், தொடர்ந்து வந்த துயரங்களி

லிருந்து எல்லாம் நீர் காப்பாற்றி அருளினீர்!

நஞ்சிலிருந்து எங்களைக் காப்பாற்றினீர்;

நெருப்பிலிருந்து எங்களைக் காப்பாற்றினீர்;

மானுடர்களைத் தின்னும் இடிம்பன் போன்ற அரக்கர்களிடமிருந்து காப்பாற்றினீர்; கொடியவர்கள் நிறைந்த சபையில் சூதாட்டம் நடந்தபொழுதும், வனவாச காலத்தில் ஏற்பட்ட துயரங்களிலிருந்தும் எங்களை நீர் காப்பாற்றினீர்.

மாபெரும் வீரர்கள் ஏவின கணைகளிலிருந்தும், அசுவத்தாமா ஏவின அத்திரத்திலிருந்தும், எங்களைக் காப்பாற்றி அருள்புரிந்தீர்.

இறைவனே! இவ்வாறு அடிக்கடி எங்களுக்கு ஆபத்துக்கள் ஏற்படட்டும்.

அப்படி ஏற்பட்டால், உமது தரிசனம் அடிக்கடி எங்களுக்குக் கிட்டும்.

அதனால் பிறவா நிலையை நாங்கள் அடைவோம்.

உயர் குடிப்பிறப்பு, செல்வம், அதிகாரம், கல்வி, இவற்றால் செருக்குற்று இருப்பவர்களுக்கு, உமது பெயரைச் சொல்லக் கூடிய அருகதை போதாது; சொல்லவும் மாட்டார்கள்.

ஆனால் எந்தப் பெருமையையும் விரும்பாத, என தனக்கு ஒன்றும் இல்லாத எளியவர்களுக்கு நீர் எளிதில் புலப்படுவீர்.

தனக்கு என ஒன்றும் வைத்துக்கொள்ளாதவர்களுக்கு நீரே தனமாவீர்.

முக்குணங்களையும் கடந்து நிற்கின்ற உம்மை, தமக்குள்ளேயே மகிழும் ஆற்றல் பெற்ற உம்மை, சாந்தமயமான உம்மை, வீடுபேற்றை நல்கும் திறம் படைத்த உம்மை, நான் மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்.

நீர் ஆதி அந்தம் இல்லாதவர்; அனைத்துக்கும் நீரே அதிபதி.

எல்லாவற்றிலும் சம நோக்குடன் சஞ்சரிக்கும் காலம் என்பது நீரே.

ஆகவே ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக்கொள்வதற்கும் நீரே காரணபூதராய் இருக்கிறீர்.

அதனால் உமக்கு யாரிடத்திலும் விருப்பும் இல்லை; வெறுப்பும் இல்லை.

மனிதர்களிடம்தான் விருப்பு வெறுப்பு என்னும் பேத புத்தி இருக்கிறதே யல்லாமல், உம்மிடம் அது இல்லை.

இந்த அகிலம் அனைத்துக்கும் நீரே அதிபர்; இந்த அகிலமே நீர்தான்.

அதனால் பிறப்பு, இறப்பு, செயல் முதலிய எதுவும் உம்மிடம் இல்லை. ஆகையால் பன்றியாயும் மீனாயும் வாமனனாயும் நீர் அவதாரம் எடுத்தீர் என்பது எல்லாம் உமது லீலைகளே யன்றி வேறு இல்லை.

நீர் தயிர்ப் பானையை உடைத்ததற்காக உம்மைக் கட்டுவதற்கு யசோதை கயிறை எடுத்தபோது, கண்களில் இட்ட மை கரைய, கண்ணீரைப் பெருக்கி, தலையைக் குனிந்துகொண்டு, பயந்தவர்போல, நீர் நின்ற கோலம், என்னைப் பெரிதும் பிரமிக்கச் செய்கிறது.

பயமே உம்மை அணுக அஞ்சும்; அப்படி இருக்கும் போது, நீர் பயந்தவர்போல, தோற்றம் அளிக்கிறீரே ஏன்?

சந்தண மரத்தால் மலய பருவதம் பெருமை பெற்றதுபோல, யது குலத்தைப் பெருமைப்படுத்த, பிறவியில்லாத நீர், பிறவி எடுத்துப் பிறந்ததாகச் சிலர் உம்மைப் பற்றிக் கூறுகின்றனர்.

உலகத்துக்கு நன்மை செய்யும் பொருட்டும், தேவர்களின் எதிரிகளை வதம் செய்யும் பொருட்டும், வசுதேவரின் விருப்பத்துக்கு இசைந்தும், நீர் தேவகி வயிற்றில் பிறந்ததாக வேறு சிலர் கூறுகின்றனர்.

பாரம் மிகுதியான காரணத்தால், நடுக்கடலில் தத்தளிக்கும் கடலைப் போல, பாவம் மிகுதியான காரணத்தால், பூபாரத்தைக் குறைக்க, பிரம்மாவின் வேண்டுதலுக்கு இசைந்து, நீர் அவதரித்தீர் என்று மற்றும் சிலர் கூறுகின்றனர்.

அவித்தையால் காமத்துக்கு உட்பட்டும், காமத்தால் கருமத்துக்கு உட்பட்டும், உழன்று தவிக்கிற மாந்தர்கள், உமது திருவிளையாடல்களைச் செவிமடுத்தும், நினைந்தும் ஆனந்தப்படும் பொருட்டு, நீர் உலகில் அவதரித்தீர் என்பதாக மற்றவர்கள் கூறுகின்றனர்

யார் உமது சரிதத்தைப் பிறர் கூறக் கேட்கிறார்களோ, தாமே பாடிப் பக்தி செலுத்துகிறார்களோ, அடிக்கடி நினைதது ஆனந்தப்படுகிறார்களோ, அவர்கள், பிறப்பையும் இறப்பையும் போக்குகின்ற உமது திருவடிகளை விரைவில் அடைவார்கள்.

உமது அடியார்களின் விருப்பத்தை எப்பொழுதும் நிறைவேற்றி வைக்கும் இயல்புள்ளவர் நீர்.

அரசர்களால் அவதிப்பட்ட எங்களை, உமது திருவடிகளைத் தவிர்த்து வேறு புகலிடம் இல்லாத எங்களை, உமது அன்புக்குப் பாத்திரமான எங்களை, விட்டு விட்டுப் போக நீர் விரும்பலாமா ?

பொறி புலன்களுக்கு அதிபதியான ஆத்மா, தேகத்தை விட்டு அகன்று எப்படி காந்தியும் பெயரும் இல்லாமல் மங்கிப் போகின்றதோ, அதேபோல, உம்முடைய பேரன்பு இல்லாவிட்டால், யாதவர்களுடன்

இருந்தாலும் பாண்டவர்களான நாங்களும் பயனற்ற வர்களாகிவிடுவோம்.

உமது திருவடித் தாமரைகள் பதியப் பெறுத இந்தப் பூமி, தனது சோபையை இழந்துவிடும்.

உமது அருள் நோக்கினுல்தான் இந்த நாடு செழிப் புடையதாய் விளங்குகிறது. பயிர் பச்சைகளும் காடு களும் மலைகளும் ஆறுகளும் கடல்களும் மிகுந்து, இந்த நாடு உமது அருளினுல் சோபையுடன் விளங்குகிறது. மென்மேலும் விருத்தியடைந்து வருகிறது.

நீரே இந்த உலகத்துக்கு அதிபர். நீரே ஆத்மா. இந்த உலகமே நீர்தான்.

ஆகையால் பாண்டவர்களிடத்திலும் யாதவர் களிடத்திலும் எனக்குள்ள பந்த பாசத்தை அகற்றி விடும்.

மதுரா நகரத்துக்கு அதிபதியான கண்ணு! இடை யில் ஏற்படும் தடங்கல்களைப் பொருட்படுத்தாமல் கங்கை நதி, பிரவாகமாகச் சென்று கடலை அடைவ தைப் போல, உம்மைப் பற்றிய நினைப்பு சதா சர்வ காலமும் எங்கள் நெஞ்சத்தில் இடம்பெற நீர் அருள் புரிய வேண்டும்.

ஏ கண்ணு! அர்ச்சுனனுக்கு நண்பரே! பூமிக்குத் தீமை விளைவிக்கும் அரசர்களை அழிப்பவரே! கோவிந்தா! பசுக்கள், அந்தணர்கள், வானவர்கள் ஆகியோரின் துயரத்தைத் துடைப்பவரே! உமக்கு வணக்கம். வணக்கம்.''

இவ்வாறு சொல்லி, கண்ணபிரானைக் குந்திதேவி துதித்தாள்.

இனிய சொற்களால் குந்திதேவி இவ்வாறு துதித் ததும், கண்ணபிரான் அருள் சுரந்து புன்னகை புரிந் தார். ''அவ்வாறே ஆகுக!'' என்று சொல்லி, குந்தியிடம்

விடைபெற்றுக்கொண்டு, திரும்பவும் அத்தினபுரத்துக்குள் நுழைந்தார்.

அங்கே சுபத்திரை முதலிய மாதர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, துவாரகைக்குப் புறப்படக் கண்ணன் ஆயத்தமானார்.

இது சமயம் யுதிஷ்டிரர் அவரிடம், "சிறிது காலம் இங்கு தங்க வேண்டும்" என்று அன்போடு வேண்டிக் கொண்டார்.

கண்ணபிரானும் சம்மதித்து அத்தினபுரத்தில் தங்கினார்.

தம் உற்றார் உறவினர்களை அழிக்கத் தாம் ஒரு கருவியாக இருந்ததை நினைந்து நினைந்து யுதிஷ்டிரர் வருந்தினார். வியாச மகரிஷி போன்றவர்கள் ஆறுதல் சொல்லியும், யுதிஷ்டிரரின் மனம் தெளிவு அடையவில்லை; கவலையும் நீங்கவில்லை பல விதமான சான்றுகளை எடுத்துக் காட்டி, கிருஷ்ணனும் ஆறுதல் சொன்னார். அதனாலும் யுதிஷ்டிரரை வாட்டிய கவலை நீங்கவில்லை.

"எனது அறியாமையை என்னென்பது! நாய் நரிகளுக்கு இரையாகும் இந்த உடலின் நிமித்தம், என் உற்றார் உறவினர்களை நான் வதம் செய்தேன். அவர்களின் பெண்பாலார் துயருறுவதை, வேள்வி முதலியவற்றால் போக்கிவிட முடியாது. சேற்றைக் கொண்டு, சேறாய் இருக்கும் தண்ணீரைச் சுத்தம் செய்ய முடியாது; கள்ளினால் ஏற்பட்ட மதிமயக்கத்தைக் கள்ளினால் போக்க முடியாது; அதே போல, பிராணிகளின் வதத்தை, வேறு பிராணியை வதம் செய்வதனால் ஈடுகட்டிவிட முடியாது" என்று சொல்லி, பற்பலவாறு யுதிஷ்டிரர் புலம்பினார்.

## பீஷ்மரின் துதி

உற்றார் உறவினரைத் தாம் வதம் செய்ததை நினைந்து நினைந்து வருந்திய யுதிஷ்டிரர், அடியுண்டு போர்க்களத்தில் அம்புப் படுக்கையில் படுத்திருக்கும் பீஷ்மரிடம் சென்றார். தருமத்தின் நுட்பங்களைப் பீஷ்மரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளும் பொருட்டே அவர் புறப்பட்டுப் போனார்.

அவருடன் அவருடைய தம்பியரும், வியாசரும், தௌமியரும் கூடச் சென்றார்கள்; கண்ணபிரானும் அர்ச்சுனனுடன் சேர்ந்து தேரில் ஏறிக்கொண்டு போர் நடந்த குருச்சேத்திரத்துக்குப் போனார்.

போர்க்களத்தை அடைந்து, வானத்திலிருந்து நழுவி விழுந்த தேவர்போலப் படுத்திருக்கும் பீஷ்மரை அணுகி, எல்லாரும் வணங்கினார்கள்; கண்ணனும் முறைப்படி, பீஷ்மரை வணங்கினார்.

இது சமயம், ராஜரிஷிகளும் தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும், பீஷ்மரைப் பார்க்கும்பொருட்டு அங்கே வந்து கூடினார்கள்; பர்வதர், நாரதர், தௌமியர், வியாசர், பரத்வாசர், பரசுராமர், வசிஷ்டர், கௌதமர், அத்ரி, விசுவாமித்திரர், காசியபர், பிருகஸ்பதி, சுகர் முதலியோரும் தத்தம் சீடர்களுடன் அங்கு வந்திருந்தார்கள்.

வந்திருக்கும் முனிவர்களை எல்லாம் தனித் தனியே தெரிந்துகொண்டு, பீஷ்மர் முறைப்படி பூசித்தார். கிருஷ்ண பகவானின் மகிமைகளை நன்கு அறிந்த அவர், தம் மனத்தினுள்ளேயே அவரைத் தியானித்தார்.

பிறகு அன்போடும் பணிவுடனும் தம் அருகே வீற்றிருக்கும் பாண்டவர்களை அவர் பார்த்தார். ஆனந்த மிகுதியால் தம் கண்களில் நீர் மல்கி நிற்க, பாண்டவர்களை நோக்கி அவர் பேசத் தொடங்கினார்: "ஏ தரும

நந்தன ! அந்தணர்களையும் அறத்தையும் கண்ண பிரா ஜனயும் அடுத்து வாழும் நீங்கள், துயருற்று வாழ்வது பெருமையுமன்று; நியாயமுமன்று. வீரனை பாண்டு காலமடைந்த பின்னர், குந்தி உங்களை வளர்க்கப் பெரிதும் சிரமப்பட்டு இருக்கிறாள். மேகங்கள் வாயுவுக்கு வசப்பட்டு இருப்பதுபோல, மாந்தர்கள் காலத்துக்கு வசப்பட்டு இருக்கிறார்கள். ஆகையால் உங்களுக்கு நேர்ந்த துயரங்கள் அனைத்தும், காலத்தின் விளைவே யன்றி வேறு இல்லை. தர்மபுத்திரன் அரசனாகவும், பீம சேனன் கதாயுதம் கொண்டு காப்பவனாகவும், அர்ச்சுனன் வில்லாளியாகவும், காண்டீவம் வில்லாகவும், கண்ண பிரான் உற்ற துணைவராகவும் இருக்கும் இடத்திலு மல்லவா துயரம் ஏற்படுகிறது. கிருஷ்ண பகவா னுடைய உள்ளக் கிடையை ஒருவராலும் அறிய முடி யாது. கவிஞர்களும் யோகிகளும்கூட இவருடைய சொரூபத்தை அறிய முடியாமல் மயங்குகின்றனர். ஆகையால், அனைத்தும் இறைவனுக்கு வசப்பட்டவை என்பதை அறிந்து, ஆதரவற்றுத் தவிக்கும் மாந்தர்களை நீ காப்பாற்று. இவர்தான் அநாதியான கடவுள். தமது யோக மாயையால் உலகை மயக்கிக்கொண்டு இவர் யாதவர்களிடையே மறைந்து வசிக்கிறார். இவருடைய மகிமைகளை யாராலும் எளிதில் அறிந்துகொள்ள முடி யாது. ஆனால், இவருடைய பெருமையைச்சிவபெருமானும், மகரிஷி நாரதரும், கபிலரும் அறிவார்கள். அப்படிப்பட்ட கண்ணபிரானை நீங்கள் அம்மான் பிள்ளையாக எண்ணிக் கொண்டு, தூதனாகவும் மந்திரியாகவும் சாரதியாகவும் நண்பனாகவும் கருதி அவ்வாறு நடத்துகிறீர்கள். இவர் ஆசையற்றவர்; அகங்காரமற்றவர்; நிகரற்றவர்; வேற் றுமைக் குணமின்றி அனைத்தையும் சமமாக நோக்கு பவர்; அனைத்திலும் ஊடுருவி விளங்குபவர்; உயர்வு

தாழ்வு என்ற பேதபுத்தி இல்லாதவர். அப்படி இருந்தும் கருணை நிரம்பியவர்; அதனால்தான் உயிர்விடப் போகும் எனக்குத் தரிசனம் தந்து, அருள்சுரக்கும் பொருட்டு இங்கே எழுந்தருளி இருக்கிறார். அவரிடம் மனத்தைச் செலுத்தி, நாமாவைச் சொல்லிக்கொண்டு எந்த யோகி தனது உயிரை விடுகிறானோ, அவன் கரும பந்தத்தினின்று விடுபடுகிறான். அத்தகைய பகவான், எனது உயிர் பிரியும் சமயம்,புன்முறுவல் தன் முகத்தில் துலங்க, நான்கு கரங்களுடனும் எனக்குத் தரிசனம் தந்து அருள் பாலிக்கட்டும்'' என்று கூறினார்.

இதன் பின்னர்,அம்புப் படுக்கைமீது படுத்திருக்கும் பீஷ்மரிடம், தரும நந்தனர், அனேக அறங்களைப்பற்றிக் கேட்டார்.

அவர் கேட்கக் கேட்க ஒவ்வொரு அறத்தையும் பற்றி, பீஷ்மர் அவருக்கு விரிவாக எடுத்து உரைத்தார்.

இப்படி அறங்களைப் பீஷ்மர் யுதிஷ்டிரருக்குச் சொல்லி வந்த சமயம், அவர் எதிர்பார்த்த உத்தராயணம் வந்தது. அது சமயம் பீஷ்மர் தம் முன்னே எழுந்தருளியிருக்கும் க்ருஷ்ணனிடம் சகல ஆசைகளையும் ஒழித்து, மனத்தைச் செலுத்தி, கண்களை மூடாமலே அவரைத் தியானித்தார்.

இதனால் போரினால் ஏற்பட்ட காயங்கள் அகன்று, களைப்பும் சோர்வும் நீங்கின. பொறி புலன்கள் பல வழிகளில் அலைந்து திரியாமல் ஒரு வழிப்பட்டு நின்றன. அந்த நிலையில் இருந்த பீஷ்மர், தம் உயிர் பிரியும்வரையில், தம் எதிரே இருக்கும் கண்ணபிரானை அடியில் வருமாறு துதித்தார்.

''மூவுலகங்களிலும் மேன்மையான அழகைப் பெற்றவரும், நீலநிற மேனியையுடையவரும், சூரியன் ஒளியை நிகர்த்த பொன்னிற ஆடையைத் தரித்தவரும்

நான்கு புறங்களிலும் தொங்கும் கேசத்தையுடைய அழகிய முகமுள்ளவரும் அர்ச்சுனனுடைய நண்பரு மான கிருஷ்ணனிடத்தில் எனக்குப் பலனை எதிர்பா ராத நிலையான பக்தி உண்டாகட்டும்.

"அர்ச்சுனனுக்குச் சாரத்தியம் செய்தபோது குதிரைகள் ஓடியதால் கிளம்பிய தூசுகள் படிந்த கேசத்தை யுடையவனும், வேர்வைத் துளிகள் படிந்த முகமுடையவனும், எனது பாணங்களால் துளைக்கப் பட்ட கவசத்தை யுடையவனுமான கண்ணனிடம் எனது மனம் ஈடுபடட்டும்.

"போர் நடக்கும் சமயம் அர்ச்சுனனுடைய தேரை இரு படைகளுக்கும் நடுவே நிறுத்தி, பார்வையினு லேயே எதிரிகளின் ஆயுளைக் குறைத்தவனும், அர்ச் சுனனுக்கு நண்பனுமான கிருஷ்ணனிடம் என் மனம் மகிழ்ச்சி அடையட்டும்.

"போர்க்களத்தில் சஞ்சலபுத்தியுடன் தயங்கி நின்ற அர்ச்சுனனுக்கு, கீதையை உபதேசித்து, அவனுடைய தயக்கத்தைப் போக்கிய பகவானுடைய திருவடிகளை எனது மனம் தியானிக்கட்டும்."

இவ்வாறு சொல்லி, பலவாறு கண்ணனைப் பீஷ்மர் துதித்தார்.

இவ்வாறு துதிசெய்த பின்னர், சுவாசத்தை அடக்கி மனத்தை ஒருமுகமாகக் கண்ணனிடம் செலுத்தினர் பீஷ்மர். அந்த நிலையிலேயே இறைவனோடு இரண்டறக் கலந்துவிட்டார் அவர்.

சுற்றி இருந்த அனைவரும் இதை அறிந்து, மாலைப் பொழுதில் பறவைகள் மௌனமாய் இருப்பதைப்போல, மௌனமாய் இருந்தார்கள்.

அப்போது துந்துபி முதலிய வாத்தியங்களை தேவர் களும் மனிதர்களும் முழக்கினர்கள்; வானத்திலிருந்து பூமாரி பெய்தது.

செய்ய வேண்டிய அந்திம கிரியைகளைப் பீஷ்மருக்கு யுதிஷ்டிரர் முறைப்படி செய்து முடித்தார்.

பிறகு அங்கிருந்து அனைவரும் அத்தினபுரம் திரும்பினார்கள். நடந்த விருத்தாந்தங்கள் அனைத்தையும் திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் யுதிஷ்டிரர் தெரிவித்தார்; இருவருக்கும் ஆறுதல் மொழிகள் சொல்லித் தேற்றினார்.

அதன் பின்னர், திருதராட்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, கண்ணனுடைய அருளால், யுதிஷ்டிரர், நீதியோடும் நேர்மையோடும் நாட்டைப் பரிபாலித்து வந்தார்.

## துவாரகை சென்றூர்

"ராஜ்யத்தின்மீது ஆசைகொண்டு, போர் செய்ய வந்து, துரியோதனன் முதலானவர்களைக் கொன்ற பின், தர்மத்தில் நாட்டமுள்ள யுதிஷ்டிரர் எப்படி நாட்டைப் பரிபாலித்தார்? தம்பியர்களுடன் சேர்ந்து, வாழ்க்கையை எவ்வாறு அனுபவித்தார்? அதன் பின்னர், தர்மபுத்திரர் எதைச் செய்தார்?" என்று கேட்டார் சௌனகர்.

மூங்கில் ஒன்றோடு ஒன்று உராய்ந்து, அதனால் தீயுண்டாகி, மூங்கில் காடு அழிவதைப்போல, குரு வம்சம் அழிய இருந்த தருணத்தில், பரீட்சித்து என்னும் முளையைக் கிருஷ்ணன் கிளம்பச் செய்தார்.

அதன் பயனும் குரு வம்சத்தை அழிவிலிருந்து அவர் காப்பாற்றினார்.

இறைவன் விரும்பியபடி உலகம் நடக்கிறதே யல்லாமல், நம் விருப்பப்படி அது நடப்பது இல்லை என்ற ஞானம் கண்ணன் செய்த உபதேசத்தினாலும் பீஷ்மர் செய்த உபதேசத்தினாலும் ஏற்பட்டு, கடல் சூழ்ந்த இந்த

உலகத்தை இந்திரன்போல் யுதிஷ்டிரர் பரிபாலித்து வந்தார்.

அப்போது மேகம் தவறாது வேண்டிய மழையைப் பொழிந்தது; மனிதர்களுக்குத் தேவையான பொருள்களை எல்லாம் பூமி தவறாது தந்தது. பெரிய மடியுள்ள பசுக்கள், மகிழ்ச்சியுடன் பாலைப் பொழிந்து, கொட்டிலை நனைத்தன. நீரால் நிறைந்து, வயல்களுக்குப் பாய்ந்து, பயிர்களை ஆறுகள் விருத்தி செய்தன. கடல்கள், மலைகள், மரங்கள், செடிகள், கொடிகள் ஆகிய அனைத்தும், அந்தந்தப் பருவங்களுக்குத் தக்கபடி பலன்களைத் தந்தன. மனிதனுடைய மனமும் தேகமும் வியாதிகளால் பீடிக்கப்படாமல் இருந்தன. தெய்வத்தாலும், பிறராலும், தன்னாலும் ஏற்படும் தொல்லை எதுவும் மனிதனுக்கு நேரவில்லை.

இப்படி யுதிஷ்டிரர் ராஜ்யபாரம் செய்து வரும்போது, சில மாதங்கள்வரை, கிருஷ்ணன், அத்தினாபுரத்தில் இருந்தார். தம் நண்பர்கள் ஆறுதல் அடையும் பொருட்டும், தம் தங்கை சுபத்திரையின் உள்ளம் களிப்படையும் பொருட்டும், கிருஷ்ணன் அத்தினாபுரத்தில் தங்கினார்.

பிறகு அவர்கள் அனைவரிடமும் விடை பெற்றுக் கொண்டு தேரில் ஏறிக்கொண்டு துவாரகைக்கு அவர் புறப்பட்டார்.

கிருஷ்ணன் அத்தினாபுரத்தைவிட்டுப் போவதைக் குறித்து, குந்தி, திரௌபதி, சுபத்திரை முதலான பெண் மணிகள் பெரிதும் வருந்தினார்கள்.

ஒருவனுக்கு நல்லோருடன் தொடர்பு ஏற்பட்டு விடுமேயானால், அதன் பயனாய், தீயோருடன் அவனுக்கு இருந்துவரும் தொடர்பு விலகிப் போகிறது. அதனால் இறைவனுடைய புகழைச் செவிமடுக்கவும், அவனுடைய கதையைக் கேட்கவும் வாய்ப்பு உண்டாகிறது. இறை

வனுடைய கதைகளைக் கேட்பதில் ஒரு முறை நாட்டம் ஏற்பட்டுவிடுமாயின், பிறகு, அதை விட்டுவிட யாருக்கும் மனம் வராது. அப்படி இருக்கும்போது, இறைவனுடன் கூடவே இருந்து, அவருடைய நடையுடை பாவனைகளில் பங்குகொண்டு கலந்து பழகியவர்களுக்கு அவரைவிட்டுப் பிரிய மனம் வருமா?

ஆகவே, பாண்டவர்கள், கண்கொட்டாமல் பிரியத்துடன் கிருஷ்ணனைப் பார்த்துக்கொண்டே நின்றார்கள்; அவர்களுடைய மனமோ அவரைப் பின்தொடர்ந்து போயிற்று.

கிருஷ்ணன் அரண்மனையை விட்டு வெளியே வந்த சமயம், கண்ணீர் உகுப்பது அமங்கலம் என்று கருதி, சுபத்திரை முதலான மாதர்கள், வந்த கண்ணீரை அடக்கிக்கொண்டார்கள். மிருதங்கம், சங்கம், பேரி, வீணை, கொம்பு முதலிய வாத்தியங்கள் முழங்கின.

குரு குலத்தைச் சேர்ந்த மாதர்கள், உப்பரிகையில் நின்றுகொண்டு, அன்போடும் சிரிப்போடும் நாணத்தோடும் கிருஷ்ணனைப் பார்த்து, அவர்மீது மலர்மாரி பொழிந்தார்கள்.

கண்ணனிடத்தில் மிகுந்த பிரியமுள்ள அர்ச்சுனன், இரத்தினக் காம்பும் முத்துச் சரங்களும் கொண்ட வெள்ளைக் குடையைப் பிடித்தான். உத்தவரும் சாத்யகியும் வெண்சாமரங்களை விசிறினார்கள். மலர் தூவி மக்கள் மரியாதை செய்தபடியால், கிருஷ்ணன் சோபையுடன் திகழ்ந்தார். மனிதன் என்ற முறையில் பொருத்தமுற்றதும் இறைவன் என்ற முறையில் பொருத்தமற்றதுமான ஆசிகளை, அந்தணர்கள் ஆங்கு ஆங்கே கண்ணனுக்குச் சொன்னார்கள்.

குருகுலத்து மாதர்களோ, கிருஷ்ணனுடைய மகிமை பற்றியும், அவர் திருமாலின் அவதாரமே என்பது

பற்றியும் தங்களிடையே அன்பு ததும்பப் பேசிக்கொண்டார்கள்.

"அடி தோழி! மறைகளில் மறைந்து இருக்கும் நுட்பங்களை அறிந்து, உணர்ந்து, பெரியோர்கள் எவனுடைய புகழைப் பாடிப் பரவுகிருர்களோ, அந்தப் பரமாத்மா தான் இந்தக் கிருஷ்ணன். உலகத்தைப் படைத்தும் காத்தும் அழித்தும் லீலைகள் புரிந்தபோதிலும் அவற்றில் பற்றுதல் இன்றி, எவன் ஒருவன் தனித்து நிற்கும் இறைவனே, அவனே இந்தக் கண்ணபிரான்" என்று தங்களுக்கிடையே பேசிக்கொண்டார்கள்.

இப்படிப் பெண்கள் எல்லாரும் பேசுவதை, செவிமடுத்துக்கொண்டே கண்களில் புன்னகை மலர, கண்ணபிரான் வீதியில் சென்ருர்.

அன்பின் மிகுதியாலும் பிரிய மனமில்லாமையாலும் யுதிஷ்டிரன் முதலிய குருகுல வீரர்கள் கண்ணனைத் தொடர்ந்து சென்ருர்கள்.

தம் அன்பர்களான பாண்டவர்களுக்கு நல்வார்த்தைகளைச் சொல்லி, கிருஷ்ணன் திருப்பி அனுப்பினுர்.

பிறகு துவாரகையை நோக்கி அவர் சென்ருர். அனேக நாடுகளைக் கடந்து, மாலை நேரத்தில், நீர்நிலை இருக்கும் ஒரு இடத்துக்குச் சென்று, சந்தியாவந்தனம் முதலியவற்றைச் செய்தார் கண்ணன்.

## துவாரகையில் வரவேற்பு

செழிப்பு மிகுந்த தம் சொந்த நாடான ஆனந்த நாட்டைக் கிருஷ்ணன் அடைந்தார். தம்மைவிட்டுப் பிரிந்திருக்க நேர்ந்ததனுல் கவலையுற்று இருக்கும் அந்த நாட்டு மக்களின் மனத்தை மகிழ்விக்கும் பொருட்டு, தாம் வந்துவிட்டதை அறிவிக்கும் வகையில், தமது சங்கத்தை எடுத்து, கிருஷ்ணன் ஊதினுர்.

வெண்மை நிறமுள்ள அந்தச் சங்கம், கிருஷ்ணனின் செம்பவள உதடுகள் ஊதுவதன் காரணமாக, சிவந்து பிரகாசித்து, தாமரை மலரின் இடையே இருந்து ஒலிக்கின்ற அன்னப் பறவைபோல, காட்சி அளித்தது.

கிருஷ்ணன் செய்யும் சங்கநாதத்தைக் கேட்டதும், கவலையை மறந்து, மக்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். தீயோருக்குப் பயத்தை உண்டுபண்ணுகிற அந்தச் சங்கின் முழக்கத்தைக் கேட்டதும், மக்கள் மகிழ்ச்சியடைந்து, தங்கள் பிரபுவான கிருஷ்ணனை எதிர் கொண்டு வரவேற்கப் புறப்பட்டார்கள். ஒளியால் நிறைந்த சூரிய பகவானிடம் விளக்கை எடுத்துச் செல்வதை ஒப்ப, பரிபூரணனான கிருஷ்ணனிடம் அன்பு மேலீட்டால் அவர்கள் காணிக்கைகளை எடுத்துச் சென்றார்கள்; தந்தையைக் கண்ட குழந்தைகள்போல, மலர்ந்த முகத்துடன், காணிக்கைகளைக் கிருஷ்ணனிடம் சமர்ப்பித்தார்கள்; மகிழ்ச்சிப் பெருக்கால் அவர்களால் பேச முடியவில்லை; ஆகவே, தழுதழுத்த குரலில் அவர்கள் பேசினார்கள். "நான்முகன் ஜனகன் முதலியோர் போற்றிய உமது திருவடிகளை நாங்கள் வணங்குகிறோம். எங்களுக்குத் தாயும் தந்தையும் நண்பனும் குருவும் நாதனும் நீரே! மேலான தெய்வமும் நீரே! உம்மைப் பணிந்து நாங்கள் பேறு பெற்றவர்களானோம்! அருகே இருந்து உமது திருமேனியைத் தரிசிக்கும் பேறுபெற்ற நாங்கள் பாக்கியசாலிகள்" என்று பலவாறு சொல்லித் துதித்தார்கள்.

இப்படித் தன்னைத் துதித்து வரவேற்கும் மக்களை, அருள்பொழியும் தமது கண்களால் பார்த்துக்கொண்டே கிருஷ்ணன் துவாரகைக்குள் சென்றார்.

போகவதி என்னும் நகரை, நாகர்கள் காப்பதுபோல துவாரகை நகரத்தை, பலசாலிகளான போஜர்கள், மனுக்

கள் அந்தகர்கள், விருஷ்ணிகள் ஆகியோர் பாதுகாத் தார்கள்.

எல்லாக் காலங்களிலும் மலர்களும் கனிகளும் தரும் புண்ணிய விருட்சங்கள் அந்த நகரில் இருந்தன. நந்த வனங்கள், பழத் தோட்டங்கள், பூங்காக்கள், தாமரை யோடைகள் முதலியன அந்த நகருக்கு அழகைத் தந்தன. ஆசார வாசல்களிலும் வீட்டு வாசல்களிலும் மங்கள கரமான தோரணங்கள் கட்டுப்பட்டு இருந்தன.

வெய்யலின் கொடுமை தோன்ருதபடி நிழல் நிரம்பி யனவாயும், கொடிகளால் அலங்கரிக்கப்பட்டும் வீதிகள் காட்சி அளித்தன. ராஜவீதி, கடைவீதி, நாற்சந்திகள் முதலியன குப்பை கூளங்கள் இன்றிச் சுத்தமாய் இருந் தன. பழங்கள், அட்சதைகள், மலர்கள் முதலியன வீதி களில் இறைக்கப்பட்டுக் கிடந்தன. பூரண கும்பங்கள், தூபங்கள், தீபங்கள், பலிகள், கரும்புக் கழிகள், கோலங்கள் ஆகியவற்ருல் அலங்கரிக்கப்பட்டு இருந் தன. நறுமணம் கமழும் நீர் வீதிகளில் தெளிக்கப்பட்டு இருந்தது.

கண்ணன் வருகிருர் என்பதை அறிந்ததும், மகிழ்ச்சி யடைந்து வசுதேவர், அக்ரூரர், உக்கிரசேனன், பலராமன், பிரதியுத்மனன் ஆகியோர், பரபரப்படைந்து தேர்களில் ஏறிக்கொண்டு, கிருஷ்ணனை எதிர்கொண்டு வரவேற்கப் புறப்பட்டார்கள்.

பட்டத்து யானையும் பிராமணர்களும் இவர்களுக்கு முன்னே சென்ருர்கள்; சங்கம், துரியம் முதலிய வாத்தி யங்கள் முழங்கின. வேதங்களின் கோஷங்களும் செவி யில் விழுந்தன.

ஆடியும் பாடியும் துதித்தும் தோத்திரம் செய்தும் கிருஷ்ண பகவானை அந்த நகர மக்கள் வரவேற்ருர்கள்.

அப்போது கண்ணன் சிலரைத் தலையால் வணங்கினார்; சிலரை வார்த்தையால் வணங்கினார்; சிலரைத் தழுவிக்கொண்டார்; சிலரைக் கையில் பிடித்துக் கொண்டார்; சிலரைப் பார்த்துப் புன்னகை பூத்தார்; சிலரைக் கடைக் கண்ணால் நோக்கினார்.

இப்படி அவரவர் தகுதிக்குத் தகுந்தபடி தம்மை வரவேற்க வந்திருந்தவர்களுக்கு, கிருஷ்ணன் மரியாதை செய்தார்; சண்டாளன் முதலிய அனைவருக்கும் சன்மானங்கள் வழங்கினார்.

அந்தணர், குருமார்கள், ஆசாரியர்கள் ஆகியோர், கிருஷ்ணனுக்கு ஆசி சொல்லி வரவேற்றார்கள்; ராஜ குலப் பெண்டிர்கள் ராஜ வீதியில் உப்பரிகைமீது ஏறி, கண்ணனை வரவேற்றார்கள். கண்ணனுடைய அழகையும் தோற்றத்தையும், எவ்வளவுதான் பார்த்தபோதிலும் அவர்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை.

கிருஷ்ணன், வசுதேவர், தேவகி முதலியோர் இருக்கும் அரண்மனைக்குள் சென்று அவர்களை வணங்கினார்.

அவர்களும் கிருஷ்ணனைத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

இதன் பின்னர், தம் மனைவியர்கள் வாழும் அரண்மனைகளுள்ள பகுதிகளுக்குக் கிருஷ்ணன் சென்றார். கண்ணனுக்குப் பதினாயிரம் மனைவியர்கள் உண்டு. தம் கணவர் அருகில் வரக் கண்டதும் உள்ளமும் உடலும் பூரிக்க, மகிழ்ச்சியுடன் ஆசனத்தைவிட்டு அவர்கள் எழுந்தார்கள். முதலில் அவரை அவர்கள் மனத்தால் தழுவினார்கள்; பிறகு கண்களால் தழுவினார்கள்; அதன் பின்னர், தங்கள் புதல்வர்களை முன்னிட்டுக்கொண்டு, கைகளால் தழுவினார்கள்.

எந்தப் பெண்கள் தங்கள் அழகினாலும் கவர்ச்சியாலும், மன்மதனை மதிமயங்கச் செய்து, அவன் வைத்

திருக்கும்வில்லையும் நழுவி விழச் செய்வார்களோ, அந்தப் பெண்களே, கிருஷ்ணனைக் கவர வலிமையற்று இருந்தார்கள்.

உலகப்பற்று இல்லாத கிருஷ்ண பகவானை, தங்களைப் போலவே ஒரு மனிதராகப் பாவித்து, மாந்தர்கள் அவரை உலகப்பற்று உள்ளராவ நினைக்கிறார்கள். என்னே இவர்களின் மடமை!

## பரீட்சித்தின் பிறப்பு

கிருஷ்ணன் துவாரகைக்குச் சென்ற பிறகு, யுதிஷ்டிரர், தந்தையைப்போல் பற்று இன்றி நாட்டைப் பாதுகாத்து வந்தார். அவருடைய புகழும் பெருமையும் சொர்க்கம்வரை பரவின. சித்தத்தை இறைவன்பால் வைத்து, அதிலேயே லயித்துவிட்ட காரணத்தால், மற்ற போக நுகர்ச்சிகளில் யுதிஷ்டிரரின் நாட்டம் செல்லவில்லை.

அசுவத்தாமா ஏவின பிரம்மாத்திரன் வேகம் தாக்காதபடி, கிருஷ்ண பகவான், உத்தரையின் கருப்பத்தில் வளரும் குழந்தையைப் பாதுகாத்தார். தன் தாய் வயிற்றில் வளரும்போதே, திருமாலைத் தரிசிக்கும் பேறு, அந்தக் குழந்தைக்குக் கிட்டியது.

ஒன்பதாவது மாதம் பூர்த்தியானதும், குழந்தை பார்த்துக்கொண்டிருக்கும்போதே திருமால் அங்கிருந்து மறைந்தார்.

கிரகங்கள் நல்ல நிலையில் அமைந்திருக்கும் நல்ல வேளையில், பாண்டுவின் குலத்தை விருத்தி செய்யும் பொருட்டு, பாண்டுவே மீண்டும் வந்து பிறந்ததுபோல, குழந்தை பரீட்சித்து பிறந்தான்.

யுதிஷ்டிரர் மகிழ்ச்சி அடைந்து, செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாம் முறைப்படி செய்தார்; தான தர்மங்களையும் செய்தார்.

அந்தணர்கள் மகிழ்ச்சியுடன் அவற்றைப் பெற்றுக் கொண்டனர். "திருமாலின் அனுக்கிரகத்தால் பிறந்த குழந்தையாகையால், இவன் சிறந்த திருமால் பக்தனைத் திகழ்வான்; விஷ்ணுராதன் என்னும் பெருமைப் பெயர் இவனுக்கு ஏற்படும்" என்று சொன்னார்கள்.

அப்போது யுதிஷ்டிரர் அந்தப் பிராமணர்களிடம், "எங்கள் முன்னோர்கள் பெருங் கீர்த்தியுடன் விளங்கியதைப்போல, இவனும் கீர்த்தியுடன் விளங்குவானா?" என்று கேட்டார்.

அப்போது அந்தணர்கள் அவரை நோக்கி, "குந்தியின் புதல்வரே! இட்சவாகு மன்னனைப்போல் குடிமக்களை இவன் பாதுகாப்பான்.

"தயரதன் புதல்வன் இராமனைப்போல, அந்தணர்களை ஆதரிப்பான்.

"இவன் எடுத்துக்கொள்ளும் உறுதிமொழிகள் வீண்போகா!

"அடைக்கலம் என்று அண்டியவர்களை,சிபிச் சக்கரவர்த்திபோல, இவன் காப்பாற்றுவான்.

"துஷ்யந்தன் புதல்வன் பரதனைப்போல் உற்றார் உறவினர்களுக்கு உதவிபுரிவான்.

"வில்லாளிகளில் அர்ச்சுனனைப்போல் விளங்குவான். பூமியைப்போல் பொறுமையுடன் திகழ்வான்.

"பெரியோரை அடுத்து நற்காரியங்கள் பலவற்றைச் செய்து புகழுடன் விளங்குவான்" என்று சொன்னார்கள்.

பிறந்த பின்னர், தமது கருப்ப வாசத்தில் கண்ட திருமால் இவன்தானோ, இவன்தானோ என்று பரீட்சித்த வண்ணம் இருந்தபடியால், இவனுக்குப் பரீட்சித்து என்ற பெயர் உண்டாயிற்று.

வளர்மதிபோல நாளுக்கு நாள் பரீட்சித்து விருத்தி அடைந்து வந்தான். கல்விகளிலும் கலைகளிலும் சிறப்புற்று விளங்கினான்.

இது சமயம், உற்றார் உறவினர்களைப் போரில் கொன்ற பாவத்தைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு, யுதிஷ்டிரர் அசுவமேத யாகம் ஒன்று செய்ய விரும்பினார்.

அதற்குப் போதிய அளவு பொருள் யுதிஷ்டிரரிடம் இல்லை. ஆகவே, வடக்கே சென்று, மருத்தன் செய்த யாகத்தில் மிகுந்து இருக்கும் பொருள்களைச் சேகரித்து வந்து, அசுவமேத யாகத்தை யுதிஷ்டிரர் மூன்று முறைகள் செய்தார். யாகங்கள் முடிந்ததும் யுதிஷ்டிரரிடம் விடைபெற்றுக்கொண்டும், அர்ச்சுனனை அழைத்துக் கொண்டும், கிருஷ்ணன் துவாரகைக்குப் போய் விட்டார்.

* * *

இதன் பின்னர், விதுரர் தீர்த்த யாத்திரைக்குக் கிளம்பினார். அப்போது மைத்திரேய மகரிஷியைச் சந்தித்து அவரிடம் ஆத்ம ஞான உபதேசம் பெற்றார். ஆத்மாவுக்குப் புகலிடம் திருமால் என்பதை அறிந்து, மற்ற எதிலும் விருப்பம் இல்லாதவராய் விதுரர் அத்தினாபுரம் திரும்பினார்.

விதுரர் திரும்பி வருகிறார் என்பதை அறிந்த யுதிஷ்டிரர், தம்பி முதலியவர்களுடனும் திருதராட்டிர மன்னனுடனும் சேர்ந்து சென்று தம் உறவினரான விதுரரை முறைப்படி வரவேற்றார்; ஆனந்தக் கண்ணீர் வடிய விதுரரைத் அன்போடு தழுவிக்கொண்டார்; அழைத்து வந்து ஆசனத்தில் அமரச் செய்து முறைப்படி பூசித்தார்.

இதன் பின்னர் உணவு அருந்திவிட்டு, களைப்பு நீங்கி, விதுரர் ஆசனத்தில் உட்கார்ந்து இருந்தார். அப்

போது யுதிஷ்டிரர் அவரை அணுகி, தலைதாழ்த்தி வணங்கினார். பிறகு அவரை நோக்கி "உமது அருளால் அபாயங்களிலிருந்து நாங்கள் தப்பிப் பிழைத்தோம் அல்லவா? அது தங்களுக்கு நினைவு இருக்கிறதா? தாங்கள் மேற்கொண்ட தீர்த்த யாத்திரை சிறப்பாக முடிந்ததா? அப்போது உணவு முதலியவற்றுக்குத் தாங்கள் என்ன செய்தீர்கள்? எந்த எந்தத் தீர்த்தங்களில் தாங்கள் நீராடினீர்கள்? எந்த எந்தப் புண்ணியத் தலங்களைத் தரிசித்தீர்கள்? யார் யாரைச் சந்தித்தீர்கள்?" என்று கேட்டார்.

யுதிஷ்டிரர் கேட்ட கேள்விகளுக்கு விதுரர் பதில் சொன்னார். தான் தரிசித்த தீர்த்தங்களையும் தலங்களையும் பற்றி, யுதிஷ்டிரருக்குக் கூறினார். ஆனால், யது குலத்துக்கு நேர்ந்த அழிவைப் பற்றி மட்டும் விதுரர் சொல்லவில்லை.

பிறகு சிறிது காலம்வரை, ஆத்ம சம்பந்தமான போதனைகளைத் திருதராட்டிரன் முதலானவர்களுக்குச் உபதேசித்தார் விதுரர். கால மாறுபாட்டினால் ஏற்பட இருக்கும் விபரீத விளைவுகளைப் பற்றி விதுரர் சிந்தித்தார்.

ஆகவே அவர் திருதராட்டிரனை நோக்கி, "அரசே! காலம் தீமையால் மாறிக்கொண்டு வருவதைப் பாரும். எந்த இடத்தில் இருந்தாலும் சரி, காலத்தினால் ஏற்படும் விபரீத விளைவுகளிலிருந்து யாராலும் தப்ப முடியாது; அந்த விபரீத காலம் நம்மையும் அணுகி வருகிறது. ஆகையால் நகரத்தைவிட்டு நாம் போய்விட வேண்டும். உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும் காலம் நெருங்கும் போது, பணம் முதலியவற்றைப்பற்றிக் சஞ்சலப்படுவதால் யாது பயன்? தந்தை, சகோதரர்கள், நண்பர்கள், உறவினர், புதல்வர்கள் ஆகியோர் போரில் மாண்டு

போனார்கள். நீரோ நரை திரை மூப்பினால் நலிந்து இருக்கிறீர். கண்களும் உமக்கு இயல்பிலேயே தெரியவில்லை. மூப்பின் காரணமாக உமக்குக் காதுகளும் மந்தமாகி விட்டன; பற்களும் விழுந்துவிட்டன; புத்தியும் குறைந்து இருக்கிறது; வயிற்றுப் பசியும் மந்தமாகி விட்டது. நோய்களாலும் நொந்து போய் இருக்கிறீர். இவ்வளவு இக்கட்டான நிலையிலும் இன்னும் நீர் உயிர் வாழப் பிரியப்படுவது விந்தையாய் இருக்கிறது. நாய்க்குப் போடுவதுபோல், பீமன் உமக்குப் போடும் உணவை உண்டு உயிர்வாழ நீர் ஆசைப்படுவது பெருமையா? அப்படி வாழ்வதும் ஒரு வாழ்வு ஆகுமா? ஆகவே, பற்றுகளை எல்லாம் அறுத்து எறிந்துவிட்டு, திருமாலைத் தியானித்துக்கொண்டு, இல்லத்தைவிட்டுப் புறப்படும். அப்பொழுதுதான் மேலான கதியை நீர் அடையலாம்'' என்று சொன்னார்.

தம்பி விதுரன் சொன்ன வார்த்தைகளைச் செவி மடுத்த திருதராட்டிரன் வைராக்கியம் அடைந்தான். பந்த பாசங்களை எல்லாம் உதறி எறிந்துவிட்டு, அரண்மனையிலிருந்து வட திசை நோக்கிக் கிளம்பினான்; கற்பரசியான காந்தாரியும் தன் கணவன் பின்னே சென்றாள். வீரர்களுக்குப் போர் மகிழ்ச்சியைக் கொடுப்பதுபோல், ஒழிவடைந்தவர்களுக்கு இமய மலை மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

அன்று தினம் காலையில் அரசர் யுதிஷ்டிரர் சந்தியா வந்தனம் முதலியவற்றை முடித்துக்கொண்டார்; அந்தணர்களுக்குத் தானங்களை வழங்கினார்.

அதன் பின்னர், வழக்கப்படி, திருதராட்டிர மன்னனைத் தரிசித்து வணங்கும் பொருட்டு வந்தார். அரண்மனைக்கு வந்து பார்த்தபோது, திருதராட்டிரன், காந்தாரி, விதுரர் ஆகியோரைக் காணாமல் திகைத்து நின்றார்.

பிறகு, அங்கு இருக்கும் சஞ்சயனை நோக்கி, "காவல் கணானுடைய புதல்வரே! என் தந்தை திருதராட்டிர மன்னர் எங்கே? என் தாய் காந்தாரி எங்கே? இவர்கள் கூடவே இருக்கும் விதுரர் எங்கே? ஒருவரையும் காணேமே! அவர்கள் எல்லாரும் எங்கே போயிருக்கிருர்கள்? நான் ஏதாவது பிழை செய்ததன் பயனுய் அவர்கள் போய்விட்டார்களா? சொல்லும்" என்று கேட்டார்.

திருதராட்டிரன் முதலானவர்களைக் காணவில்லை என்பது தெரிய வந்ததும், சஞ்சயன் பெரிதும் சஞ்சலப் பட்டார். கவலையின் காரணமாக, சிறிது நேரம் அவரால் பேச முடியவில்லை. கண்கள் சொரிந்த நீரைத் துடைத்துக்கொண்டே, மனத்தைச் சிறிது திடப்படுத்திக் கொண்டார். பிறகு, யுதிஷ்டிரரிடம் "அவர்கள் எங்கு போனுர்கள் என்பதை நானும் அறியேன்; எனக்கும் தெரியாமல் என்னை அவர்கள் ஏமாற்றிவிட்டார்கள்" என்று கவலை தொனிக்கச் சஞ்சயன் பதில் சொன்னுர்.

இப்படி இவர்கள் இருவரும் உரையாடிக்கொண்டிருக்கும் சமயத்தில், தும்புருவை அழைத்துக்கொண்டு நாரதர் அங்கு வந்து சேர்ந்தார்.

அவரைப் பார்த்ததும், யுதிஷ்டிரன் முதலானவர்கள் எழுந்து முறைப்படி அவரை வரவேற்றனர். பின்பு அவரை நோக்கி, "முனிவர் பிரானே! தெய்வாதீனத்தால் உம்மைத் தரிசிக்கும் பேறு எங்களுக்குக் கிடைத்தது. எங்கள் தந்தை திருதராட்டிர மன்னரும் விதுரரும் எங்கு போனுர்களோ தெரியவில்லை; எங்கள் தாய் காந்தாரியையும் காணும். அவர்கள் எங்கே போய் இருப்பார்கள் என்பதும் தெரியவில்லை. அதனுல் நாங்கள் சோகக் கடலில் ஆழ்ந்து இருக்கிருேம். எங்கள் கவலை அகலும்படி தாங்கள் செய்ய வேண்டும். அவர்கள் மூவரும் எங்கே

போயிருப்பார்கள் என்பதைத் தாங்கள் தெரிவிக்க வேண்டும்'' என்று வேண்டினுர்.

உடனே நாரதர் அவரிடம், ''அரசே! உமக்கு இருக்கும் கவலையை விட்டொழியும். உலகில் நடப்பவை அனைத்தும் தெய்வத்தின் திருவுளப்படி நடை பெறுகின்றன. மனிதர்கள் சேர்வதும் பிரிவதும் தெய்வ சங்கல்பத்திஞல் நடைபெறுகின்றன. நான், எனது என்னும் பற்றுதலே, சோகத்துக்கும் அறியாமைக்கும் காரணம் ஆகும். ஆகவே, நான் எனது என்னும் மோகத்தை விட்டுவிடு. நான் இல்லாமல் அவர்களால் வாழ முடியுமா என்ற கவலையையும் விட்டுவிடு'' என்று சொன்னுர்.

மேலும் அவர் தொடர்ந்து, ''அரசே! உம் தந்தை திருதராட்டிரன் தம்பி விதுரனுடனும், மனைவி காந்தாரியுடனும், இமய மலையின் தென் பாகத்தில் முனிவர்களின் ஆசிரமத்தில் வசித்துக்கொண் டிருக்கிருன். கங்கை உற்பத்தியாகும் இடத்தில் இருந்துகொண்டு நாள் தோறும் அதில்நீராடுகிருன்; அதன் நீரை அருந்துகிருன். ஆசைகளை ஒழித்து, பொறி புலன்களைக் கட்டுப்படுத்தி, மனதை அமைதியாக்கிக்கொண்டு, சித்தத்தைத்தெய்வத்தின்பால் செலுத்தித் தியானம் செய்து வருகிருன். இன்னும் ஐந்தாவது நாளில், தேகம் என்னும் கட்டையை அவன் விட்டுவிடுவான். அப்போது உடன் கட்டை ஏறி, காந்தாரியும் இறந்துபோவாள். அதன் பின்னர், விதுரரும் தீர்த்த யாத்திரை போய்விடுவார். அவர்களைப் பார்ப்பதற்கோ அல்லது இங்கே அழைத்து வரும் பொருட்டோ நீ செல்ல வேண்டாம்'' என்று சொல்லிவிட்டு, தும்புருவை அழைத்துக்கொண்டு, நாரதர் போய்விட்டார்.

நாரதர் கூறின வார்த்தைகளைச் செவிமடுத்த யுதிஷ்டிரர் மன ஆறுதல் பெற்ருர்.

## மேலான கதி

உற்றார் உறவினர்களைப் பார்க்கும் பொருட்டும், புண்ய ஸ்லோகனான கிருஷ்ண பரமாத்மாவோடு அளவளாவும் பொருட்டும் அர்ச்சுனன் துவாரகைக்குச் சென்று இருந்தான். அப்படிச் சென்றவன், சில மாதங்கள் ஆகியும், அத்தினாபுரத்துக்குத் திரும்பவில்லை.

இது சமயம் அத்தினாபுரத்தில், குருகுலத் தோன்றலான யுதிஷ்டிரர் பயங்கரமான சில அபசகுனங்களைக் கண்டார். காலம் மாறுபாடு அடைந்து வருகிறது என்பதைப் பருவங்கள் மாறுபட்டுக் காட்டின. மனிதர்களுடைய நெஞ்சத்தில் பொய், கோபம், ஆசை முதலியன இடம் பெறலாயின. பாவ காரியங்களைத் துணிந்து செய்து, மக்கள் வாழ்க்கை நடத்தினார்கள். மக்கள் ஒருவரோடு ஒருவர் பேசும்பொழுது கபட எண்ணத்துடன் பேசினார்கள். கெட்ட எண்ணத்துடன் நண்பர்கள் கலந்து பழகினார்கள். தாய், தந்தை, நண்பர், உடன் பிறந்தார், கணவன் மனைவியர் இவர்களிடையே நேச பாவம் நிலவவில்லை. தகப்பன்மார்கள் பணம் வாங்கிக்கொண்டு, தங்கள் பெண்களைக் கலியாணம் செய்து கொடுத்தார்கள். தாய் தந்தையரைப் புதல்வர்கள் காப்பாற்றவில்லை. வேதம் ஓதுவதில் பிராம்மணர்கள் அக்கறை இல்லாது இருந்தார்கள்; சூத்திரர்களோ வேதங்களைப் படிக்கத் தொடங்கினார்கள். மக்களின் மனம் தீய சிந்தையிலும் உடல் தீய நடத்தையிலும் சென்றன.

"இவை மட்டுமன்றி, பல அபசகுனங்கள் நேருவதையும் யுதிஷ்டிரர் பார்த்தார். ஆகவே, அவர் தம் தம்பி பீமனைப் பார்த்து. "உறவினர்களையும் கண்ணனையும் பார்த்து வரும் பொருட்டு அர்ச்சுனன் துவாரகை சென்றான். ஏழு மாதங்கள் ஆகியும், இன்னும் அவன் திரும்பவில்லை. காரணம் இன்னது என்றும் தெரியவில்லை.

எவருடைய உதவியினுல் அரசு, மனைவியர், செல்வம், பகைவரை வெல்லுதல் முதலிய பேறுகளை நாம் பெற்ருேமோ, அந்தக் கிருஷ்ண பகவானின் அந்திம காலம் நாரதர் சொன்னது போல் வந்துவிட்டது போலும். அதனுல்தான் விண்ணிலும் மண்ணிலும் தேகத்திலும் பல அபசகுனங்கள் ஏற்படுகின்றன. எனது இடது கண், இடது தொடை, இடது தோள் ஆகியவை அடிக்கடி துடிக்கின்றன. இதயத்தில் நடுக்கம் ஏற்படுகிறது. விரைவில் ஏதோ தீமை நேரப் போகிறது என்பதை இவை அறிவிக்கின்றன. குள்ள நரியானது வாயில் எரிகொள்ளியைக் கௌவிக்கொண்டு, சூரியனைப் பார்த்து ஊளையிடுகிறது. நாயானது என்னைப் பார்த்து அழுதுகொண்டு குறைக்கிறது. பசு முதலிய உத்தம விலங்குகள் என்னை இடம் சுற்றிச் செல்கின்றன. கழுதை முதலிய அற்ப விலங்குகள் என்னை வலம் சுற்று கின்றன. குதிரைகள் அழுகின்றன. இதோ ஒரு மாடப் புரு மரண பயத்தை அறிவிக்கும் வகையில் கத்து கிறது. கோட்டானும் அதற்கு எதிரியான காக்கையும் சேர்ந்து கூவி, எனக்கு நடுக்கத்தை உண்டுபண்ணு கின்றன. பூமி நடுங்குகிறது; மேகமில்லாமல் ஆகாயம் சுத்தமாய் இருந்தும் இடியுண்டாகிறது; புழுதியைக் கிளப்பிக்கொண்டு கோரமாகக் காற்று வீசுகிறது. மேகங்கள் ரத்த மழை பொழிகின்றன. இவற்றை எல்லாம் பார்க்கும்போது, கிருஷ்ண பரமாத்துமா வினுடைய திருவடிகளின் வைப்புகளை இழந்து, பூமி தேவி, தனது பொலிவை இழந்துவிட்டாள்போல் தோன்றுகிறது'' என்று சொன்னுர்.

இவ்வாறு யுதிஷ்டிரர் கவலையுடன் பீமனிடம் கூறிக் கொண் டிருக்கும்போது, துவாரகையி லிருந்து அர்ச்சுனன், அத்தினுபுரத்துக்குத் திரும்பினுன். வந்தவன்

தன்னை வணங்கிவிட்டு, கவலையோடு கண்ணீர் உகுத்துக்கொண்டு தலை குனிந்து நிற்பதை யுதிஷ்டிரர் கவனித்தார். அவர், பயந்து போய் அர்ச்சுனனை நோக்கி. "அர்ச்சுனா! துவாரகையில், நம் உறவினர்கள் சௌகரியமாய் இருக்கின்றனரா? நம் அம்மான் வசுதேவர் எப்படி இருக்கிறார்? பக்தர்களைக் காப்பாற்றும் கிருஷ்ணன் துவாரகையில் சுகமாய் இருக்கிறாரா?" என்று கேட்டார்.

பிறகு மேலும் தொடர்ந்து, "அர்ச்சுனா! உன் முகம் வாட்ட முற்று இருக்கிறதே ஏன்? உனக்கு உடல் நலக் குறைவு ஏதும் ஏற்பட்டு இருக்கிறதா? உன்னை அங்கு இருப்பவர்கள் அன்போடு உபசரித்து மரியாதை செய்தார்களா? அல்லது யாரும் உன்பால் மதிப்புக் குறைவாய் நடந்துகொண்டார்களா?" என்று கேட்டார்.

இப்படி யுதிஷ்டிரர் பலவாறு கேட்டும் கவலையின் காரணமாக, அர்ச்சுனன் பதில் சொல்ல முடியாமல் இருந்தான். பிறகு, தன் தமையனை நோக்கி, "அரசே! உறவினரான கிருஷ்ணன் என்னை வஞ்சித்துவிட்டார்; எனது காந்தியை அவர் அபகரித்துக்கொண்டுவிட்டார். தன்னைவிட்டுக் கண்ணன் போய்விட்டதால், உயிரற்ற உடம்புபோல, பூமி தனது சோபை குன்றி இருக்கிறாள். எந்தப் பகவானுடைய ஆதரவினாலும் உதவியினாலும் செயற்கரும் காரியங்களை எல்லாம் செய்து முடித்து, பெயரும் புகழும்பெற்று நான் பெருமையடைந்தேனோ, அந்தப் பகவான், என்னைவிட்டுப் பிரிந்து என்னை வஞ்சித்துவிட்டார். அவருடைய மனைவியரைக் காப்பாற்ற முடியாமல் நான் கோபர்களிடம் தோல்வி யடைந்தேன். இந்தக் காண்டீபம், வில், தேர், குதிரை ஆகிய அனைத்தும் என்பால் இருப்பவைதான். பகவான் என்னுடன் இருந்தவரை, இவை அனைத்தும் எனக்குப்

பலனைத் தந்தன. பகவான் சொர்க்கம் போன பிறகு, சாம்பலில் பெய்த ஆகுதி போலவும், வஞ்சகனுக்குச் செய்த தானம் போலவும், களர் நிலத்தில் செய்த பயிர் போலவும், பயனற்றுப் போய்விட்டன. அரசே! நாலைந்து பெயர்களைத் தவிர்த்து, மற்ற யாதவர்கள் அனைவரும், அந்தண சாபத்தாலும், மது போதையாலும் ஒருவருடன் ஒருவர் அடித்துக்கொண்டு இறந்து போனார்கள்" என்று பதில் சொன்னான் அர்ச்சுனன்.

பூபாரத்தைக் குறைத்துவிட்டு, கிருஷ்ண பகவான் வைகுந்தம் சென்ற பிறகு, கலியுகம் ஆரம்பம் ஆயிற்று அதனால் நாட்டிலும், ஊரிலும், வீட்டிலும், மக்கள் நிலை தவறி நடந்தார்கள்; பொய் பேசினார்கள்; கபடமாய்ப் பேசினார்கள்; முறைப்படி தான தர்மங்களைச் செய்யாது இருந்தார்கள்; ஒருவரை ஒருவர் இம்சித்தார்கள்.

இவற்றை எல்லாம் கவனித்த யுதிஷ்டிரர் தாமும் இந்த உலகத்தைவிட்டுப் போக முடிவுசெய்தார். ஆகவே, அர்ச்சுனனின் பேரனை பரீட்சித்தை, அத்தினாபுரிக்கு அரசன் ஆக்கி, அபிஷேகம் செய்தார்.

பிறகு ஆடை ஆபரணங்கள் முதலியவற்றைக் களைந்து வைத்தார். மனத்தைப் பிரம்மத்தினிடம் செலுத்தினார். மரவுரியை உடுத்திக்கொண்டு, வடக்கு நோக்கிப் புறப்பட்டார். அவருடைய தோற்றம் பித்தன்போல இருந்தது. உண்ணாமலும் பேசாமலும் அவர் வழி நடந்து சென்றார்.

அவருடைய தம்பியரும், உலகப் பற்றை விடுத்து, தங்கள் தமையனைப் பின்தொடர்ந்தார்கள்.

அப்படிச் சென்றவர்கள், இறைவனுடைய திருவடித் தாமரைகளில் மனத்தைச் செலுத்தி, வேறு எண்ணமில்லாதவர்களாய் சித்த சுத்தியுடன் சென்று, உயிர்கள் அடைய வேண்டிய மேலான கதியை அடைந்தார்கள்.

## கலிபுருடன் இருக்கும் இடங்கள்

பாண்டவர்கள் சென்ற பின்பு, அத்தினபுரத்தில் அரசனாக இருந்துகொண்டு, நாட்டை உத்தரையின் புதல்வன் பரீட்சித்து பரிபாலித்து வந்தான். அவன் பிறந்த அன்று அந்தணர்கள் கூறியபடி, பரீட்சித்து மன்னன் திருமாலின் சிறந்த பக்தனாக விளங்கினான்.

உத்தரனுடைய மகள் இராவதி என்பவளை, பரீட்சித்து மன்னன் திருமணம் செய்துகொண்டான். ஜனமேஜயன் முதலிய நான்கு புதல்வர்களை அவன் பெற்றான்.

பரீட்சித்து மன்னன், கிருபரைக் குருவாகக் கொண்டு, மூன்று அசுவமேத யாகங்களைக் கங்கைக் கரையில் நடத்தினான்.

அதன் பின்னர் திக்விஜயம் செய்யப் புறப்பட்டான்.

தான் திக்விஜயம் செய்த காலத்தில், தம் மூதாதையரின் புகழை மக்கள் பாடிப் பரவுவதைக் கண்டு, பரீட்சித்து மன்னன் மகிழ்ச்சி அடைந்தான். அவரவர் திறமைக்கு ஏற்ப, மக்களுக்கு வெகுமதிகளையும் அவன் வழங்கினான்.

பாண்டவர்களிடம் அன்பு பூண்டிருந்த பகவான், அவர்களின் பொருட்டு செய்த உதவிகளையும் தொண்டுகளையும் கேள்வியுற்று, கிருஷ்ணனிடம் பரீட்சித்து மன்னன், அளவற்ற பக்திகொண்டான்.

ஒரு நாள் பரீட்சித்து மன்னன் ஒரு ஆச்சரியத்தைக் கண்டான். அப்போது தருமதேவதை ஒற்றைக் காலால் பூமியில் உலவி வந்தபோது, குழந்தைகள் இறந்துபோனதால் வருத்தப்படும் தாய்போல, பசு உருவில் பூமிதேவி கவலையுடன் இருப்பதைப் பார்த்தது. கண்ணீர் உகுக்கும் அந்தப் பசுவை நோக்கி, காளை ரூபத்தில் வந்த தரும

தேவதை, ''மங்களமானவளே! நீ சுகமே யிருக்கிருயா? உனது முகம் வாட்டமடைந்து இருக்கிறதே ஏன்? எதன் பொருட்டு நீ கவலைப்படுகிருய்? அரசர்கள் சரியாக நடக்க வில்லை என்பதற்காக நீ கவலைப்படுகிருயா? அல்லது தருமமாகிய நான் ஒற்றைக் காலால் நிற்பதை நினைந்து கவலைப்படுகிருயா? அல்லது பூபாரத்தைக் குறைத்து விட்டு, பரம பதம் சேர்ந்திருக்கும் கிருஷ்ண பகவானை நினைந்து கவலையில் ஆழ்ந்து இருக்கிருயா? அல்லது காலத்தின் மாறுபாட்டினுல் உனது அழகு குன்றிப் போய் இருக்கிறதா?'' என்று வினவினுர்.

இப்படித் தருமதேவதை வினவியதும், கிருஷ்ண பரமாத்மாவின் பிரிவாற்ருமையினுல் தான் வருந்துவதா கப் பசு பதில் சொல்லிற்று.

இப்படி இருவரும் பேசிக்கொண் டிருக்கும் சமயம், சரஸ்வதி நதிக்கரை அருகே, பரீட்சித்து மன்னன் வந் தான்.

அப்போது ஒரு சூத்திரன் அந்தப் பசுவையும் எரு தையும் தடியால் அடிப்பதைப் பரீட்சித்து மன்னன் பார்த்தான்.

அடியைத் தாங்க முடியாமல், ஒற்றைக் காலால் நின்று, எருது வருந்திற்று. பால் கொடுக்கும் அந்தப் பசுவானது, கன்றில்லாமல் அழுதுகொண்டிருந்தது

தேரில் வந்துகொண்டிருந்த பரீட்சித்து மன்னன் இதைப் பார்த்ததும் கோபம் கொண்டான். வில்லை நாணில் பூட்டி வைத்துக்கொண்டு அந்த மனிதனை நோக்கி, "ஏ மடையா! நீ யார்? நான் ஆட்சிபுரியும் இந்த நாட்டில் பலமில்லாதவர்களை நீ ஏன் துன்புறுத்துகிருய்? கிருஷ்ணனும் அர்ச்சுனனும் இந்தப் பூமண்டலத்தை விட்டுப் போய்விட்டார்கள் என்ற தைரியத்தில் நீ இவ் வாறு செய்கிருயா?" என்று கேட்டான்.

பிறகு வாட்டமுற்று ஒற்றைக் காலால் நிற்கும் எருதைப் பார்த்து, "எருது ரூபத்தைத் தாங்கி, ஒற்றைக் காலால் நீர் சஞ்சரிப்பதன் நோக்கம் யாது? தேவதைகளுக்குள் நீர் யார்? துன்பப்படுபவர்களைக் காப்பது தான் அரசரின் தலையாய கடமை. ஏ எருதே! இவனை நான் தண்டிக்கிறேன். உனது மூன்று கால்களையும் வெட்டினவன் யார்? அதைச் சொல். குற்றம் செய்யாதவர்களைக் கொடுமைப்படுத்துபவன் ஒருபோதும் தண்டனையிலிருந்து தப்ப முடியாது." என்று கூறிக் கேட்டான்.

இதைக் கேட்டதும் தரும தேவதை பரீட்சித்து மன்னனை நோக்கி, "பாண்டவ குலத்தில் பிறந்த நீர் பயந்தவர்களுக்கு அபய வார்த்தை கூறியது பாராட்டற்பாலது. உயிர் இனங்கள் துக்கமடைவது குறித்து, பலர் பலவகையாகத் தத்தம் அபிப்பிராயங்களைத் தெரிவித்து உள்ளனர்.

"சிலர் துக்கத்துக்குக் காரணம் ஆத்மா என்று கூறுகின்றனர்.

"சோதிடர்கள், நவக்கிரகங்களின் அதி தேவதையே காரணம் என்கின்றனர்.

"மீமாம்சகர்கள் கர்மமே காரணம் என்கின்றனர்;

"நாஸ்திகர்கள் சுபாவமே காரணம் என்று கூறுகின்றனர்.

"சிலர் தெய்வமே காரணம் என்கின்றனர்.

"இப்படி ஒவ்வொரு சாஸ்திரக்காரரும் துக்கத்துக்கு உரிய காரணத்தை ஒவ்வொரு விதமாகக் கூறுகின்றனர். உண்மையான காரணம் எது என்பதை யாராலும் நிச்சயிக்க முடியவில்லை. ஆகையால் துக்கத்துக்குக் காரணம் யாதாய் இருக்கலாம் என்பது பற்றி நீரே யோசித்து

ஒரு முடிவுக்கு வாரும்" என்று தரும தேவதை பதில் சொல்லிற்று.

எருது ரூபத்தில் இருந்துகொண்டு இப்போது தம் முடன் பேசுவது தரும தேவதை என்பதைப் பரீட்சித்து மன்னன் தெரிந்துகொண்டான். ஆகவே, அந்த மன்னன் அதை நோக்கி, "ஆபத்துக் காலத்திலும் நீ தருமத்தையே போதிப்பதால், நீ தரும தேவதையே என்பதில் சந்தேகம் இல்லை. அதனால்தான் உன்னைத் துன்புறுத்து பவனைக் காட்டிக் கொடுக்க உனக்கு மனம் வரவில்லை. கிருத யுகத்தில் தருமத்துக்கு நான்கு கால்கள் இருந்தன. தவம், ஆசாரம், இரக்கம், சத்தியம் இந்த நான்கும், தருமத்தைத் தாங்கி நின்றன. பெருமை, பற்றுதல், மடமை இந்த மூன்றும், தருமத்தின் மூன்று கால்களை முறித்துவிட்டன. சத்தியம் என்னும் கால் மட்டும் தான் இப்பொழுது எஞ்சி நிற்கிறது. அதையும் இப்பொழுது கலி புருடன் துண்டிக்க முயல்கிறான்" என்று சொல்லிவிட்டு, கத்தியை எடுத்துக் கலி புருடனை வெட்ட ஆயத்தமானான்.

இதைப் பார்த்ததும் கலி புருடன் பயந்துபோனான். பரீட்சித்து மன்னனுடைய அடிகளில் வீழ்ந்து தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டினான்.

அபயம் என்று தமது அடிகளில் வீழ்ந்த கலி புருடனைத் தண்டிக்க, இரக்கச்சித்தமுள்ள பரீட்சித்து மன்னனுக்கு மனம் வரவில்லை. கத்தியை அப்பால் எடுத்துக் கொண்டு, முகத்தில் புன்முறுவல் தோன்ற, கலி புருடனுடன் அவன் பேசத் தொடங்கினான்: "அர்ச்சுனனுடைய புகழை விருத்தி செய்வதில் விருப்பமுள்ள நாங்கள் அபயம் என்று கைகூப்பியவர்களைக் கொல்ல மாட்டோம் என்பதை நீ தெரிந்துகொள். ஆயினும், அதர்மத்துடன் உறவுகொண்டிருக்கும் நீ, எனது நாட்டில்

வாசம் செய்தல் கூடாது எங்கே உனக்குச் செல்லப் பிரியமோ அங்கே செல்'' என்று சொன்னான்.

கத்தியைக் கையில் வைத்துக்கொண்டு இவ்வாறு பரீட்சித்து மன்னன் கூறியதும், கலி புருடன் பயந்து போனான். அவன் நடுங்கிக்கொண்டே, அரசனை நோக்கி, "அரசே! எந்த இடத்தில் நான் வசிப்பதைத் தாங்கள் விரும்புகிறீர்களோ அதை எனக்குச் சொல்லுங்கள். அந்த இடத்துக்கு நான் போய்விடுகிறேன்'' என்று வேண்டினான்.

அவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்து சூது, மது, மாதர், கொலை ஆகிய இடங்களில் கலி வசிக்கலாம் என்று அனுமதி கொடுத்தான்.

இந்த நான்கு இடங்களும் போதாது என்று கலி புருடன் வேண்டியதும், தங்கத்தை அதாவது—பொருள் ஆசையை—ஒரு இடமாகக் கொடுத்தான் பரீட்சித்து மன்னன்.

அதுவும் போதாது என்று மீண்டும் கலி புருடன் பரீட்சித்து மன்னனிடம் வேண்டினான்.

ஆகவே, தங்கத்துக்கு அநுசரணையாக விளங்கும். பொய், வெறி, காமம், கலகம், பகைமை இந்த ஐந்தையும் கொடுத்தான்.

இந்தப் பத்து இடங்களிலும் அன்று முதல் கலி வசிக்கத் தொடங்கினான்.

இந்த இடங்களைச் சான்றோர், குறிப்பாக, அரசர்கள் அணுகுதல் கூடாது.

## சுக முனிவரின் வருகை

இதன் பின்னர், முறிக்கப்பட்ட மூன்று கால்களும், தருமதேவதைக்கு மீண்டும் வளர்ந்து அபிவிருத்தி அடை

யும் வகையில், பரீட்சித்து மன்னன் நாட்டைப் பரிபாலித்து வந்தான்.

இது சமயம் ஒரு நாள் அவன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். விலங்குகளைத் துரத்தி வேட்டையாடியதனால், பசியாலும் தாகத்தாலும் வருந்திய அவன் நீர்நிலை ஏதாவது தென்படுகிறதா என்று தேடிச் சென்ற போது, வழியில் ஆசிரமம் ஒன்று இருப்பதை அவன் பார்த்தான்.

அந்த ஆசிரமத்தை அடைந்து, பரீட்சித்து மன்னன் உள்ளே போனான். அங்கே ரிஷி ஒருவர் நிட்டையில் அமர்ந்து இருந்தார். தமது மனத்தைப் பிரமத்திடம் மட்டும் செலுத்தி அவர் லயித்துப் போய் இருந்ததால், அக்கம் பக்கத்தில் நடப்பது பற்றிய சிந்தனையே அவருக்கு இல்லை. நான்கு பக்கங்களிலும் ஜடைகள் தொங்கியதாலும் மான் தோலை அவர் போர்த்துக்கொண்டிருந்ததாலும், அவருடைய உடம்பு மறைந்து இருந்தது.

தாகத்தால் நலிந்து இருக்கும் பரீட்சித்து, சமீகர் என்னும் அந்த முனிவரை அணுகி, தனக்குத் தண்ணீர் வேண்டும் என்று கேட்டான்.

அரசன் பல முறை தண்ணீர் வேண்டியும் முனிவர் பதில் சொல்லவில்லை; ஆசனம் முதலியன கொடுத்து அவனை உபசரிக்கவும் இல்லை.

இதனால் முனிவர் தம்மை அவமதிப்பதாக, பரீட்சித்து மன்னன் கோபம் கொண்டான்; பசியாலும் தாகத்தாலும் நலிந்து இருக்கும் அவன், முனிவர் உண்மையில் நிட்டையில் இருக்கிறாரா அல்லது தன்னை அவமதிக்கிறாரா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பினான். ஆகவே, கழியின் நுனியால் செத்த பாம்பு ஒன்றைத் தூக்கி, முனிவருடைய கழுத்தில் போட்டுவிட்டுத் தமது நகரம் திரும்பினான்.

மற்ற சிறுவர்களுடன் விளையாடிக்கொண் டிருந்த சிருங்கி, தன் தந்தை சமீகருக்கு அரசன் பரீட்சித்து இழைத்த அவமதிப்பைக் கவனித்தான்.

மக்களைக் காப்பாற்ற வேண்டிய அரசன் வரம்பு கடந்து இப்படி அநீதமாக நடப்பதைக் கண்டு, சிருங்கி ஆத்திரம் அடைந்தான். ஆகவே, "இன்னும் ஏழாவது நாளில் தக்கன் என்னும் பாம்புக்கு இவனுடைய உயிர் பலியாகட்டும்" என்று பரீட்சித்து மன்னனைச் சிருங்கி சபித்தான்.

பிறகு தன் தந்தைக்கு எதிரே வந்து, அவர் கழுத்தில் கிடக்கும் பாம்பைப் பார்த்து, சிருங்கி அழுது புலம்பினான்.

தன் புதல்வன் அழுவது செவியில் விழுந்ததும், சமீக முனிவர் தமது கண்களைத் திறந்து பார்த்தார். தமது உடல்மீது உயிரில்லாத பாம்பு ஒன்று கிடப்பதைக் கண்டு அதை அப்பால் எடுத்துப் போட்டார்.

பிறகு தன் புதல்வனைப் பார்த்து, "குழந்தாய்! எதற்காக அழுகிறாய்? எவனாவது உன்னை அவமதித்தானா?" என்று கேட்டார்.

நடந்த விருத்தாந்தத்தை நடந்தது நடந்தபடி, தன் தந்தை சமீக முனிவரிடம் சிருங்கி சொன்னான்.

விவரம் தெரிய வந்ததும், சபிக்கத் தகாத அரசனை, தன் மைந்தன் சபித்ததற்காக, அவனை அந்த முனிவர் இதமாகக் கண்டித்தார்:

"ஏ பேதாய்! அரசன் செய்த சிறு குற்றத்துக்காக அவனைச் சபித்து, நீ பெரும் பாவம் செய்துவிட்டாய். இது உசிதம் அன்று. அரசன் திருமாலின் அம்சம் ஆவான்; ஆகவே, அரசனைச் சாதாரணமான ஒரு மனிதனைப்போல் நீ நினைத்தல் கூடாது. அரசன் காப்பதனால் தான் குடிமக்கள் பயமின்றி வாழ்கிறார்கள். அரச

னுடைய பாதுகாப்பு இல்லாது போனால், ஆட்டு மந்தை கள் போல் குடிமக்கள் அழிந்து போவார்கள். அரசன் இல்லாத நாட்டில் திருடர் பயம் அதிகம் இருக்கும். அடிக் கடி ஒருவரோடொருவர் சச்சரவிட்டுச் சண்டை பிடிப்பார் கள்; பேச்சில் கடுமை மிகுந்து போகும்; செல்வம், ஆடு மாடு, பெண்டிர் இவற்றை அபகரிப்பது அதிகரித்து விடும். நாயின் வாழ்க்கையைப் போலவும் குரங்குகளின் வாழ்க்கையைப் போலவும், மனிதர்கள் வரம்பு கடந்து வாழ்க்கை நடத்தத் தொடங்குவார்கள். குழந்தாய்! பரீட் சித்து மன்னன் தருமத்தைப் பரிபாலிப்பவன்; புகழுள்ள வன்; திருமாலை நேசிப்பவன்; அசுவமேத யாகம் செய் தவன்; தாகத்தால் நலிந்து என்னிடம் தண்ணீர் கேட்க வந்த அந்த அரசனை நீ சபித்தது நியாயம் அன்று'' என்று சொன்னார்.

தன் மைந்தன் சபித்ததை நினைத்து, அந்த முனிவர் வருந்தினாரேயன்றி, தனக்கு பரீட்சித்து அரசன் செய்த அவமதிப்பை அவர் தம் மனத்தில் கொள்ளவே இல்லை.

பிறர் செய்யும் அபகாரத்தையும் உபகாரத்தையும் சான்றோர்கள் ஒன்றாகவே மதிப்பார்கள்; நன்மையா யினும் சரி, தீமையாயினும் சரி, அது ஆத்மாவைப் பாதிப்பது இல்லை என்பதை அவர்கள் அறிவார்கள்.

அரசன் பரீட்சித்தோ, அரண்மனை திரும்பியதும், முனிவருக்குத் தான் செய்த அவமதிப்பை நினைந்து வருந்தினான். ''நான் செய்த பாவத்தின் பயனைத் தவிர்க்க இயலாய்த் துயரம் ஒன்று வந்தே தீரும். அந்தத் துயரம் எனக்கே வரட்டும். அதனால் சான்றோரை அவ மதிப்பது என்பாலிருந்து விலகட்டும்'' என்று நினைத் தான்.

இது சமயம் சமீக முனிவரின் சீடன் ஒருவன் வந்து, பரீட்சித்து மன்னனுக்கு, நேர்ந்திருக்கும் சாபத்தையும்

இன்னும் ஏழாம் நாளில் தக்கன் என்னும் பாம்பினுல் அவன் அழியப் போவதையும் தெரிவித்தான்.

விவரம் தெரிய வந்ததும் தக்கனுல் நேரவிக்கும் தீமை தனக்கு விரைவில் நேர வேண்டும் என்று பரீட்சித்து மன்னன் ஆசைப்பட்டான்.

ஆகவே, அந்த மன்னன் பற்றுதல்களை விட்டொழித்து, இறைவனுடைய திருவடிகளில், தனது சித்தத்தை வைத்தான். உண்ணு நோன்பு இருந்து உயிர் விடுவது என்ற சங்கல்பத்துடன் கங்கைக் கரைக்குப் போனுன்.

அங்கு உண்ணு நோன்பு, இருந்து அவன் தவம் செய்யத் தொடங்கினுன்.

நாரதர், வசிஷ்டர், அகத்தியர் முதலிய முனிவர்கள், அந்த மன்னன் தவம் செய்யும் இடத்துக்கு வந்தார்கள்.

வந்த முனிவர்கள் எல்லாரையும் பரீட்சித்து மன்னன் தக்கபடி பூசித்தான்; ஆசனங்களில் அமரச் செய்து, கைகூப்பி வணங்கினுன்.

பின்பு அவர்களைப் பார்த்து, "எனக்குச் சாபம் நேர்ந்திருக்கிறது. பிரயாயோபவேசம் செய்து உயிரைவிட நான் தீர்மானித்து இருக்கிறேன். நீங்கள் அருள் சுரந்து, திருமாலின் சரிதத்தை எனக்குக் கூறுங்கள்; அதைக் கேட்பதனுல், எனது ஜன்மா கடைத்தேறட்டும்" என்று சொன்னுன்.

பிறகு தன் மைந்தன் ஜனமேஜயனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்தான். அதன் பின்னர் கங்கைக் கரையில் தருப்பைப் பரப்பி, வடக்கு முகமாக உட்கார்ந்து, உண்ணு நோன்பு இருக்கத் தொடங்கினுன்.

அப்போது தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். துந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கினுர்கள்.

சமயம் வியாசரின் புதல்வர் சுகர் தெய்வச் செயலால் அங்கே வந்தார்; அவரோடு சில பாலர்களும் வந்தார்கள். சுக முனிவருக்கு வயது பதினாறு இருக்கும். சாதியைக் காட்டும் அடையாளமோ, ஆசிரமத்தைக் காட்டும் அடையாளமோ அவரிடம் எதுவும் தென்பட வில்லை; ஆடையுடுத்தாமல் அவர் அம்மணக் கோலத்துடன் விளங்கினார்.

சுகர் வருவதைப் பார்த்ததும் அங்கு இருக்கும் மகரிஷிகள் அவரை எதிர்கொண்டு வரவேற்றார்கள். பரீட்சித்து மன்னனும் அவரைக் கைகூப்பி வணங்கினான்.

சுகர் வந்து ஆசனத்தில் அமர்ந்தார்; மற்ற முனிவர்கள் அவரைச் சுற்றி அமர்தார்கள்.

அப்போது பரீட்சித்து மன்னன் மீண்டும் ஒரு முறை அவரைக் கைகூப்பி வணங்கிவிட்டு, "அந்தணரே! நீர் இங்கு அதிதியாக வந்தது நான் செய்த பாக்கியம். முனிவர் பிரானே! ஒரு விஷயம் பற்றி உங்களிடம் கேட்டு நான் தெரிந்துகொள்ளப் பிரியப்படுகிறேன். மரணத் தருவாயில் இருப்பவன் எதைச் செய்வது நல்லது? எதைக் கேட்பது நல்லது? எதை நினைப்பது நல்லது? எதை உபாசிப்பது நல்லது?" என்று கேட்டான்.

அரசன் கேட்ட இந்தக் கேள்விகளுக்கு, சுக முனிவர் பதில் சொல்லத் தொடங்கினார்.

# ஸ்ரீமத் பாகவதம்

## இரண்டாம் ஸ்கந்தம்

### ஸ்தூல சொரூபம்

"அரசனே! நீ கேட்ட கேள்வி மெச்சத்தகுந்த கேள்வி; உலகுக்கு நலம் பயக்கும் கேள்வி. ஆத்மாவின் சொரூபத்தை அறிந்தவர்களுக்குப் பிரியமான கேள்வி. சொல்லத்தக்கவற்றில், கேட்கத்தக்கவற்றில், நினைக் கத்தக்கவற்றில் இந்தக் கேள்வி மிகவும் உன்னதமான கேள்வி. ஆத்ம சொரூபத்தை அறியாது, இல்லறத்தில் தோய்ந்து ஐந்து விதத்தில்* இம்சை செய்து வாழும் மாந்தர்கள் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியவை ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. மனிதனுடைய ஆயுளில் இரவு நேரம் தூக்கத்திலும். காமவின்பத்திலும் வீணே கழிந்துபோகிறது; பகல் நேரமோ பணம் தேடுவ திலும், குடும்பத்தைப் பேணுவதிலும் கழிந்து போகிறது. தேகம் அழிவதை நித்தியம் நேரில் பார்த்தும்கூட, அது நித்தியமானது என்று எண்ணிக்கொண்டு மாந்தர்கள், மனைவி மக்கள்மீதும், தம் தேகத்தின்மீதும் பற்றுக் கொண்டு வாழ்கிறார்கள்.

*கத்தி, கையினால் பிசைதல், அடுப்பு, நீர். பெருக்குதல் இந்த ஐந்தினாலும் செய்கின்ற தீமைகள்.

"பரதகுலத் தோன்றலே! வீடு பேற்றை அடைய விரும்பும் மனிதன், உலகத்தின் ஆத்மாவாக இருக்கும் திருமாலின் கதையைச் செவிமடுக்க வேண்டும்; மனனம் செய்ய வேண்டும். மரணமடையும்போது எவன் நாரா யணனை நினைக்கிறானோ, அவன் பிறவியின் உத்தம பயனை அவசியம் அடைவான்.

"பிரமத்தின் சொரூபத்தை அறிந்தவர்களும்கூட, திருமாலை நினையாமல் இருப்பது இல்லை. அதனால்தான் திருமாலின் சரிதத்தைக் கூறும் புண்ணியமான பாகவ தத்தை, துவாபர யுகக் கடைசியால், என் தந்தை வியாச முனிவர் சொல்லக் கேட்டு அதை நான் அத்தியயனம் செய்துகொண்டேன்.

"அரசே! நீ விஷ்ணு பக்தனானகையால் அந்தப் பாகவத புராணத்தை உனக்கு நான் சொல்லுகிறேன். மனைவி மக்களிடம் பற்றுதல் வைப்பதைக் காட்டிலும் இறைவனிடம் பக்தி செலுத்துவதே மேலானது. இது பற்றி உனக்கு நான் ஒரு சிறு கதை கூறுகிறேன் கேள் :

முன்பு ஒரு காலத்தில் கட்வாங்கன் என்று ஒரு ராஜரிஷி இருந்தான். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே நடந்த போரில் தேவர்கள் சார்பாகப் போர் செய்து அசுரர்களை எல்லாம் அந்த அரசன் வென்றான்.

அதனால் மகிழ்ச்சியடைந்த தேவர்கள் கட்வாங்கனை நோக்கி "விரும்பும் வரத்தை நீர் கேட்கலாம்" என்று சொன்னார்கள்.

உடனே அந்தக் கட்வாங்கன் "எனது வாழ்நாள் இன்னும் எவ்வளவு காலம் இருக்கிறது?" என்று கேட்டான்.

"இன்னும் ஒரு முகூர்த்த காலம் இருக்கிறது" என்று தேவர்கள் பதில் சொன்னார்கள்.

உடனே அந்த ராஜரிஷி சகல ஆசையும் ஒழித்து, இறைவன்பால் பக்தி செலுத்தினுன். அதனுல் கட்வாங்கன் நற்பேறை அடைந்தான்.

இந்தக் கதையைச் சொல்லிவிட்டு, பரீட்சித்து மன்னனை நோக்கி "அரசே! இது முதல் இன்னும் ஏழு நாட்கள்வரைதான் உனக்கு ஆயுள் இருக்கிறது. ஆகையால் பரலோகத்தை அடைவதில் நீ கவனம் செலுத்து. மனைவி மக்கள், நண்பர்கள் ஆகியோர்மீது கொண்டிருக்கும் பற்றுதலை விட்டொழித்துவிடு. புண்ணிய தீர்த்தங்களில் நீராடி இறைவனிடம் மனதைச் செலுத்தி, திருமாலின் திருவடிகளைத் தியானம் செய்தால், ஆசை முதலிய கட்டுகளை அறுத்து, ஒருவன் மனத்தெளிவு அடையலாம். ரஜோ குணத்தால் கலக்கமும் தமோ குணத்தால் மோகமும் ஏற்படக் கூடும். அப்போது, பகவத் சொரூபத்தின் ஒவ்வொரு அவயவமாகத் தியானம் செய்ய வேண்டும்*. இது பக்தி யோகத்துக்கு அடிகோலும்; பிறகு மோட்சத்தையும் அது கொடுக்கும்" என்று சொன்னுர் சுகர்.

சுகர் இவ்வாறு சொல்லி முடித்ததும் அரசன் அவரிடம் "உத்தமரே! மனத்தின் அழுக்கைப் போக்கக் கூடிய தாரணையை மனிதன் எவ்வாறு செய்யவேண்டும்? மனத்தை எதில் செலுத்த வேண்டும்? அதுபற்றி எனக்கு விரிவாகச் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

"அரசே! சாஸ்திரங்களில் சொல்லியபடி ஒரு இடத்தில் நியமமாக அமர்ந்து, மூச்சை முதலில் அடக்க வேண்டும். பற்றுகளை ஒழித்து, புலன்களைக் கட்டுப்படுத்தி, இறைவனுடைய பூதாகார சொரூபத்தில் மனத்

* இப்படித் தியானம் செய்வதை வட மொழியில் "தாரணை" என்பர்.

தைச் செலுத்த வேண்டும். பூதாகார சொரூபத்தில் காணப்படும் இறைவனை நூலோர் வைராஜன் என்று சொல்லுவர். இந்த வைராஜ சொரூபத்தில் இறைவனை முதலில் தியானம் செய்தால், பிறகு இறைவனுடைய சூட்சும சொரூபத்தில், பக்தி உண்டாகும். மலை, கடல், மனிதன், விலங்கு, தாவரம், சூரியன், சந்திரன், தாரகை கள் இவை அனைத்தும் வைராஜனுடைய சொரூபம் ஆகும்'' என்று சொன்னார்.

## பக்தி மார்க்கம்

மேலும் தொடர்ந்து சுகர் சொன்னார்: ''இந்த வைராஜ தாரணை மூலம், பிரம்ம தேவர் திருமாலைத் தியானித்தார். இதனால் திருப்தியடைந்த திருமால், மீண்டும் சிருஷ்டிக்கும் ஆற்றலைப் பிரம்ம தேவருக்குக் கொடுத்தார். முந்திய கல்பத்தில் இருந்ததைப் போலவே பிரம்மாவும் உலகத்தைச் சிருஷ்டிக்கலானார்.

''மனிதன் இறைவனிடம் பக்தி செலுத்துவது மட்டும் போதாது; ஆசைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம், அவற்றுக்குத் தூண்டுகோலாய் இருக்கும் கர்மங்களை மனிதன் குறைத்துக்கொள்ள வேண்டும். உடல் அழியாமல் இருப்பதற்குத் தேவையான அளவுக்குத்தான் புறப் பொருள்களுடன் மனிதன் தொடர்பு கொள்ள வேண்டும். உடலைக் காக்கத் தேவைப்படுபவை முயற்சியின்றியே கிடைக்க வழியிருக்கும்போது, வீண் முயற்சியில் நாட்டம் செலுத்தக் கூடாது. ஆண்டவனால் கொடுக்கப்பட்ட பூமி இருக்கும்பொழுது, படுக்கை முதலிய சாதனங்களை ஒருவன் எதற்காகத் தேட வேண்டும்? கைகள் இருக்கும்பொழுது தலையணை எதற்கு? உள்ளங்கைகள் இரண்டு இருக்கும்பொழுது பாத்திரம் எதற்கு? திசைகளும் மர

வுரியும் இருக்கும்பொழுது பட்டாடை எதற்கு? பழங்கள் முதலியன தாராளமாக மரங்களிலிருந்து கிடைக்கும் பொழுது, வேறு உணவு எதற்கு? ஆறுகள் வறண்டு போயினவா நீர் இல்லை என்பதற்கு? குகைமுகங்கள் மூடப்பட்டனவா, இடம் இல்லை என்பதற்கு? பிறரை யாசியாமலே உடலைக் காப்பாற்றிக்கொள்ள மேற் சொன்ன வசதிகள் இருக்கும்போது, ஒருவன் எதற்காகக் கவலைப்பட வேண்டும்? மேற்கூறின வசதிகள் கிடைக் காவிடினும், அடைக்கலம் என்று தம்மை அண்டினவர் களை இறைவன் காப்பாற்ற மாட்டாரா? இப்படி இருக் கும்போது, செல்வத்தால் செருக்குற்றுத் தலைகால் புரி யாமல் நடந்துகொள்ளும் மாந்தர்களை அண்டி அவர்கள் உதவியை நாடுவது அறிவுக் குறைவான செயல் ஆகாதா? அற்பர்களை அடுப்பதை விட்டுவிட்டு, பகவான் நாராயணனையே அடுக்க வேண்டும். அவனைப் பணிவதற்கு இடம் தேடிப் போக வேண்டிய அவசியம் இல்லை. எல்லாருடைய உள்ளத்திலும் இயல்பாகவே இருப்பவர் அவர். அழிவில்லாத அவரைப் பற்றிக்கொள் வதே நன்மை பயக்கும். வீடு பேற்றை அடைவதில் நாட்டமுள்ள மனிதன் இடைவிடாது இறைவனையே தியானிக்க வேண்டும். அறிவில்லாதவனே சம்சார சாகரத் தில் அழுந்திக் கிடப்பான். அறிவுள்ளவனோ, இறைவ னுடைய தியானத்தைத் தவிர்த்து வேறு, எதற்கும் இடம் கொடுக்க மாட்டான்.

"புறத்தோற்றத்தில் இறைவனைத் தியானிப்பதைக் காட்டிலும், அகத்தினுள்ளேயே இறைவனின் தோற்றத் தைத் தியானிப்பது சிறந்ததாகும்.

"உள்ளத்தி னுள்ளே கோயில் கொண் டிருக்கும் இறைவன் கட்டை விரல் அளவில் இருப்பார்; அவருக்கு நான்கு கைகள் இருக்கும்; அவற்றில் சங்கு, சக்கரம், கதை

தாமரை மலர் ஆகியவற்றை வைத்திருப்பார்; முகம் புன் சிரிப்புடன் திகழும்; கண்கள் தாமரை மலரை நிகர்த்து இருக்கும்; அவர் அணிந்திருக்கும் பட்டாடை கடம்ப மலரைப் போல்,மஞ்சள் நிறத்தில் இருக்கும்; ரத்தினங்கள் இழைத்த தோடுகள், தோள் வளையங்கள், கிரீடம் முதலியவற்றை அவர் அணிந்து இருப்பார்; ஞானியர் மனத்தில் பதிந்திருக்கும் அவருடைய திருவடிகளோ, தளிரை நிகர்த்து இருக்கும்; கழுத்தில் கௌஸ்துப மணியும் வனமாலையும் துலங்கும்; மோதிரம், அரைஞாண், வளையங்கள் ஆகியவற்றை அவர் அணிந்து இருப்பார். சிரிப்பாலும் புருவ நெரிப்பாலும் பார்வையாலும் அருள் பாலிக்கும் இயல்புடையவர் அவர்.

"மனம் வசப்பட்டு நிற்கும்வரை, பகவானுடைய இந்தத் திவ்ய வடிவத்தை முதலில் தியானிக்க வேண்டும். திருவடி தொடங்கி, புன்முறுவல் திகழும் வதனம்வரை, ஒவ்வொரு உறுப்பாகத் தியானிக்க வேண்டும்; கற்பிதமான இந்த உருவத்தின் ஒரு உறுப்பைத் தியானித்துத் தியானித்து, அந்த உறுப்பை உருவாக்கி, அதிலே மனம் பதிந்துவிட்ட பிறகு, வேறு உறுப்பில் தியானத்தைச் செலுத்த வேண்டும்.

இப்படியே இறைவனின் முழு உருவத்தையும் தியான நிலைக்குக் கொணர வேண்டும். பக்தி உண்டாகும்வரை திவ்வியமான இந்த உருவத்தைத் தியானம் செய்ய வேண்டும்.

இவ்வாறு தியானம் செய்து செய்து, பக்தியை வளர்த்துக்கொண்ட பின், உடலைத் துறக்க, விருப்பம் உண்டாயின், காலத்திலும் இடத்திலும் வைத்திருக்கும் பற்றை விட்டுவிட வேண்டும்.

அடக்கிக் கட்டுப்படுத்தி, யோக சாதனையில் மூச்சைச் செலுத்த வேண்டும். பரிசுத்தமான ஆசனத்தில் அமர்ந்து

பொறிபுலன்களை அடக்கி, மனத்தை ஜீவாத்மாவிடம் செலுத்தி, பிறகு அந்த ஜீவாத்மாவை, பரமாத்மாவிடம் செலுத்தி, இரண்டற்ற நிலையை அடைய வேண்டும்.

இத்தகைய இரண்டற்ற ஆனந்த நிலையை அடைந்தவன், மறுபடி பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை

இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்குப் பல மார்க்கங்கள் இருப்பினும், சம்சார சாகரத்தில் உழன்று தவிப்பவர்களுக்குப் பக்தி மார்க்கமே சிறந்த மார்க்கம் எனலாம்.

இந்த மார்க்கம் எளிதான மார்க்கம். இடையூறுகள் இல்லாத மார்க்கம்.

வேதத்தை மூன்று முறைகள் படித்த பின்னர், பக்தி மார்க்கமே சிறந்தது என்று பிரம்ம தேவரே முடிவுக்கு வந்து இருக்கிறார்.

ஆகவே, பிறவிப் பெருங்கடலைக் கடக்க விரும்பும் மனிதன், பகவான் நாராயணனிடம், பூரண பக்தி செலுத்த வேண்டும். அவருடைய கதைகளை விருப்போடு கேட்க வேண்டும். இறைவனுடைய திருப் பெயர்களை இடைவிடாது ஓத வேண்டும்.

அதனால் சித்தம் சுத்தம் அடைந்து, பரம பதத்தை அடையும் பேறு, மனிதனுக்குக் கிட்டும்.

## திருமால் சீர்

"புத்திசாலியான மனிதன் சாகும் தருணத்தில் எதைச் செய்தால் நன்மை யுண்டு? என்று என்னை நீ கேட்டாய். ஹரியின் கதையைக் கேட்பதே என்று உனக்கு நான் சொன்னேன். இனி, எது எதில் விருப்ப முள்ள மனிதன், யார் யாரை ஆராதனை செய்தால் பயன் உண்டு என்பதை உனக்குக் கூறுகிறேன் கேள்" என்று சொன்னார் சுகர்.

"அரசே! பிரம்ம வித்தையில் விருப்பமுள்ளவன், பிரம்ம தேவரை ஆராதிக்க வேண்டும்.

இந்திரியங்களின் வலிமையை விரும்புபவன், இந்திரனை வழிபட வேண்டும்.

சந்தான பாக்கியத்தை விரும்புகிறவன், தட்சப் பிரஜாபதி முதலியோரை ஆராதிக்க வேண்டும்.

சௌபாக்கியத்தில் நாட்டமுள்ளவன் திருமகளை வழிபட வேண்டும்.

ஆற்றலைப் பெற விரும்புகிறவன், சூரியனை வழிபட வேண்டும்.

பணத்தை விரும்புகிறவன் அஷ்ட வசுக்களை உபாசிக்க வேண்டும்.

வீரியத்தில் விருப்பமுள்ளவன், ஏகாதச ருத்திரர்களை வழிபட வேண்டும். நல்ல உணவிலும் தின்பண்டங்களிலும் நாட்டமுள்ளவன் அதிதியையும், சொர்க்கத்தில் நாட்டமுள்ளவன் அதிதியின் புதல்வர்களையும் வழிபட வேண்டும்.

ராஜ்யத்தில் விருப்பமுள்ளவன் சாத்தியர்களையும், ஆயுளை அதிகம் விரும்புகிறவன் அசுவினி தேவர்களையும், நல்ல அழகை விரும்புகிறவன் கந்தர்வர்களையும், நல்ல பெண்ணை விரும்புகிறவன் ஊர்வசியையும் ஆராதனை செய்ய வேண்டும்.

கல்வியில் விருப்பமுள்ளவன் சிவபெருமானையும், தாம்பத்திய ஒற்றுமையை விரும்புபவன் உமையவளையும் ஆராதனை செய்ய வேண்டும்.

வைராக்கியத்தில் விருப்பமுள்ளவன், பிரகிருதி சம்பந்தமற்ற புருடனை ஆராதிக்க வேண்டும் என்று சுகர் சொன்னார்.

"மோட்சத்தை விரும்பினாலும் சரி, அல்லது மற்ற எதை விரும்பினாலும் சரி, பக்தி செய்வதன் மூலம்,

நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனைப் புத்தியுள்ள மனிதன் ஆராதனை செய்ய வேண்டும்.

வாழ்க்கையின் பயன் இறைவனுடைய புகழைச் செவிமடுத்தலே யாகும்; இறைவன் புகழைக் கேளாமல் கழிந்த வாழ்நாள் அனைத்தும், வீண் நாட்களே ஆகும். உயிருடன் இருப்பது மட்டும் வாழ்நாள் ஆகாது; மரங்களும்தான் உயிர் வாழ்கின்றன; நான் மூச்சு விடுகிறேனே என்பாயாயின், கருமானுடைய தோல் துருத்தியும்தான் மூச்சை விடுகின்றது. துருத்திகள் உணவு உட்கொள்வது இல்லை என்பாயாயின், நாற்கால் படைத்த விலங்குகளும்தான், உணவு உண்டு உயிர் வாழ்கின்றன. இறைவனுடைய புகழைக் கேளாமல் காலத்தையும் பொழுதையும் கழிக்கும் மனிதன், விலங்குக்கு ஒப்பாவான். நாய், பன்றி, கழுதை, ஒட்டகம் முதலிய விலங்குகளைப்போல அவனும் ஒரு விலங்கே ஆவான்.

இறைவனுடைய புகழையும் திருவிளையாடல்களையும் செவிமடுக்காத செவிகள், செவிகளே அன்று.

அவனுடைய புகழைப் பாடாத நா, நாவே அன்று. வறட்டுக் கத்துக் கத்தும் தவளையின் நாவுக்கும் அந்த நாவுக்கும் பேதமே இல்லை.

முகுந்தனுடைய திருவடிகளை வணங்காத தலை, பட்டு முண்டாசு, கிரீடம் முதலியவற்றைச் சுமக்கும் வெறும் தலையே ஆகும்.

பகவானை வணங்காத கைகள், பிணத்தின் கைகளே யாகும்.

இறைவனுடைய திருமேனியைத் தரிசிக்காத கண்கள், மயில் தோகையிலுள்ள கண்களுக்கு ஒப்பாகும்.

திருமாலின் திவ்ய சேட்திரத்துக்குச் செல்லாத கால்கள், மரத்தின் வேர்களை நிகர்த்தனவாம்.

இறைவனுடைய பாததூளியை நினைத்துப் போற்ருத மனிதன், உயிருடன் இருப்பினும், உயிரற்ற பிணத்துக்கு ஒப்பாவான்.

கடவுளுடைய நாம ரூபங்களைக் கேட்கும்போதும், மொழியும்போதும், ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, புளகாங்கிதம் அடையாத மனிதனுடைய இதயம் இரும்பினுல் செய்யப்பட்ட இதயமே யாகும்'' என்று சொன்ஞர் சுகர்.

## படைப்பின் இரகசியம்

ஆத்ம சொரூபத்தின் உண்மைத் தன்மையை சுகர் இவ்வாறு தெரிவித்ததும், பரீட்சித்து மன்னன், மனைவி மக்களிடமும் உற்ருர் உறவினர்களிடமும் அரசாங்கம், யானை, பொருள் இவற்றினிடமும், தமக்கு இருக்கும் பற்று முதலியவற்றை விட்டொழித்தார். ''கிருஷ்ணனே பரமாத்மா; அவரை வழிபடுவதே நலம் பயக்கும்'' என்று முடிவுக்கு வந்தார். அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றிடத்தும் தமக்கு இருக்கும் ஆசைகளைத் துறந்தார் தமக்கு அந்திய காலம் குறுகிவிட்டது என்பதை அறிந்த அவர், சுகரை நோக்கி, ''அந்தண சீலரே! நீர் சொல்லும் கண்ணபிரானின் கதையைக் கேட்கக் கேட்க அஞ்ஞானம் என்னைவிட்டு விலகுகிறது. பிரம்மா முதலிய தேவர்களாலும் அறிய முடியாத தமது மாயையால், இறைவன் இந்த உலகத்தை எவ்வாறு படைக்கிருர்? எந்த சக்தியைக் கொண்டு, தாம் படைத்த உலகத்தை இறைவன் காப்பாற்றுகிருர்? திரும்பவும் இந்த உலகத்தை எவ்வாறு தன்னுள் ஒடுக்கிக்கொள்கிருர்? இவற்றைப்பற்றி விவரமாக எனக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்று சொன்ஞர்.

பரீட்சித்து மன்னன் இவ்வாறு கேட்டதும், நாராயணனின் பெருமைகளை எல்லாம் சொல்லித் துதித்து விட்டு, சுகர் பதில் சொல்லத் தொடங்கினார்:

"அளவற்ற ஆற்றலுள்ள இறைவன், ரஜோ குணத்தைக் கொண்டு, பிரம்ம ரூபத்தினால் இந்த உலகத்தைப் படைக்கிறார். தாமோ குணத்தைக் கொண்டு உருத்திர ரூபத்தினால், இந்த உலகத்தை அழிக்கிறார். சத்வ குணத்தைக் கொண்டு, திருமாலின் ரூபத்தினால் இந்த உலகத்தைக் காப்பாற்றுகிறார். சகல உயிர்களிடத்தும் அவர் அந்தர்யாமியாய் விளங்குகிறார்" என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டு, பிறகு சிருஷ்டிபற்றி விரிவாகச் சொல்லத் தொடங்கினார்.

"அரசே! முன்பு இதே கேள்வியை, நாரதர், பிரம்ம தேவரிடம் கேட்டார். அந்தக் கேள்விக்கு, பிரம்ம தேவர் விரிவாகப் பதில் சொல்லி இருக்கிறார். அதை உனக்கு நான் கூறுகிறேன்" என்று சொல்லி, நாரதர் கேட்ட கேள்வியையும், பிரம்ம தேவர் சொன்ன பதிலையும் சுகர் சொன்னார்.

ஒரு நாள் நாரதர், பிரம்ம தேவரிடம் வந்து, "தேவர்களுக்குத் தேவரே! உலகத்தைப் படைப்பவரே! உமக்கு வணக்கம். ஆத்ம ஞானத்தைப்பற்றி உம்மிடமிருந்து நான் விளக்கமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இந்த உலகம் எத்தகையது? இதைப் படைத்தவர் யார்? எந்த ஆதரவினால் இந்த உலகம் இயங்கி வருகிறது? படைப்புக் கடவுளான உமக்கு, இந்த உண்மைகள் அனைத்தும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெற்றெனத் தெரியும். அதனால்தான் உம்மை நான் கேட்க நேர்ந்தது" என்று சொன்னார்.

உடனே அதற்குப் பிரம்ம தேவர், "குழந்தாய்! நீ கேட்ட இந்த விஷயம் மிகவும் மேலானது. பகவானுடைய

பெருமைகளை அறியத் தூண்டுகோலாய் இருப்பது, உலக சிருஷ்டிக்கு மூலகாரணன் இறைவனே யன்றி, நான் அன்று. இந்த உண்மையை மாயை வயப்பட்ட மக்கள் அறியவில்லை. அனைத்துக்கும் மூல காரணராய் விளங்கும் வாசுதேவனே, இந்த உலகத்தைப் படைக்கிறார்; காக்கிறார்; அழிக்கிறார்.

இந்த உலக சிருஷ்டிக்கு, பூமி முதலிய பூதங்கள் காரணம் என்று சிலர் சொல்லுகிறார். சிலர் காமம் காரணம் என்கிறார்கள்; சிலர் காலம் காரணம் என்கிறார்கள்; சிலர் பொருள்களின் சேர்க்கை காரணம் என்கிறார்கள்; சிலர் ஜீவன் காரணம் என்கின்றனர்

இவை அனைத்தும் பிதற்றலே யன்றி வேறு இல்லை. இறைவனே படைப்புக்கு மூல காரணம் ஆவார்; அவர் காரணமாய் இருந்து, என்னைக் கருவியாகக் கொண்டு, படைப்புத் தொழிலை இறைவன் செய்து வருகிறார். வெல்ல முடியாத அவருடைய மாயையின் வசப்பட்ட மாந்தர்கள், இந்த உண்மையை அறிய முடியாமல், அனைத்தையும் நானே படைக்கிறேன் என்று தவறாகக் கருதுகிறார்கள்.

அனைத்திற்கும் காரணம் வாசுதேவர்தான். சிலந்திப் பூச்சி, தன்னுள் இருந்து வலையை உண்டுபண்ணிப் பரப்புவதைப் போலவே, பரம்பொருளான இறைவனும் தானே பெருகித் தோற்ற மளிக்கிறான். உலக சிருஷ்டிக்குத் தேவையான நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு இந்த ஐந்தும் பரம்பொருளினின்று வேறானவை அன்று. அவர்தான் என்னையும் படைத்தவர்; அவருடைய அருள் நோக்கினால்தான், படைப்பின் மூலம் உலகத்தை நான் வெளிப்படுத்துகிறேன். இதை அறியாத ஜனங்கள் என்னையே படைப்புக்குக் காரணன் என்று கருதுகிறார்கள்.

குணங்களை எல்லாம் கடந்து நிற்பவனாயினும், ஆக்கல், காத்தல், அழித்தல் என்றும் மூன்று தொழில்களைச் செய்வதற்காகத் தமது மாயையினால், இறைவன், சத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்னும் மூன்று குணங்களை அங்கீகரிக்கிறார்.

சமமாய் இருந்த இந்தக் குணங்கள், இறைவன் தம்மை அங்கீகரிப்பதன் பயனாலும், காலத்தின் விளைவாலும் ஏற்றத் தாழ்வை அடைந்துவிடுகின்றன.

ஏற்றத் தாழ்வுள்ள இந்தக் குணங்கள் ஒன்றுடன் ஒன்று ஏற்றத் தாழ்வாய் கலக்கும்பொழுது, பல வித வேறுபாடுகளைப் பெறுகின்றன.

சத்வ குணமும் ரஜோ குணமும் இப்படி ஏற்றத் தாழ்வுடன் கலக்கும்போது, மகத் தத்துவம், அதாவது புத்தி தத்துவம் உண்டாகிறது.

இந்தப் புத்தி தத்துவம் மாறுதல் அடையும்போது, தாமச குணத்தை அடிப்படையாகக் கொண்ட அகங்காரம் உண்டாகிறது.

இந்த அகங்காரத்திலிருந்து, பஞ்ச பூதங்கள் தோன்றின. விசும்பு, காற்று, நெருப்பு, நீர், நிலம் என்னும் இந்த ஐந்து பூதங்களும் முறையே ஒன்றிலிருந்து ஒன்று உண்டாயின.

விசும்பிலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் முறையே உண்டாயின.

விசும்போ, ஓசையை மூலமாகவுடையது; அதிலிருந்து தோன்றிய காற்றுக்கு, தொடுதல்தன்மையும் ஓசைத்தன்மையும் உண்டு; காற்றிலிருந்து தோன்றிய நெருப்புக்கு, ஓசை, ஊறு, உருவம் மூன்று தன்மைகளும் உண்டு; நெருப்பிலிருந்து தோன்றிய நீருக்கு அந்த மூன்று குணங்களோடு, சுவை என்னும் தன்மையும்

உண்டு. நீரிலிருந்து தோன்றிய பூமிக்கு இந்த நான்கு தன்மைகளோடு, வாசனை என்ற தன்மையும் சேர்ந்து ஐந்து தன்மைகள் உண்டு. *

இதன் பின்னர் மனது என்பது உண்டாயிற்று; அதை அடுத்து, மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து ஞானேந்திரியங்கள் உண்டாயின; அவற்றை அடுத்து, கை, கால், நாக்கு, ஆசனவாய், உற்பத்தி உறுப்பு முதலிய ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டாயின.

ஐந்து பூதங்கள், மனது, ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, இவை ஒன்றுடன் ஒன்று, சேராமல் இருந்தன.

பிறகு ஆண்டவனின் திருவுளப் பயனாய் இவை ஒன்றுடன் ஒன்று கலக்கத் தொடங்கின.

அதன் பயனாய் அண்ட சராசரங்கள் அனைத்தும் உண்டாயின.

"அண்ட சராசரங்களை இவ்வாறு பிரளயந்தோறும் படைத்தும் காத்தும் சுரந்தும் விளையாடித் திருவிளையாடல் செய்கிறான் பரமாத்மா" என்று கூறினார் பிரம்ம தேவன்.

## பாகவத வரலாறு

மேலும் தொடர்ந்து பிரம்மா சொன்னார்: "நாரதா! அண்ட சராசரங்கள் அனைத்தும், இறைவனுடைய விராட்புருஷ ரூபத்தின் உறுப்புக்களேயன்றி வேறில்லை. சூரியன், தன் மண்டலத்தில் பிரகாசித்து, வெளியிலும் பிரகாசிப்பதைப்போல, விராட் ரூபத்தில் இருக்கும் இறைவனும் உள்ளும் புறமும் பிரகாசிக்கிறார். அவரு

* இதைத் தமிழ் மரபில் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று சொல்லுவார்கள்.

டைய பெருமை அளவிடற்கரிது; அனைத்தையும் கடந்தவர் அவர். அவருடைய முழுத் தோற்றத்தை, யாராலும் ஒரே சமயத்தில் காண முடியாது. அவருடைய உண்மைப் பக்தர்களாலும் காண முடியாது.

"அவர் எல்லாவற்றுக்கும் முந்தியவர்; பிறப்பு இறப்பு இல்லாதவர்; ஒவ்வொரு கல்பத்திலும் தம்மைத் தாமே சிருஷ்டித்துக்கொள்கிறார்; காப்பாற்றிக்கொள்கிறார்; அழித்துக்கொள்கிறார்; அவர் ஞான சொரூபியாய் இருக்கிறார்; பரிசுத்தராய் இருக்கிறார்; அந்தர்யாமியாய் இருக்கிறார்.

"புலன்களையும் மனத்தையும் அடக்கி எவன் சாந்தமாக வாழ்கிறானோ, அவனால் மட்டுமே, இறைவனின் இந்தத் திவ்விய சொரூபத்தைத் தரிசிக்க முடியும்.

"இத்தகைய இறைவனிடம் ஒருவன் மனமுவந்து பக்தி செலுத்தினால் மேன்மையடையலாம். பக்திக்குத் தூண்டுகோலாய் அமையாத கல்வி, தர்மம், தவம் முதலியன ஒன்றுக்கும் பயன்படா. ஏ நாரதா! ஆகவே, கிருஷ்ண பகவானுடைய சரித்தைச் சொல்லுவதும், கேட்பதும் அஞ்ஞானத்தைப் போக்கும்" என்று கூறி முடித்தார் பிரம்ம தேவர்.

நாரதருக்கும் பிரம்ம தேவருக்கும் இடையில் நடந்த இந்தச் சம்வாதத்தை, சுகமுனிவர் சொல்லி ஓய்ந்ததும், பரீட்சித்து மன்னன் அவரிடம், "அந்தணரே! நாரதருக்குப் பிரம்ம தேவர் உபதேசித்த பாகவதத்தை நானும் கேட்க ஆசைப்படுகிறேன். அனைவருக்கும் அந்தராத்மாக விளங்கும் பகவான் கிருஷ்ணனிடம் மனத்தைச் செலுத்தி, அந்த நினைப்புடனேயே, என் உயிர் உடலிலிருந்து பிரிவதை நான் விரும்புகிறேன். பாகவதக் கதையைக் கேட்பதனால் மனத்தில் இருக்கும் மாசுகள் அகன்று போகும். அதனால் நிலையான பக்தி பகவான் கண்ணனிடத்தில் எனக்கு ஏற்படும். ஆகவே, பகவா

னுடைய மகிமைகளை எடுத்துக் கூறும் பாகவதத்தை, தாங்கள் எனக்கு உபதேசிக்க வேண்டும்'' என்று வேண்டினார்.

சுக முனிவரும் சம்மதித்து, பரீட்சித்து மன்னன் மனத்தில் இருக்கும் ஐயங்கள் அனைத்தும் அகலும் வகையில் பாகவதத்தை அவனுக்குச் சொல்லத் தொடங்கினார் :

''அரசே! கனவில் காணும் உடலின் சம்பந்தம், நித்திரை என்னும் மாயையின் பயனாய் இல்லாமல் இருப்பது போல, இறைவனும் தமது மாயையினால், தேகம் முதலியவற்றோடு சம்பந்தம் இல்லாது இருக்கிறார்.

''இத்தகைய இறைவனை, தாம் செய்த தவத்தின் பயனாய், பிரம்ம தேவன் தரிசிக்கும் பேறு பெற்றார்; அதனால் உலகத்தைப் படைக்கும் ஆற்றலை, இறைவன் பிரம்ம தேவருக்கு வழங்கினான்.

பிரம்மதேவன் செய்த தவத்தால் மகிழ்ச்சி அடைந்த பகவான், நான்முகனிடம் ''நீ செய்த உண்மையான தவத்தால் நான் அக மகிழ்ந்தேன். ஆகவே, நீ விரும்பும் வரத்தை என்னிடம் கேட்கலாம்'' என்று கூறினார்.

இவ்வாறு பகவான் சொன்னதும் நான்முகன் அவரிடம் ''அண்ணலே! சிருஷ்டிக்கும் காலத்தில் எனக்குச் சோம்பலும் அகந்தையும் ஏற்படாது இருக்க, தாங்கள் அருள் புரிய வேண்டும்'' என்று இறைவனைப் பிரம்ம தேவர் வேண்டினார்.

பிரம்ம தேவர் விரும்பிய விதமே வரம் கொடுத்து விட்டு, இறைவன் மறைந்துகொண்டான்.

பிறகு முன் கல்பத்தில் இருந்ததைப் போலவே, பிரம்ம தேவன் உலகத்தைப் படைத்து வரத் தொடங்கினார்.

அப்போது பிரம்மாவின் புதல்வரான நாரதர் அவருக்குப் பணிவிடைகள் புரிந்தார்.

"இதனால் அகமகிழ்ந்த பிரம்மதேவன், தாம் நாராயண னிடமிருந்து கேட்ட பாகவதத்தை, தம் புதல்வர் நாரதருக்குச் சொன்னார்.

"சரஸ்வதி நதிக் கரையில் அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்த என் தந்தை வியாச மகரிஷிக்கு, நாரதர், தாம் பிரம்ம தேவரிடமிருந்து கேட்ட பாகவத்தைச் சொன்னார்.

"அதை என் தந்தை எனக்கு உபதேசித்தார்; அந்தப் பாகவதத்தை உனக்கு நான் இப்பொழுது உபதேசிக்கிறேன்.

"அதனால் உனக்கு இருக்கும் ஐயங்கள் அனைத்தும் அகலும்; நீ கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் அதிலிருந்து தக்க விடைகளும் உனக்குக் கிடைக்கும்" என்று சொன்னார்.

## பொருளடக்கம்

மேலும் தொடர்ந்து சுக முனிவர் சொன்னார் :

"அரசே! பாகவதம் என்பது பத்து விஷயங்களை விவரிக்கிறது அவை யாவன :

ஸர்க்கம்.
விஸர்க்கம்.
ஸ்தானம்.
போஷணம்.
ஊதிகள்.
மன்வந்தரம்.
ஈசன் கதைகள்.
நிரோதம்.
முக்தி.
ஆசிரயம்.
என்பனவாம்.

பத்து விஷயங்களைப் பற்றிக் கூறுகின்றபடியால் தான், இதற்குப் பாகவத புராணம் என்னும் பெயர் ஏற்பட்டு இருக்கிறது.

பத்தாவது விஷயமான ஆசிரயம் என்பதே முக்கியமானது; ஆசிரயத்தின் லட்சணத்தைத் தெரிந்துகொள்ளும் பொருட்டே, மற்ற ஒன்பது விஷயங்களும் விளக்கப் படுகின்றன. ஆசிரயம் என்பது, பரப் பிரம்மத்தைக் குறிக்கும்.

ஆகவே, பாகவதம் என்னும் இந்த நூல், பகவான் ஒருவரைக் குறித்தே பேசும் சிறந்த பக்தி நூலாகும்.

இனி, ஒவ்வொரு விஷயத்தையும் தனித் தனியே விளக்கிக் கூறுகிறேன், கேள் :

(1) பஞ்ச பூதங்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், மகத் தத்துவம், அகங்காரம் ஆகியவற்றின் உற்பத்தி ஸர்க்கம் எனப்படும்.

(2) விராட் புருடன் மூலம் ஏற்பட்ட பிரம்மாவின் சிருஷ்டி விஸர்க்கம் எனப்படும்.

(3) தன் விருப்பப்படி பகவான் உலகைப் பரிபாலிக்கும் தன்மைக்கு ஸ்திதி எனப்படும்.

(4) பக்தர்களுக்குப் பகவான் அருள்பாலிப்பது போஷணம் எனப்படும்.

(5) மனுக்கள் கடைப்பிடித்து வழிகாட்டும் மார்க்கம், மன்வந்தரம் எனப்படும்.

(6) கர்ம வாசனையால் ஏற்படும் பயன்களை ஊழ்வினை என்பார்கள்; ஊதிகள் என்றும் அவற்றைச் சொல்வது உண்டு.

(7) அரியின் அவதாரங்களைப் பற்றியும், பாகவதர்களின் வரலாறுகளைப்பற்றியும் உப கதைகளுடன் [illegible] கதைகள் எனப்படும்.

(8) பிரளய காலத்தில் யோக நித்திரையில் இருக்கும் பகவானுடன், ஜீவாத்மா சென்று ஒடுங்குவது நிரோதம் எனப்படும்.

(9) தாம் எடுக்கும் வேற்றுமை வடிவங்களை விட்டு விட்டு, தாம் தாமாகவே இருத்தல் முக்தி எனப்படும்.

(10) எதனிடமிருந்து இவ்வுலகின் தோற்றமும் ஒடுக்கமும் ஏற்படுவதாக நிச்சயிக்கப்பட்டுள்ளதோ, அதையே ஆசிரயம் என்கிறார்கள். அதையே பரமாத்மா என்றும் கூறுகிறார்கள்.

தனியாய் இருந்த பரமாத்மா, தான் படைத்த அண்டத்தைப் பேதித்துக்கொண்டு, அதிலிருந்து விராட் புருடராக வெளிப்பட்டார். பரிசுத்தரான அவர், தமக்கு ஒரு இடத்தை உண்டாக்கிக்கொள்ள விரும்பி, சுத்தமான நீரைப் படைத்தார்.

அந்த நீரில் ஆயிரம் ஆண்டுகள் அவர் வசித்தார். நீரில் அவர் வசித்ததாலும், நீர் அவரிடமிருந்து உண்டானதாலும், அவருக்கு நாராயணன் என்னும் பெயர் ஏற்படலாயிற்று.

யோக நித்திரையில் இருக்கும் இந்த இறைவன், பிரபஞ்சத்தைப் படைக்க விரும்பி, யோக நித்திரையிலிருந்து எழுந்து, சங்கல்ப மாத்திரத்தால் நான்முகனைப் படைத்தார்.

சிருஷ்டி என்பது இரு வகைப்படும் :

ஒன்று சமஷ்டி சிருஷ்டி ; மற்றொன்று வியஷ்டி சிருஷ்டி.

ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களையும், மகத் என்பதையும், அகங்காரம் என்பதையும் ஒன்றுடன் ஒன்று கலக்கச் செய்து, அண்டத்தை உண்டாக்கி, அதிலிருந்து நான்முகனை இறைவன் படைத்தார்.

இப்படி இறைவன் தாமே முன்னின்று படைத்திருப்பதைச் சமஷ்டி சிருஷ்டி என்று கூறுவார்கள்.

பிறகு பிரம்மாவுக்குள் அந்தர்யாமியாக இருந்து, பிரமனைக் கொண்டு, இறைவன் நடத்தும் சிருஷ்டியை வியஷ்டி சிருஷ்டி என்பார்கள்.

இப்படி இறைவன் உலகத்தை ஆக்கியும் காத்தும் அழித்தும் வந்தபோதிலும்கூட, இறைவனைக் கரும பந்தம் என்பது பாதிப்பது இல்லை.

"அரசே! இதுவரை சிருஷ்டி என்பது பற்றி உனக்கு நான் சொன்னேன். இனி, காலம் என்பதுபற்றி உனக்குக் கூறுகிறேன்" என்று சொன்னார் சுகர்.

# ஸ்ரீமத் பாகவதம்

## மூன்றாம் ஸ்கந்தம்

### விதுரரும் உத்தவரும்

பரீட்சித்து மன்னனின் கேள்விக்குப் பதில் சொல்லத் தொடங்கினார் சுக முனிவர்: "அரசே! உம் பாட்டனார்களான பாண்டவர்களின் பொருட்டு, பகவான் கிருஷ்ணன், அஸ்தினாபுரத்துக்குத் தூது சென்றார். அப்போது அவர் அரண்மனைகளில் தங்க விரும்பாது, விதுரருடைய இல்லத்துக்குச் சென்று தங்கினார். கண்ணனின் திருவடித் துகள்கள் பட்டுப் பாவனமான தமது இல்லத்தையும் துறந்து விதுரர் காட்டுக்குச் சென்றார். அப்போது அங்கே மைத்ரேய முனிவரைச் சந்தித்து, தமக்கு இருக்கும் ஐயங்களை அகற்றிக்கொள்ள விரும்பி, அவரிடம் சில கேள்விகளை விதுரர் கேட்டார். மைத்ரேய முனிவரும், விதுரருக்கு இருக்கும் ஐயங்களைப் போக்கும் வகையில் பதில் சொன்னார்" என்று கூறினார்.

இப்படிச் சுக முனிவர் சொன்னதும் பரீட்சித்து மன்னன் அவரிடம், "முனிவரே! சிறந்த அறிஞரான விதுரரும் மைத்ரேய முனிவரும் எந்த இடத்தில் சந்தித்து எப்பொழுது உரையாடினார்கள்? விதுரரோ சிறந்த அறிஞர்; மைத்ரேய முனிவரோ பர தத்துவங்களை நன்கு அறிந்தவர். ஆகவே இருவருக்கும் இடையே நடந்த

தத்துவ விசார சம்வாதம் சாமானியமானதாய் இராது; சாரம் நிறைந்த உரையாடலாய்தான் அது இருந்திருக்கக் கூடும். ஆகவே, அவர்கள் இருவரும் நடத்திய உரையாடலை எனக்குத் தாங்கள் சொல்ல வேண்டும்'' என்று வேண்டினன்.

மன்னனுடைய விருப்பத்துக்கு இசைந்து, சுக முனிவர் அதைச் சொல்லத் தொடங்கினர் :

"அரசே! திருதராஷ்டிர மன்னன், தம் புதல்வர்கள் மீது கொண்டுள்ள பாசத்தின் காரணமாக, தர்மத்துக்குப் புறம்பாக நடந்துகொண்டு, பாண்டவர்களுக்குத் தீங்கு செய்தான்.

"தர்மத்தில் நாட்டமுள்ள விதுரர்,இது அநீதி என்று சொல்லி, தன் தமையன் திருதராஷ்டிர மன்னனைத் திருத்த முயன்றார்

"திருதராஷ்டிர மன்னனின் புதல்வன் துரியோதனன், இதை அறிந்து, விதுரர்மீது கோபம் கொண்டான்; அதற்காக விதுரரை அவன் இழித்துப் பேசினன். "வேலைக்காரி மகனை மதிகெட்ட இந்த விதுரனை இங்கே யார் அழைத்தது? உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் நன்றி கெட்ட இந்த விதுரனை நாட்டைவிட்டே துரத்தி விட வேண்டும்'' என்று சொன்னன்.

துரியோதனன் சொன்ன இந்தக் கொடும் சொற்கள், இதயத்தில் பாய்ந்தனவாயினும், தர்மத்தை அறிந்த விதுரர் அந்த நிந்தனைச் சொற்களை நினைந்து வருந்தவில்லை. "இது இறைவனுடைய மாயை'' என்று புன்முறுவல் பூத்தார். தமது வில்லை அரண்மனை வாயிலில் வைத்துவிட்டு, வீடு வாசல்களைத் துறந்து அத்தினபுரத்திலிருந்து விதுரர் புறப்பட்டார். இறைவன் கோயில் கொண்டிருக்கும் புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றார்; புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்றார். கலப்பற்ற

பரிசுத்தமான உணவை—அதாவது பழுத்து, பூமியில் விழுந்த பழங்களை மட்டும்—உண்டார்; புண்ணிய தீர்த்தங்களில் நீராடினார்; தரைமீது படுத்துறங்கினார்; அழுக்கடைந்த மேனியராய், உற்றார் உறவினர் யாரும் தம்மை அடையாளம் தெரிந்துகொள்ளாத நிலையில், துறவியைப் போல மரவுரி தரித்து, பரத நாடு முழுதும் சஞ்சரித்தார்.

இப்படிச் சஞ்சரித்த விதுரர், ஒரு சமயம், பிரபாச தீர்த்தத்துக்குப் போனார்.

இது சமயம் கிருஷ்ண பகவானின் உதவியினால், தம் பகைவர்கள் அனைவரையும் வென்று யுதிட்டிரர் நாட்டைப் பரிபாலித்து வந்தார்.

மூங்கில் ஒன்றுடன் ஒன்று உராய்வதனால் நெருப்பு உண்டாகி, மூங்கில் காடு முழுவதும் எரிந்து சாம்பலாகி விடுவதைப் போல், உற்றார் உறவினர்கள் தம்முள் சண்டையிட்டுக்கொண்டு, மடிந்து போனதைக் கேள்வியுற்ற விதுரர் வருத்தமுற்று, மேற்கு நோக்கி, மௌனமாகச் சரஸ்வதி ஆற்றங்கரை ஓரமாகச் சென்றார். அங்குள்ள முக்கிய தீர்த்தங்களில் நீராடினார்.

பிறகு, அங்கு இருந்து புறப்பட்டு, பல தலங்களைத் தரிசித்துக்கொண்டே, யமுனை ஆற்றங்கரையை விதுரர் அடைந்தார்.

அங்கே கிருஷ்ண பகவானிடம் மிகுந்த பக்தியுள்ள உத்தவரை விதுரர் கண்டார்; மிகுந்த அன்போடும் கனிவோடும் உத்தவரை, விதுரர் ஆலிங்கனம் செய்துகொண்டார். பிறகு, கிருஷ்ணன் முதலிய உற்றார் உறவினர்களின் நலம்பற்றி அவரிடம் விதுரர் விசாரித்தார்

''உத்தவரே! பிரம்ம தேவரின் விருப்பத்துக்கு இசைந்து, பூமியில் அவதாரம் செய்த கிருஷ்ணனும் பலராமனும், உலகத்துக்கு நன்மைகளைச் செய்கின்றனரா? மக்களின்

மனத்தை அதனுல் மகிழ்வித்துக்கொண்டு, சூரசேனன் மாளிகையில் சௌகரியமாக இருக்கின்றனரா? மரியாதைக்குரிய வசுதேவர் சுகமாய் இருக்கிருரா? ருக்மணியின் புதல்வன் யாதவ சேனுபதி பிரதியுத்மனன் சுகமாய் இருக்கிருனு? அரசின் மீது ஆசையைத் துறந்து, கிருஷ்ண பகவானுடைய தூண்டுதலால் பின்னர் அரசை ஏற்ற உக்கிரசேனர் சுகமாய் இருக்கிருரா? சாம்பன் சுகமாய் இருக்கிருரா? சாத்யகி சுகமாய் இருக்கிருரா?'' என்று கேட்டார்.

இப்படி விதுரர் வினவியதும், கிருஷ்ணனுடைய நினைப்பு வந்து, அவருடைய கல்யாண குணங்களில் ஈடுபட்டவராகி, உத்தவர் சிறிது நேரம் மெய்ம்மறந்து மௌனமாய் இருந்தார். கிருஷ்ணனிடம் தாம் வைத்திருக்கும் அன்பின் பெருக்கால், உடல் சிலிர்ப்பப் புளகாங்கிதம் அடைந்தார். அவருடைய பிரிவை ஆற்ற மாட்டாது கண்ணீர் உகுத்தார்.

இவ்வாறு உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கிப் போயிருந்த உத்தவர், சிறிது நேரத்துக்குப் பின்னர், சுய நிலையை அடைந்து கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, விதுரருக்குப் பதில் சொல்லத் தொடங்கினுர்:

''அன்பனே! சூரியனைப் போல் ஒளி பரப்பிய கிருஷ்ணன் மறைந்து விட்டார்; காலம் என்னும் பெரிய பாம்பு, நமது இல்லங்களில் இருந்த சிறப்புக்களை எல்லாம் விழுங்கிவிட்டது. ஆகவே, நம் உறவினர்களின் நலத்தைப் பற்றி, உமக்கு நான் என்ன கூற முடியும்?

''அந்தோ! கிருஷ்ண பகவான் மறைந்ததனுல், இந்த உலகம் தனது பாக்கியத்தை இழந்து விட்டது. கிருஷ்ணனுடன் சேர்ந்து கூடவே வாழ்ந்து உறவு கொண்டாடிய யாதவர்கள், பூமியைக் காட்டிலும் அதிக பாக்கியக் குறைவுள்ளவர்கள் ஆயினர். கூடவே

வாழ்ந்து வந்தும்கூட, கிருஷ்ணனை அவர்கள் பகவான் என்று அறிந்துகொள்ளவில்லை. நீரில் தெரியும் சந்திரனின் பிரதிபிம்பத்தை, மீனாக எண்ணிக்கொண்டு, மற்ற மீன்கள் வாழ்வதைப் போலவே, யாதவர்களும் கிருஷ்ண பரமாத்மாவை, தங்களையொத்த ஒரு மானுடராக மட்டும் எண்ணிக்கொண்டு வாழ்ந்துவிட்டனர். அறிவும் ஆற்றலும் திறமையும் மதிநுட்பமும் வாய்ந்த யாதவர்கள்கூட, கிருஷ்ணனை யாதவ குலச் செம்மலாகக் கருதினார்களேயன்றி, பரமாத்மாவாகக் கருதவில்லை. மாயையில் மயங்கிய அவர்கள் கிருஷ்ண பரமாத்மாவை, "இவன் யாதவன்; எங்கள் உறவினன்" என்று மட்டும்தான் உரிமை கொண்டாடினார்களேயன்றி, இறைவனாகக் கருதவில்லை. ஆபரணங்களுக்கே அழகைக் கொடுக்கும் வடிவழகைப் பெற்ற அந்தக் கண்ணபிரான், இவ்வுலக வாழ்வைத் துறந்து மறைந்து போனார். யாதவர்களும் மதுவருந்தி, மதிமயக்கமுற்று, ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக் கொண்டு மடிந்து போனார்கள்" என்று சொன்னார்.

பிறகு தமது பேச்சை மேலும் தொடர்ந்து, "தாம் வைகுந்தம் செல்வதற்கு முன்பு, அனைத்தையும் அறிந்த கண்ணபிரான் எனக்கு ஆத்ம ஞானத்தை உபதேசித்தார். வலம் வந்து அவருடைய திருவடிகளை வணங்கி நான் விடைபெற்றுக்கொண்டேன்; அவரும் வைகுந்தம் போய் விட்டார். அந்தப் பரமாத்மாவைப் பிரிந்து, கவலையில் மூழ்கியவனாகி, நான் இங்கு வந்தேன். இனி இங்கிருந்து நான் பதரிகாசிரமம் செல்ல வேண்டும்" என்று உத்தவர் சொன்னார்.

உற்ற தம் நண்பர்களும் உறவினர்களும் ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக்கொண்டு அழிந்து போனார்கள் என்பதை உத்தவர் மூலம் கேள்வியுற்ற விதுரர் முதலில் ஆற்றொணாத் துயரத்தில் மூழ்கினார்.

பிறகு தமக்கு இருக்கும் ஞானத்தைக் கொண்டு, அந்தத் துயரத்தை ஒருவாறு அவர் போக்கிக்கொண்டார்.

அதன் பின்னர் உத்தவரை நோக்கி, "அண்ணலே! தாம் வைகுந்தம் செல்லுவதற்கு முன்னர், கிருஷ்ண பரமாத்மா உமக்கு உபதேசித்த ஆத்ம ஞானத்தை, நானும் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே அதைத் தாங்கள் உபதேசிக்க வேண்டும்" என்று விதுரர் வேண்டினர்.

விதுரரின் விருப்பத்தை அறிந்த உத்தவர் அவரிடம், "விதுரரே! தத்துவ ஞானத்தைத் தெரிந்துகொள்ளும் விருப்பம் உள்ள நீர், மைத்ரேயரிடம் சென்று அதைக் கேட்டுத் தெரிந்துகொள்ளும். அதை உமக்கு உபதேசிக்கும்படி, பகவான் மைத்ரேயருக்குக் கட்டளையிட்டு இருக்கிறார்.பகவான் கட்டளையிட்ட சமயத்தில் நானும் அருகில் இருந்தேன். அதனால்தான் உம்மை மைத்ரேயரிடம் போகச் சொல்லுகிறேன்" என்று உத்தவர் தெரிவித்தார்.

பின்னர், விதுரருடன் இருந்து அன்றைய இரவை, யமுனை ஆற்றங்கரையில் கழித்துவிட்டு, பொழுது புலர்ந்ததும், பதரிகாசிரமத்தை நோக்கி, உத்தவர் புறப்பட்டுப் போனர்.

பகவான் கிருஷ்ணன், உடலைத் தியாகம் செய்துவிட்டு, வைகுந்தம் சென்றதையும், அப்போது தன்னைப் பற்றி அவர் நினைத்ததையும் உத்தவர் மூலம் கேள்வியுற்று, விதுரர் வாய்விட்டு அழுதார்; கண்ணன் நினைவாகவே எப்பொழுதும் இருக்கும் உத்தவரின் பிரிவையும் அவரால் தாங்க முடியவில்லை.

பிறகு, மைத்ரேய முனிவரைத் தேடிக்கொண்டு, விதுரர் புறப்பட்டார்; யமுனைக் கரையிலிருந்து புறப்பட்ட விதுரர், பல தினங்கள் நடந்து, மைத்ரேயர் முனிவர் வாழும் கங்கைக்கரையை—அரித்துவாரத்தை—அடைந்தார்.

# சிருஷ்டி

கௌரவர்களில் சிறந்தவரான விதுரர் அளவற்ற ஞானமுடைய மைத்ரேய முனிவரைக் கங்கைக் கரையில் சந்தித்தார். அவரை அணுகி, "சான்றாண்மை மிக்கவரே! சுகத்தை நாடி மக்கள் காரியங்களில் ஈடுபடுகிறார்கள்; அதனால், அவர்களுக்குச் சுகமும் கிடைப்பது இல்லை; துக்கமும் போவது இல்லை. அவர்கள் மேற்கொள்ளும் முயற்சியின் பயனாய் மேலும் துக்கம்தான் அதிகமா கிறது. சம்சார சாகரத்தில் உழன்று தவிக்கும் நாங்கள், எதைச் செய்தால் சுகமடையலாம்? அதைத் தாங்கள் கூற வேண்டும். ஊழ்வினைப் பயனாய் மாந்தர்கள் பகவா னிடம் பக்தி செலுத்தாமல் இருக்கின்றனர்; அதனால் அதர்மத்தில் நாட்டம் அதிகமாகி, துக்கமுற்றுத் தவிக் கின்றனர். அருள்பாலித்து அத்தகையோரைக் காக்கும் பொருட்டுத்தான், தங்களைப் போன்ற சான்றோர்கள் உலகில் சஞ்சரிக்கின்றனர். ஆகையால், எந்த மார்க்கத் தில் பகவானை ஆராதித்தால், இதயம் சுத்தமாகும்? இதயம் எந்த நிலையில் இருந்தால், இறைவன் அங்கு எழுந்தருளி, உண்மையான ஞானத்தைக் கொடுப்பான்? எதற்காக இறைவன் இந்த உலகத்தைப் படைத்துக் காத்து, அழித்துத் திருவிளையாடல் புரிகிறான்? இறை வனின் திருவிளையாடல்கள் உள்ளத்துக்கு மகிழ்ச்சியை விளைவிப்பதைப்போல், வேறு எதுவும் விளைவிப்பது இல்லை. ஆகவே, இறைவனின் திருவிளையாடல்களைப் பற்றிய கதைகளைக் கேட்பதில் நான் அதிக விருப்ப முள்ளவனாக இருக்கிறேன்" என்று சொன்னார்.

உயிரினங்கள் பிறப்பது, வாழ்வது, முக்தியடை வதுபற்றி விதுரர் வினவிய கேள்விகளை மைத்ரேய முனிவர் வெகுவாகப் பாராட்டினார். பிறகு, அவரை

நோக்கி, "நல்லியல்பு படைத்த விதுரா! பகவானிடத்தில் மாருத அன்புகொண்டிருக்கும் நீ, உலக நன்மையின் பொருட்டுத்தான் இந்தக் கேள்விகளைக் கேட்டிருக்கிறாய். உனது நன்மையில் நாட்டம் கொண்டு, இந்தக் கேள்விகளை நீ கேட்கவில்லை என்பது திண்ணம். ஆகவே, உனது புகழ் என்றும் மங்காது; பகவான் நினைவாகவே எப்பொழுதும் இருக்கின்ற உன்னைப் பகவானும் மறக்கவில்லை. தாம் வைகுந்தத்துக்குச் செல்லும்போது, உன் நினைப்பு வந்து, உனக்கு ஆத்ம ஞானத்தைப் போதிக்கும்படி, எனக்கு அவர் கட்டளையிட்டுள்ளார். ஆகவே, நீ கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் பதில் சொல்ல நான் கடமைப்பட்டு இருக்கிறேன்" என்று கூறிவிட்டு, மைத்ரேய முனிவர் பதில் சொல்லலானார் :

விதுரா! பகவான் இந்த உலகத்தை ஆக்கி, காத்து, அழித்து, திருவிளையாடல்கள் புரிகிறார் அல்லவா? அவற்றைப்பற்றி, வரிசையாக உனக்கு நான் கூறுகிறேன்.

இறைவனின் படைப்பைப் பற்றியும் தாம் படைப்புத் தொழிலைத் தொடங்குவதற்கு முன்னர், இறைவன் இருந்த நிலைமைபற்றியும் முதலில் கூறுகிறேன்.

இந்தப் பிரபஞ்சத்தைப் படைப்பதற்கு முன்னர், இறைவன் தனி ஒருவனாக இருந்தான். பார்ப்பவன், பார்க்கப்படுபவன் என்னும் பேதங்கள் அப்போது கிடையா. தம்மைச் சுற்றிலும் நோக்கியபோது, எதையும் எவனையும் இறைவன் காணவில்லை. எங்கும் ஒரே சூனியமாய் இருந்தது.

உலகம் சூனியமாய் இருப்பது இறைவனுக்குப் பிடிக்கவில்லை. தம்முள் ஒடுங்கி யிருக்கும் ஆற்றலை வெளிப்படுத்தி, உலகத்தைச் சிருஷ்டிக்க இறைவன் திருவுளம்பற்றினான்.

இறைவனுக்குள் ஒடுங்கி இருக்கும் இந்த ஆற்ற லேயே மாயை என்று கூறுகிறார்கள்.

மாயை என்பதற்கு இரு தன்மைகள் உண்டு: ஒன்று காரணம்; மற்றொன்று காரியம்.

காரணமான இறைவன் மாயையின் உதவி கொண்டுதான் பிரபஞ்சத்தைப் படைக்கிறார்; இறைவன் காரண பூதமாவார்; அவர் படைத்த பிரபஞ்சம் காரிய பூதமாகும். காரணமும் காரியமும் பின்னிப் பிணைந்து தான் பிரபஞ்சத்தை நடத்துகின்றன* என்று சொல்லிவிட்டு, விதுரருக்கு இருக்கும் ஐயங்களைப் போக்கும் வகையில், இறைவனின் திருவிளையாடல் பற்றியும், அவை சம்பந்தமான தத்துவங்கள் பற்றியும் மைத்ரேயர் உபதேசித்தார்.

இதன் பின்னர், விதுரர் அவரிடம், "முனிபுங்கவரே! பகவானுடைய நாபிக் கமலத்தில் உண்டான பிரம்ம தேவன், தம் தேகத்திலிருந்தும் மனத்திலிருந்தும் யார் யாரைப் படைத்தார்? இதுபற்றி விஸ்தாரமாக எனக்குச் சொல்ல வேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டார்.

விதுரரின் விருப்பத்துக்கு இசைந்து, மைத்ரேய முனிவர், பிரம்மதேவனின் சிருஷ்டி பற்றியும், சிருஷ்டியின் தன்மையைப் புரிந்துகொள்ளும் பொருட்டு, காலம் என்பதைப் பற்றியும் முதலில் விவரித்துச் சொன்னார்.

"விதுரா! காலம் என்பது சிருஷ்டியுடன் நெருங்கிய தொடர்புடையது; காலம் என்பதைத் தெரிந்துகொண்டால்தான், சிருஷ்டியைப்பற்றித் தெரிந்துகொள்ள முடி

*Cause and effect; God and nature, Matter and energy என்று ஆங்கிலத்தில் இந்த இரட்டை நிலையை பல் வகையில் விவரிப்பார்கள்.

யும்; ஆகவே காலம் என்பது பற்றி முதலில் கூறு கிறேன்.''

காலம் என்பதைக் கண்கூடாகக் காண முடியாது; காரியத்தைக் கொண்டே காலத்தை ஊகித்து அறிய வேண்டும். காலம் என்பதற்கு ஆரம்பமும் கிடையாது; முடிவும் கிடையாது. காலத்தை ஒரு கருவியாகக் கொண்டுதான், இறைவன் இந்தப் பிரபஞ்சத்தை உண் டாக்குகிறார்; பாதுகாக்கிறார்; தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறார். ஆரம்பமும் முடிவும் இல்லாத காரணத் தால், காலம் என்பதை இறைவனுக்கு ஒப்பாகச் சொல்ல லாம். ஆகவே, காலத்துக்கு உட்பட்டே சிருஷ்டி நடை பெறுகிறது என்பதை நினைவில் வைத்துக்கொண்டு சிருஷ்டியைப்பற்றிக் கவனிக்கலாம்.

இப்பொழுது இருப்பதைப் போலவே இந்தப் பிரபஞ்ச மானது, முன்பும் இருந்தது; இனி மேலும் இருக்கும்.

சிருஷ்டி என்பது ஒன்பது நிலையில் நடைபெறு கிறது. அதை இப்போது சொல்லுகிறேன்:

(1) சத்துவம், ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்று குணங்களின் ஏற்றத் தாழ்வால், ஏற்பட்ட முதல் சிருஷ்டி மகத் தத்துவம் எனப்படும்.

(2) இரண்டாவது சிருஷ்டி அகங்காரம். இதி லிருந்து பஞ்ச பூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டாயின.

(3) மூன்றாவது சிருஷ்டி சூட்சும பூதங்களைக் கொண்ட தன்மாத்திரைகள். தன்மாத்திரைக்குப் பஞ்ச பூதங்களை உண்டாக்கும் ஆற்றல் உண்டு.

(4) நான்காவது இந்திரியங்களின் சிருஷ்டி. இது ஞானேந்திரியம், கருமேந்திரியம் என்று இரு வகைப்

(5) இந்திரியங்களுக்கு அதிபதியான தேவதைகளின் சிருஷ்டி. இது ஐந்தாம் சிருஷ்டி

(6) ஆறுவது அவித்தையின் சிருஷ்டி.

இந்த ஆறு சிருஷ்டிகளும், இறைவன் தாமே நேரில் படைத்த காரணத்தால், இவற்றைப் பிராக்கிருத சிருஷ்டி என்பார்கள்.

(7) பிராக்கிருத சிருஷ்டியிலிருந்து பிரம்மா மூலம் தோன்றிய சிருஷ்டி, வைகிருத சிருஷ்டி எனப்படும். இதில் முதலாவது தோன்றிய சிருஷ்டி தாவரங்கள் ஆகும்.

வைகிருத சிருஷ்டியில் அதி முக்கியமானது தாவர சிருஷ்டி. இது ஆறு வகைப்படும்.

(i) பூக்காமல் காய்க்கும் தன்மையுடையவை ஒரு வகை. அரசு, அத்தி, பலா, ஆல் முதலியன இந்த வகையைச் சாரும்.

(ii) பூத்துக் காய்த்துப் பழுத்து, பிறகு பட்டுப் போகும் தன்மையுடைவை இரண்டாவது வகை. நெல், கோதுமை பயறு முதலியன, இந்த வகையைச் சாரும்.

(iii) மரங்களையோ மற்றதையோ பற்றிக் கொண்டு, படர்கின்ற கொடிகள். மல்லிகை முதலியன இந்த வகையைச் சாரும்.

(iv) வெளிப் பட்டைகள் உறுதியாய் இருப்பவை மற்றொரு வகை: மூங்கில், வாழை முதலியன இந்த வகையைச் சாரும்.

(v) கொழு கொம்பைப் பற்றிக்கொள்ளாமல் படரும் தன்மையுடையவை ஒரு வகை; முலாம், பரங்கி, பூஷணி இந்த வகையைச் சாரும்.

(vi) மரமாக இருந்து எப்பொழுதும் பயன் தருபவை மற்றொன்று; மா, நெல்லி முதலியன ...ில் அடங்கும்.

(8) பறவை, விலங்கு இனங்கள் எட்டாவது வகைச் சிருஷ்டி. இது இருபத்தெட்டு வகைப்படும். எதிர் காலத்தைப்பற்றி அறியும் தன்மை இன்மை, இருள் கவிந்த மனம், மோப்பத்திறல் அறியும் தன்மை, மனச்சாட்சி இன்மை. இந்த நான்கு தன்மைகளும் இந்த வகைச் சிருஷ்டிக்கு உண்டு. பசு, ஆடு, எருமை முதலியன இரண்டு குளம்புகள் உள்ளவை; கழுதை, குதிரை, கோவேறு கழுதை, கவரிமான், சரபம் முதலிய ஒரு குழம்பு உள்ளவை, நாய், நரி, புலி, பூனை, யானை, முயல், சிங்கம் முதலிய விலங்குகள் ஐந்து நகங்கள் உள்ளவை, பருந்து, கழுகு, கொக்கு, கோட்டான் முதலியனவும் ஐந்து நகங்கள் உள்ளவை.

(9) மனித சிருஷ்டி : இவர்கள் ஒரே இனம்; ஆகாரத்தை கீழ்நோக்கிச் செலுத்திக்கொள்பவர்கள்; ரஜோ குணம் மிக்கவர்கள்; கர்மத்திலேயே கண்ணாய் இருப்பவர்கள்; துக்கத்தையும் சுகம் எனக் கருதும் இயல்புடையவர்கள்.

மேலே குறிப்பிட்ட மூன்று சிருஷ்டிகளும் வைகிருதம் என்னும் வகையைச் சேர்ந்தவை.

(10) தேவ சிருஷ்டி.

இந்தப் பத்தும் பிரம்ம தேவரால் செய்யப்பட்ட சிருஷ்டிகள் ஆகும்.

இனி மன்வந்தரங்களையும், வம்சங்களையும் பற்றிக் கூறுகிறேன்.

## காலமும் கடவுளும்

“விதுரா ! காலம் என்பதை அளவையாகக் கொண்டு, நிகழும் சிருஷ்டிபற்றி இதுவரை சொன்னேன். இப்போது காலம் என்பது யாது என்பது பற்றிக் கூறுகிறேன்.

இந்தப் பிரபஞ்சத்தில் எது மிக மிகச் சிறியதோ, எதை மேலும் பகுக்க முடியாதோ, எது மற்றதுடன் சேராமல் தனியாக இருக்கிறதோ, அதைப் பரமாணு என்பார்கள். இந்தப் பரமாணுவின் இடத்தைக் கடக்க, சூரியனுக்கு எவ்வளவு நேரம் பிடிக்குமோ, அதைப் பரமாணுக் காலம் என்பார்கள்.

இந்தப் பரமாணுக் காலம் இருக்கிறதே, இதுதான் காலத்தின் அடி நுணுக்கப் பகுதியாம். ஆண்டு என்பது காலத்தின் மேல் பெருக்கப் பகுதியாகும்.

இந்த இரண்டு பகுதிகளுக்கும் இடையில் நிலவும் காலத்தின் அளவை, பல நிலைகளில், பிரித்துக் கணக்கிட்டு இருக்கிறார்கள்.

இரண்டு பரமாணுக்கள் சேர்வதை அணுவென்றும், அணுக்கள் மூன்று சேர்வதை திரிஸ்ரேணு என்றும் கணக்கிட்டு இருக்கிறார்கள். சூரிய ஒளிபடும்பொழுது சன்னல்கள் மூலம் சூரிய ஒளியில் பறந்துகொண்டிருக்கும் தூசு இருக்கிறதே, அது திரிஸ்ரேணு எனப்படும்.

மூன்று திரிஸ்ரேணுக்கள் சேர்ந்தது திருடி எனப்படும். திருடி என்னும் பொருளைக் கடக்க, சூரியனுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கிறதோ, அந்தக் கால அளவையும் திருடி என்று குறிப்பிடுவார்கள்.

நூறு திருடிகள் சேர்ந்தது ஒரு வேதம்,
மூன்று வேதங்கள் சேர்ந்தது ஒரு லவம்,
மூன்று லவங்கள் சேர்ந்தது ஒரு நிமிஷம்,
அதாவது கண் இமைக்கும் நேரம்.
மூன்று நிமிஷங்கள் சேர்ந்தது ஒரு கணம்,
ஐந்து கணங்கள் சேர்ந்தது ஒரு காஷ்டை,
பதினைந்து காஷ்டைகள் சேர்ந்தது ஒரு லகு,
பதினைந்து லகுக்கள் சேர்ந்தது ஒரு நாழிகை,
இரண்டு நாழிகை சேர்ந்தது ஒரு முகூர்த்தம்.

ஆறு அல்லது ஏழு நாழிகைகள் ஒரு பிரகரம் எனப்படும்: பிரகரம் என்பதை யாமம் என்றும் சொல் வார்கள். எட்டு யாமங்கள் சேர்ந்தது, மனிதர்களுக்கு, இரவு பகலைக் கொண்ட ஒரு நாள் ஆகும்.

பதினைந்து நாட்கள் சேர்ந்தது ஒரு பட்சம்.

பட்சம் என்பது சுக்ல பட்சம் (வளர் பிறை) கிருஷ்ண பட்சம் (தேய் பிறை) என இரு வகைப்படும்.

இரண்டு பட்சங்கள் சேர்ந்தது ஒரு மாதம்.

இரண்டு மாதங்கள் சேர்ந்தது ஒரு ருது.

மூன்று ருதுக்கள் சேர்ந்தது ஒரு அயனம்; அயனம் இரண்டு சேர்ந்தது—அதாவது மாதங்கள் பன்னிரண்டு சேர்ந்தது—ஒரு வருடம் ஆகும்.

இத்தகைய நூறு வருடங்கள் சேர்ந்தது, மனிதனுக்குப் பூரண ஆயுள் எனப்படும்.

காலம் என்பது இப்படி ஸ்தூலமாயும் சூட்சும மாயும் இருக்கிறது.

இறைவனுடைய சிருஷ்டி என்னும் கர்ம சக்தியை, காலம் என்னும் அளவைக் கொண்டு கணக்கிட்டு நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

மனிதர்களுக்கு நூறு வருடங்கள் தேவர்களுக்கு ஒரு நாள் ஆகும். உத்தராயன காலம் தேவர்களுக்குப் பகல் பொழுது; தட்சிணாயன காலம் தேவர்களுக்கு இராப் பொழுது.

மனிதர்களுக்கு நூறு வருடங்கள் பூர்ண ஆயுள்; அதேபோல, தேவர்களுக்கு, நூறு தேவ வருடங்கள் பூரண ஆயுள் ஆகும்.

தேவ வருடங்களைத் தேவமானம் என்றும் சொல்லு வார்கள்.

கிருத யுகம் என்பது, பதினாறாயிரத்து எண்ணூறு தேவ வருடங்களைக் கொண்டது :

திரேதா யுகம் பதினையாயிரத்து அறு நூறு தேவ வருடம்.

துவாபர யுகம் பதினாலாயிரத்து நானூறு தேவ வருடம்.

கலியுகம் பதின்மூவாயிரத்து இரு நூறு தேவ வருடம்.

கிருத யுகத்தில் தருமம் நான்கு கால்களைக்கொண்டு விளங்கும்.

திரேதா யுகத்தில் மூன்று கால்களுடன் விளங்கும்.

துவாபர யுகத்தில் இரண்டு கால்களுடன் விளங்கும்.

கலி யுகத்தில் ஒற்றைக் காலுடன் நிற்கும்.

மேலே கூறப்பட்ட சதுர் யுகங்கள் ஆயிரம் சேர்ந்தது நான்முகனுக்கு ஒரு பகல் பொழுது ஆகும்; அவ்வாறே ஆயிரம் யுகங்கள் சேர்ந்தது ஒரு இராப் பொழுது ஆகும்.

இந்தப் பகல் பொழுதில், பிரம்ம தேவன் சிருஷ்டி செய்வார்; இராப் பொழுதில் தூங்குவார்; பிரம்ம தேவன் தூங்குகிற காலத்தில்தான் பிரளயம் என்பது ஏற்படும்.

தமது பகல் பொழுது நேரத்தில் பிரம்ம தேவன் பதினான்கு மனுக்களை உண்டாக்கினார். ஒவ்வொரு மனுவுக்கும் உரிய காலத்தை, அந்த மனுவின் பெயரைச் சேர்த்து மன்வந்தரம் என்பார்கள்.

ஒவ்வொரு மன்வந்தரத்தில் தோன்றும் மனுவும், அந்த மனுவின் வம்சத்தினராகத் தோன்றும் ரிஷிகளும், அரசர்களும், தேவர்களும், இந்திரன் முதலியவர்களும், கந்தர்வர்கள் ஆகியோரும் அந்தந்த மன்வந்தர கால மட்டும் மூன்று உலகங்களையும் பாதுகாக்கிறார்கள்.

மானிடர்களுக்கு வயது நூறு என்று கால வரையறை இருப்பதைப் போலவே, பிரபஞ்சத்தைப் படைக்

கும் பிரமதேவனுக்கும் கால வரையறை உண்டு. பிரம்மா வின் ஆயுள் நூறு சதுர் யுகங்கள் ஆகும்.

பிரம்மாவின் ஆயுளில் முற்பாதியை பூர்வ பரார்த்தம் என்றும், பிற் பாதியை உத்தர பரார்த்தம் என்றும் இரு பிரிவுகளாகப் பிரித்துக் கூறுவர்.

முதல் பரார்தத்தைப் பிரம்ம கல்பம் என்று சொல்லுவது உண்டு; சில சமயம் பிரம்மா நாத சொரூபனுய் இருந்தபடியால், பிரம்மாவுக்கு நாதப் பிரம்மம் என்னும் பெயரும் ஏற்படலாயிற்று.

முதல் பரார்த்தின் கடைசிப் பகுதியில் ஒரு கல்பம் உண்டாயிற்று. அதற்குப் பாத்ம கல்பம் என்று பெயர். இந்தக் கல்பத்தில் அநிருத்த பகவானின் நாபியிலிருந்து, தாமரைப் பூப்போல இந்தப் பிரபஞ்சம் உண்டான காரணத்தால், இந்தக் கல்பத்துக்குப் பாத்ம கல்பம் என்று பெயர்.

பிரம்மா முதலான அனைவருக்குமே கால வரையறை என்பது உண்டு.

ஆனுல் அநாதியான இறைவன் மட்டுமே கால வரம்புகளைக் கடந்தவர்; எப்பொழுதும் இருப்பவர்

## சுவாயம்புவ மனு

மைத்ரேய முனிவர் மேலும் தொடர்ந்து சொல்லுகிறார் :

"விதுரா! காலம் என்பதைப்பற்றி இப்போது சொன்னேன். இனி, பிரம்ம தேவன் செய்த சிருஷ்டி பற்றிக் கூறுகிறேன்.

முதலில் பிரம்ம தேவர் ஐந்து தீய குணங்களைப் படைத்தார்; தன்னைப்பற்றி அறியாத்தன்மை, உடம்பே தான் என்னும் எண்ணம், போகத்தின்மீது இச்சை, கோபம், சாவே முடிவு என்னும் சித்தாந்தம்.

இந்த ஐந்து தீய சிருஷ்டிகளையும் படைத்த பின்பு, பிரம்மாவுக்குத் திருப்தி ஏற்படவில்லை. பிறகு இறைவனைத் தியானம் செய்து மனத்தைத் தூயதாக்கிக் கொண்டு, மீண்டும் படைக்கத் தொடங்கினார்.

புலனடக்கம், தியானம், ஊக்கம் இவற்றையுடைய நால்வரைப் பிரம்ம தேவன் முதலில் படைத்தார். ஸனகர் ஸனந்தனர், ஸனாதனர், ஸனத் குமாரர் ஆகிய நான்கு முனிவர்களும் பிரம்ம தேவனால் முதலில் படைக்கப்பட்டனர். தாம் படைத்த அவர்களை நோக்கி, "குழந்தைகளே! சந்தான விருத்தியில் ஈடுபடுங்கள்" என்று பிரம்ம தேவர் சொன்னார்.

அவர்களோ நிவர்த்தி மார்க்கத்தில் நாட்டமுடையவர்களாய் இருந்தனர்; ஆகவே, வாசுதேவனிடத்தில் மனத்தைச் செலுத்தி, சந்தான விருத்தியில் ஈடுபடாமல் இருந்துவிட்டனர்.

தாம் பணித்த கட்டளைப்படி தம் புதல்வர்கள் நடக்காமல் இருப்பதை அறிந்த பிரம்ம தேவர் அளவற்ற சீற்றம் கொண்டார். வந்த கோபத்தை அடக்க முயன்றும் பிரம்ம தேவரால் முடியவில்லை. கோபம் உள்ளடங்காமல் பீறிட்டுக்கொண்டு, பிரம்ம தேவருடைய புருவ மத்தியில் ஒரு குமரனாக வெளிப்பட்டது.

நீலமும் சிவப்பும் கலந்த நிறத்துடன், தேவர்கள் அனைவருக்கும் முதன் முதலாகத் தோன்றிய இவரைத் தான் ருத்திரர் என்பார்கள்.

பிறந்த இந்தக் குழந்தை அழுதுகொண்டே பிரம்ம தேவனை நோக்கி, "உலகத்தைப் பரிபாலிப்பவரே! எனக்குப் பெயரிட்டு, உரிய இடங்களைக் கூறும்" என்று வேண்டினார்.

ருத்திரர் இவ்வாறு வேண்டியதும் பிரம்ம தேவர் அவரை நோக்கி, "தேவர்களில் சிறந்தவரே! அழுது

கொண்டே உமது விருப்பத்தை நீர் வெளியிட்டதால் ருத்திரன் என்ற பெயரில் நீர் பிரசித்தமாய் விளங்குவீர்'' என்று பதில் சொன்ஞர்.

''இதயம், பொறிகள், உயிர், வெளி, காற்று, நெருப்பு, நீர், பூமி, சூரியன், சந்திரன், தவம் இந்தப் பதிஞெரு இடங்களையும் உமக்குள்ள இடங்களாக முன்னமே திட்டம் செய்துள்ளேன்'' என்று பிரம்மதேவர் தொடர்ந்து கூறிஞர்.

இந்த ருத்திரருக்கு மேலும் பத்துப் பெயர்களைச் சூட்டியதோடு, பதிஞெரு பத்தினிகளையும் பிரம்மதேவர் வழங்கிஞர். பிறகு அந்த ருத்திரரிடம், ''இந்தப் பத்தினிகளுடன் சேர்ந்து சந்ததிகளையும் நீர் உண்டுபண்ணும்'' என்று பிரம்ம தேவர் கட்டளையிட்டார்.

அதன்படி தமக்கு நிகரான சந்தானங்களை ருத்திரர் சிருஷ்டி செய்தார்; அவர் சிருஷ்டித்த பிள்ளைகள், தந்தையைப் போலவே அதிக கோபமுடையவர்களாய் இருந்தார்கள்.

இவர்களைப் பார்த்ததும் ஏதாவது விபரீதம் விளையக் கூடும் என்று பிரம்ம தேவர் அஞ்சிஞர். ஆகவே, அவர் ருத்திரரை நோக்கி, ''ருத்திரரே! நீர் படைத்த சந்தானங்களின் பார்வை, என்னையும் திக்குகளையும் பொசுக்குகிறது. இத்தகையோரைச் சிருஷ்டிப்பதை நிறுத்திக்கொள்ளும். சகல உயிர் இனங்களும் நலம் அடையத்தக்க ஒரு தவத்தை நீர் செய்வீராக! அதஞல், முன்னைப் போலவே உலகத்தைப் படைக்கும் ஆற்றலை நீர் பெறுவீர்'' என்று சொன்ஞர்.

பிரம்ம தேவரின் விருப்பத்துக்கு இசைந்து, விடை பெற்றுக்கொண்டு, ருத்திரன் காட்டுக்குத் தவம் செய்யப் போய்விட்டார்.

ருத்திரர் சென்ற பின்னர், தியானம் செய்து, உலகத்தை விருத்தி செய்யத்தக்க புதல்வர்களை தம் மனத்திலிருந்து பிரம்ம தேவர், உண்டுபண்ணினுர். மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலகர், கிரது, வஸிஷ்டர், தக்ஷர், நாரதர்.

இப்படிப் பத்துப் புதல்வர்களைப் பிரம்மதேவர் உண்டுபண்ணினுர்; இவர்களில் பத்தாவதாக உண்டானவர் நாரதர்.

பிரம்மதேவரின் நான்கு முகங்களிலிருந்து நான்கு வேதங்கள் வெளிப்பட்டன.

பிரம்மதேவர் இப்படி ஏற்பாடுகளைச் செய்தும் உலகம் விருத்தியடைய வில்லை. என்ன செய்வது என, பிரம்மா சிந்தனையில் ஆழ்ந்தார்.

அப்போது அவருடைய மேனியிலிருந்து, ஒரு உருவம் தோன்றிற்று. அவ்வாறு தோன்றிய உருவத்தைக் காயம் என்று கூறுகின்றனர்.

தோன்றிய உருவம் இரண்டாகப் பிரிந்தது; அப்படிப் பிரிந்ததை, ஒன்றை ஆண் என்றும் மற்ருென்றைப் பெண் என்றும் கூறுகிருர்கள்.

இவ்விதம் ஏற்பட்ட ஆண் உருவத்துக்கு சுவாயம்புவ மனு என்று பெயர். பெண் உருவத்துக்குச் சதரூபை என்று பெயர்.

சுவாயம்புவ மனுவுக்குச் சதரூபை மனைவியாளுள்.

இந்தச் சதிபதிகளுக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தனர். பிரியவிரதர், உத்தானபாதர் என்னும் இரு ஆண் மக்களையும், ஆகூதி, தேவஹூதி, பிரஹூதி ஆகிய மூன்று பெண் மக்களையும் அவர்கள் பெற்றனர்.

பெண்கள் மூவரில் மூத்தவளை, ருசி என்னும் பிரஜாபதிக்கும், நடுவில் பிறந்தவளை கர்த்தமப் பிரஜாபதிக்கும், கடைசிப் பெண்ணுன பிரஹூதி என்பவளை தக்ஷப் பிரஜாபதிக்கும் கொடுத்தார்.

இவர்கள் மூலம்தான் இந்த உலகம் மக்களால் நிரம்பலாயிற்று.

## வராக அவதாரம்

சுவாயம்புவ மனுவைப்பற்றி, மைத்ரேய முனிவர் கூறியதும், விதுரர் அவரை நோக்கி, "முனிபுங்கவரே! சதரூபை என்னும் மனைவியை அடைந்த பின்பு, சுவாயம்புவ மனு என்ன செய்தார்? திருமாலின் திருவடிகளைத் தமது இதயத்தில் வைத்துப் போற்றும் அவருடைய சரிதத்தைக் கேட்க நான் பெரிதும் விரும்புகிறேன்" என்று சொன்னார்.

அதற்கு மைத்ரேய மகரிஷி, விதுரரே! சுயாம்புவ மனு, தம் மனைவி சதரூபையையும் அழைத்துக்கொண்டு பிரம்ம தேவரிடம் சென்று அவரை வணங்கினார். கை கூப்பி வணங்கியவறே பிரம்மதேவரை நோக்கி, "இந்த உலகத்தைப் படைத்தவர் நீர்; ஆதரித்து அதைக் காப்பாற்றி, விருத்தி செய்பவர் நீர். எது எதை நாங்கள் செய்தால் அது உமக்குத் திருப்தி தருமோ, அதை எங்களுக்கு நீர் தெரிவிக்க வேண்டும். எந்தக் கர்மத்தைச் செய்தால், இம்மையிலும் மறுமையிலும் நன்மை உண்டாகுமோ அதை எங்களுக்குக் கூறுங்கள்" என்று வேண்டினார்.

சுவாயம்புவ மனு இவ்வாறு வேண்டியதும், பிரம்ம தேவர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். "மகனே! தந்தையின்பால் மகன் நடந்துகொள்ள வேண்டிய முறைப்படி நீ நடக்க முன்வந்ததுபற்றி, நான் அகமகிழ்ந்தேன். நலம்பெற்று வாழ வேண்டும் என்று உங்கள் இருவரையும் நான் வாழ்த்துகிறேன். தத்தம் ஆற்றலுக்கு ஏற்ப, கள்ளம் கபடம் இல்லாது, தந்தையின்

விருப்பத்தை நிறைவேற்றுவதுவே, மகன் தந்தைக்குச் செய்யத்தகும் தலையாய கடமையாகும். இந்தச் சதரூபை யிடத்தில் உனக்கு நிகரான குழந்தைகளை நீ உண்டு பண்ணு; பெற்ற மக்களையும் மற்றவர்களையும் அன்புடன் பேணிக் காப்பாற்று; பூமியைப் பரிபாலித்து, வேள்விகளை இயற்று; எல்லாம்வல்ல இறைவன் திருமாலின் உள்ளம் களிப்படையுமாறு நடந்துகொள்'' என்று சொன்னார்.

பிரம்ம தேவர் இவ்வாறு சொன்னதும், சுவாயம்புவ மனு அவரிடம், ''தேவரே! உமது விருப்பப்படி நான் சந்தான விருத்தி செய்கிறேன். உலகத்தைப் பரிபாலிக்கிறேன். நானும் பிரஜைகளும் வாழ்வதற்கு ஏற்ற இடம் ஒன்று வேண்டும். சகல உயிர்களுக்கும் ஆதாரமாய் இருக்கக் கூடிய பூமி, இப்போது பிரளய வெள்ளத்தில் மூழ்கிக் கிடக்கிறது. அதை மேலே கொணரத் தாங்கள் முயல வேண்டும்; அதனால் நாங்கள் வசிக்க ஏற்ற இடம் கிடைத்துவிடும்'' என்று சொன்னார்.

சுவாயம்புவ மனு இவ்வாறு வேண்டிக்கொண்டதும், பிரம்மதேவர் நெடுநேரம் இதுபற்றிச் சிந்தித்தார். 'பூமியை எவ்வாறு மேலே கொணர்வது?' என்று பலவாறு யோசித்துப் பார்த்தார்.

இப்படிப் பிரம்ம தேவர் சிந்தித்துக்கொண்டிருக்கும் போது, அவருடைய மூக்குத் துவாரத்தினின்று, கட்டை விரல் அளவுள்ள சிறு பன்றிக்குட்டி ஒன்று திடீரென்று வெளிவந்தது.

வெளி வந்த அந்தச் சிறு பன்றி, பிரம்ம தேவன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே, வளர்ந்து பெரிதாகி, ஒரு யானைபோல் ஆயிற்று. உடனே அது ஆகாயத்துக்குக் கிளம்பியதைப் பார்த்து, பிரம்ம தேவர் ஆச்சரியத்தில் மூழ்கினார்.

மரீசி முதலிய முனிவர்களும், சனகாதிகளும், சுவாயம்புவ மனுவும், இந்தப் பன்றியின் தோற்றத்தைக் கண்டு பலவாறு சிந்தித்தார்கள்.

"கட்டைவிரல் அளவில் தோன்றிய இந்தப் பன்றிக் குட்டி கண நேரத்தில் பெரிதாய் வளர்ந்துவிட்டதே. இது என்ன ஆச்சரியம்! எனது மதியை மயக்கச் செய்யும் பொருட்டுத்தான், பரமாத்மா இப்படிப் பன்றி வடிவில் வந்திருக்கிறாரோ?" என்று மனு முதலிய தம் மைந்தர்களுடன் சேர்ந்து பிரம்மதேவர் பலவாறு சிந்தித்தார்.

இப்படி அவர்கள் சிந்தித்துக்கொண் டிருக்கும் போது, பன்றி வடிவத்தில் வந்திருந்த பரமாத்மா, தனது வடிவத்தை மலைபோல் பெரிதாக்கிக்கொண்டு கர்ச்சித்தார். அவர் செய்த கர்ச்சனை திக்கெலாம் எதிரொலிப்பதைக் கேட்டுப் பிரம்ம தேவர் முதலியோர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார்கள். மறைகளை ஓதி வராக மூர்த்தியைத் துதித்தார்கள்.

மரீசி முதலிய முனிவர்கள் தோத்திரம் செய்து துதிப்பதை அறிந்த பகவான் மீண்டும் கர்ச்சித்தார். வராகம்போல் அவதாரம் எடுத்து வந்திருக்கும் பரமாத்மா ஜலத்தினுள் கிடக்கும் பூமியை வெளியே கொணரும் பொருட்டு, பிரளய ஜலத்தில் புகுந்தார். பூமி சென்ற வழியை மோப்பத்தினால் தெரிந்துகொண்டு, அந்த வழியாகத் தாமும் சென்றார். தமது குளம்புகளால் ஜலத்தைக் கிழித்துக்கொண்டு, வராக மூர்த்தி பாதாள உலகம் போனார்.

அங்கு பூமியைக் கண்டு அதைத் தம் கோரைப் பற்களால் பெயர்த்து எடுத்துப் பகவான் தூக்கிக்கொண்டார்.

இது சமயம் இரண்யாக்கன் என்னும் அரக்கன் கோபம்கொண்டு, கதாயுதத்தை எடுத்துக்கொண்டு



வராகாவதாரம்

வந்து வராக மூர்த்தியை எதிர்த்தான். பூமியைத் தூக்க வொட்டாது தடுத்தான்.

இதை அறிந்த வராக மூர்த்தி, யானையைச் சிங்கம் அடித்துக் கொல்வதுபோல, இரண்யாக்கன் என்னும் அந்த அரக்கனை எளிதில் அடித்துக் கொன்றார்.

அரக்கனை அடித்துக் கொன்ற காரணத்தால், ரத்தம் தோய்ந்த முகத்துடன், பூமியைத் தம் கோரைப் பற்களால் தாங்கிக்கொண்டு, வராக மூர்த்தி வெளிப்பட்டார்.

இதைப் பார்த்ததும், பிரம்ம தேவர் முதலானோர் வேத வாக்கியங்களால், வராக மூர்த்தியைத் துதித்தார்கள்.

"நீர் பிறரால் வெல்ல முடியாதவர்; வேள்வி ரூபமாக விளங்குபவர்.

"வராக அவதாரம் எடுத்து, பூமியை நீர் பாதாளத்திலிருந்து வெளிக் கொணர்ந்தீர்.

"அதற்காக உம்மை நாங்கள் வணங்குகிறோம்.

"கெட்ட நடத்தைகளில் விருப்பமுள்ளவர்களால், உமது சொரூபத்தைக் காண முடியாது.

"உமது மகிமை அளவிடற்பாலது" என்று சொல்லித் துதித்தார்கள்.

பூமியைத் தூக்கிவந்த பகவான், நீரின்மீது வைத்து அதை நிலை நிற்கும்படி செய்தார்.

இந்தக் காரியத்தைச் செய்துவிட்டு, வராக மூர்த்தி, அந்த இடத்திலேயே மறைந்து அருளினார்.

## கசியபரும் திதியும்

**வ**ராக அவதாரத்தின் கதையை மைத்ரேயர் சுருக்கமாகச் சொல்லி முடித்ததும், விதுரர் அவரிடம், "முனிவர் பிரானே! வராக அவதாரம் எடுத்தபோது, பகவான்,

இரண்யாக்கன் என்னும் அரக்கனைக் கொன்றதாகச் சொன்னீர்களே? அவன் யார்? பகவான் எதற்காக இரண்யாக்கனைக் கொன்றார்? இதுபற்றி விரிவாகத் தாங்கள் எனக்குக் கூற வேண்டும். கேட்கக் கேட்கப் பகவானுடைய கதை தெவிட்டாமல் சுவைக்கிறது" என்று சொன்னார்.

அதற்கு மைத்ரேயர், "விதுரனே! நீ கேட்ட கேள்வி நல்ல கேள்வி; வராகவாதாரக் கதையைக் கேட்டால் மரண பயம் நீங்கும். இந்தக் கதையைக் கேட்டதனால் முன்பு துருவன் நற்கதி அடைந்திருக்கிறான். ஆகவே அந்தக் கதையை உனக்கு நான் கூறுகிறேன் கேள்:

பிரம்ம தேவரின் புதல்வர் மரீசி முனிவருககுக் கசியபர் என்று ஒரு புதல்வர் இருந்தார்.

அந்தக் கசியபருக்கு தட்சப் பிரஜாபதி என்பவர் தம் புதல்வியர் பதின்மூவரைத் திருமணம் செய்து கொடுத்து இருந்தார்.

கசியபரின் பதின்மூன்று மனைவியரில் திதி என்பவள் ஒருத்தி. இவள் ஒரு நாள் மாலை மன்மத பாணத்துக்கு இரையாகி, கசியபரை அணுகினள்

அப்போது கசியபர் அழலை ஓம்பி, சந்தியா வந்தனம் செய்துகொண் டிருந்தார். மகனைப் பெற வேண்டும் என்ற விருப்பம் மேலிட்டு, அவர் அருகே திதி சென்றாள். அவள் கசியபரிடம் "கற்றறிந்தவரே! வாழை மரத்தை யானை பிடிப்பதைப்போல, உம் பொருட்டாக மன்மதன் என்னைப் பீடிக்கிறான். என் சக்களத்திகள் பிள்ளைகளைப் பெற்று மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். நானோ பிள்ளை யின்றி அவர்களைப் பார்த்து ஏங்குகிறேன். கணவனை அடைந்து, அவரை யொத்த புதல்வனை, ஒருத்தி பெறுவாளாயின், அதுவே அந்தப் பெண்ணுக்குப் பெருமையைத் தரும், புகழையும் தரும். ஆகவே, நீர்

எனக்குப் புத்திர பாக்கியத்தைக் கொடுக்க வேண்டும். அதையே நான் உம்மிடம் வேண்டுகிறேன்'' என்று சொன்னாள்.

மன்மதனால் பீடிக்கப்பட்டு, பரிதபித்துப் புலம்பும் தன் மனைவியைப் பார்த்து, கசியப முனிவர் அவளுக்கு ஆறுதல் சொன்னார்: ''பயந்தவளே! உனது விருப்பத்தை நான் பூர்த்தி செய்து வைக்கிறேன். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் ஆடவன் பெண் மூலமாகத்தான் அடைகிறான். ஆகவே, பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றாமல் இருப்பது எந்த ஆடவனுக்கும் சாத்தியம் அன்று. மற்ற ஆசிரமங்களை அனுசரிப்போரையும் ஆதரித்துக் காப்பாற்றி, தன்னை இல்லறத்தான் காப்பாற்றிக்கொள்கிறான்.* அதனால் கப்பல் மூலம் கடலைக் கடப்பதைப் போல, துக்க சாகரம் என்பதை அவன் கடந்துவிடுகிறான். பெண்ணை உடலின் செம்பாதி என்று வேதங்கள் முழங்குகின்றன; நன்மை என்றும் தீமை என்றும் கர்ம பந்தத்தால் ஏற்படும் சகல பாரத்தையும் பெண்பாலிடம் ஒப்படைத்துவிட்டு, ஆடவன் கவலையற்றுத் திரிகிறான்; கோட்டைக்குள் இருக்கும் அரசன் பகைவர்களை எளிதில் வெற்றிகொள்வது போல், இல்லறம் என்னும் கோட்டைக்குள் இருந்து கொண்டு, இல்லறத்தான் புலன்களை எளிதில் கட்டுப்படுத்தி வெற்றி பெறுகிறான்; மற்ற ஆசிரம வாசிகளுக்கு இந்த வாய்ப்பு இல்லை. இத்தகைய சிறப்புகளைப் பெற்றுள்ள பெண்ணுக்கு ஆடவன் செய்கிற சிறு உதவி, பதில் உதவி யாகாது. ஆகவே, வந்து விருப்பத்தை நான் நிறைவேற்றுகிறேன்; சிறிது நேரம்

---

* இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை என்று கூறுகிறது குறள்

பொறுத்து இரு; தக்க காலம் வரட்டும்'' என்று சொன்னார்.

தக்க காலம் வரும்வரை திதியால் பொறுத்திருக்க முடியவில்லை. நாணத்தைத் துறந்து, விலைமகள்போல, அவள் நடந்துகொள்ளத் தலைப்பட்டாள்; தன் கணவன் கசியபரின் ஆடையை ஆவலோடு பற்றிக்கொண்டு அவள் இழுத்தாள்.

தகாத நேரத்தில் தன்னைத் தம் மனைவி கட்டாயப் படுத்துவதை அறிந்து, கபசிய முனிவர் அவள் விருப் பத்துக்கு இணங்கினார். இறைவனை வணங்கிவிட்டு, தன் மனைவி, திதியுடன் அவர் இரகசியத்தில் சேர்ந்தார்.

பிறகு வெளிப்போந்து, நீராடிவிட்டு, கசியப முனிவர், பரமாத்மாவைத் தியானித்தார்.

திதியோ, தகாத நேரத்தில், தன் கணவனை அணுகி, வலுக் கட்டாயத்தின் பேரில், தான் காரியம் சாதித்துக் கொண்டதை நினைந்து வெட்கிப் போனாள். ஆகவே, தலைகுனிந்தவாறு சென்று, அவர் எதிரே நின்றாள். ''நாதா! இப்பொழுது எனக்கு ஏற்பட்டு இருக்கும் கருப்பம் கலையாது இருக்க, ருத்திரன் அருள்பாலிக் கட்டும். வேடுவர்களும் இரக்கம் காட்டக்கூடிய பெண் பாலான என்னிடம் ருத்திரன் இரங்க மாட்டாரா என்ன? கருணாமூர்த்தியான அவரை நான் வணங்குகிறேன்'' என்று சொன்னாள்.

தான் தரித்திருக்கும் கருப்பம் சிதைந்து போகாமல் இருக்க வேண்டும் என்ற விருப்பத்துடன், பயந்து நடுங் கிக்கொண்டு, தன்பால் வந்திருக்கும் தன் மனைவி திதியைக் கசியப முனிவர் பார்த்தார். பிறகு சந்தியில் செய்ய வேண்டிய நியமங்களை எல்லாம் செய்து முடித்துக் கொண்டு, அவளுக்குப் பதில் சொல்லத் தொடங்கினார்:

''பக்தி நெறி இல்லாத பெண்ணே! உனது மனம்

அசுத்தமாய் இருந்ததாலும், தகாத நேரத்தில் விரும்பி, தேவர்களின் சினத்துக்கு நீ உட்பட்டதாலும், எனது கட்டளையை நீ மீறியதாலும், உனக்கு இரண்டு கெட்ட பிள்ளைகள் பிறப்பார்கள். மூவுலகில் வாழ்வோர் அனைவரும் அவர்களால் அவதிப்படுவார்கள். மாதர்களை அவர்கள் அவமதிப்பார்கள். பெரியோர்களுக்குக் கோபம் உண்டாகும்படி நடந்துகொள்வார்கள். இதற்காக, பகவான் உலகில் அவதாரம் செய்து உன் மைந்தர்கள் இருவரையும் கொல்வார்'' என்று சொன்னார்.

இதைச் செவிமடுத்த திதி, ''அந்தண சீலரே! பகவானின் திருக்கரத்தால் என் புதல்வர்கள் மடிவார்களாயின், அது எனக்குச் சம்மதம்; பிராம்மண சாபத்துக்கு அவர்கள் ஆளாகாது இருந்தால், அதுவே போதுமானது'' என்று சொன்னாள்.

அதற்குக் கசியபர், ''பெண்ணே! செய்த தவறை நினைந்து நீ பச்சாதாபப்படுகிறாய்; நல்லது கெட்டதை விசாரித்து அறியும் நியாய புத்தி உனக்கு இப்பொழுது ஏற்பட்டு இருக்கிறது; திருமாலையும் சிவபெருமானையும் மதிக்கத் தொடங்கி இருக்கிறாய்; என்பாலும் பிரியத்தோடு இருக்கிறாய். ஆகையால், உன் புதல்வன் இரண்ய கசிபு என்பவனுக்கு, பிறக்கும் புதல்வர்கள் நால்வரில் மூத்தவன் ஒரு பரம பாகவதனாய் விளங்குவான்; திருமாலை எப்பொழுதும் தம் இதயத்திலே தரித்து இருப்பான்; சான்றோர்கள் அவனைப் போற்றிக் கொண்டாடுவார்கள். தேகம் முதலியவற்றின்மீது அவன் அபிமானம் கொள்ள மாட்டான்; பிறர் மகிழ்வதைக் கண்டு தானும் மகிழ்ச்சி அடைவான்; பிறர் துயருறுவதைக் கண்டு தானும் துயருற்று நலிவான். வெய்யலின் கொடுமையைச் சந்திரன் போக்குவதுபோல, உலகின் துயரத்தை எல்லாம் அவன் போக்குவான். திருமாலின் மங்கள

கரமான வடிவத்தை அகத்திலும் புறத்திலும் தரிசிக்கும் பெரும் பேறு அவனுக்குக் கிட்டும்" என்று சொன்னூர்.

தன் பேரன் ஒருவன் பரம பாகவதனுக விளங்கு வான் என்பது தெரியவந்து, திதி பெரிதும் மகிழ்ச்சி அடைந்தாள். திருமாலின் திருக்கரங்களால் தன் புதல் வர்கள் மடிவார்கள் என்பதை ஒரு பெருமையாகக் கருதினுள்.

## துவார பாலகர்களுக்கு நேர்ந்த சாபம்

மைத்ரேயர் மேலும் தொடர்ந்து சொன்னூர் :

"விதுரா! தன் கருப்பம் தேவர்களுக்குத் துயரம் விளைவிக்கும் என்பது தெரியவந்து, திதி, அதைத் தனது வயிற்றிலேயே நூறு ஆண்டுகள்வரை வைத்தி திருந்தாள். அந்தக் கருப்பத்தின் காந்தி அபிவிருத்தி அடைந்து வந்ததனுல், சூரியன் முதலிய ஒளிகள் ஒளிமங்கிப் போயின; உலக பாலகர்கள் பெருமையும் ஆற்றலும் குறைந்து போனூர்கள். எங்கும் இருள் பரவியதால், திக்குத் திசைகள் தெரியவில்லை.

ஆகவே, லோக பாலகர்கள், பிரம்ம தேவரிடம் சென்று முறையிட்டுக்கொண்டார்கள். "பிரபுவே! எங்கும் இருள் கவிந்து இருப்பது எங்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகிறது. எக் காரணத்தால் இப்படி இருள் பரவி இருக்கிறது என்பது உமக்குத் தெரியாமல் இருக்க முடியாது. உமது அறிவு காலத்தைக் கடந்து நிற்பது; அதனுல்தான் நாங்கள் உம்மைக் கேட்கிறேம். இரவு பகல் என்னும் வேறுபாடு இல்லாது போன காரணத் தால், தத்தம் கடமைகளைச் செய்ய முடியாது மக்கள் தவிக்கிறுர்கள். துயரால் நலிந்து வாடும் மக்களை அருள் சுரந்து காப்பாற்றுங்கள். திதியின் வயிற்றில் வளரும் கசியப முனிவரின் வீரியம், அபிவிருத்தி

அடைந்து எங்கும் இருளைப் பரவச் செய்கிறது'' என்று சொன்னார்கள்.

இப்படித் தேவர்கள் சொன்னதும், பிரம்ம தேவர் சிரித்துக்கொண்டே அவர்களுக்கு ஆறுதல் சொல்லி, மனத்தில் இருக்கும் பயத்தைப் போக்கினார் :

''தேவர்களே ! உங்களுக்கு முன்னர், என் மனத்திலிருந்து தோன்றிய என் புதல்வர்கள் சனகர் முதலியோர், பற்றற்றுத்தவர்களாய், வான வீதியில் சஞ்சரித்துக்கொண்டு இருந்தார்கள். அப்படி அவர்கள் சஞ்சரித்தபோது, அந்த முனிவர்கள் வைகுந்த லோகம் போனார்கள். அங்கே எவ்வளவோ அழகான, அருமையான, மரங்கள் இருந்தன; மலர்கள் இருந்தன; கனிகள் இருந்தன. சோலைகளும் தடாகங்களும், பறவைகளும் கண்களுக்கு விருந்தாய் இருந்தன.

இவற்றில் எல்லாம் தங்கள் கவனத்தைச் செலுத்தாமல் அந்த முனிவர்கள் பகவானைத் தரிசிக்கும் விருப்பம் மேலிட்டு, திருமகளுடன் அவர் வாசம் செய்யும் இடத்துக்குப் போனார்கள். அங்கு இருக்கும் ஆறு பிரகாரங்களை கடந்து, அந்த முனிவர்கள் ஏழாவது பிரகாரத்தை அடைந்தார்கள்.

அங்கே இரு துவார பாலகர்கள், வாயிலைக் காத்துக் கொண்டு நின்றார்கள்.

அவர்கள் இருவரும் ஒரே வயதுடையவர்கள்; இருவரும் கையில் கதை வைத்திருந்தார்கள்; தோள் வளையம், குண்டலம், கிரீடம் முதலியன அணிந்து, பார்க்க வெகு அழகாய் இருந்தார்கள்; அவர்களுக்கு நான்கு கரங்கள் இருந்தன ; மார்பில் வனமாலை அணிந்து இருந்தார்கள். கண்கள் சிவப்பாய் இருந்தன; முகத்தில் கடுமை இருந்தது.

இந்த இரு துவார பாலகர்களும் நிற்பதைப் பொருட்படுத்தாமலும், அவர்களின் அனுமதியை எதிர்பாராமலும் சனகாதி முனிவர்கள், வைகுந்தத்தில் நுழையப் போனார்கள்.

முனிவர்களின் இந்த நடத்தை துவார பாலகர்களுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, உள்ளே நுழையவொட்டாது, பிரம்பைக் கொண்டு, முனிவர்களைத் துவார பாலகர்கள் தடுத்தார்கள்.

பரமாத்மாவைப் பார்க்கவிடாது, பேத புத்தியோடு, துவார பாலகர்கள் தம்மைத் தடுப்பதைக் கண்டு, சனத்குமாரர்கள் முதலில் சிறிது கோபம் கொண்டனர்; அதனால் அவர்கள் கண்கள் இரண்டிலும் நீர் மல்கத் தொடங்கிற்று. ஆகவே, அவர்கள் அந்த இரு துவார பாலர்களையும் நோக்கி "வைகுந்தத்தில் இருக்கும் உங்களுக்கு இப்படி ஒரு விபரீத புத்தி இருக்கிறதே ஏன்? நெடுநாள் பகவானை வந்தித்து, வைகுந்தம் வந்துள்ள உங்களுக்கு வேற்றுமை புத்தி இருப்பது கூடாது. அவநம்பிக்கைக்கோ, சந்தேகத்துக்கோ வைகுந்தத்தில் இடம் இல்லை. இருந்தும் வேற்றுமை புத்தியோடு நீங்கள் தடுத்ததால், காமம், குரோதம், லோபம் முதலிய குணங்கள் இருக்கும் இடத்துக்கு நீங்கள் போய்ச் சேர்வீர்களாக!" என்று சபித்தார்கள்.

முனிவர்களின் சாபம் பொல்லாதது என்பதை அறிந்த அந்தத் துவார பாலகர்கள் இருவரும் பயந்து போனார்கள். ஆகவே, முனிவர்களின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, "பெரியீர்! நாங்கள் செய்த தவறுக்குத் தக்கபடி தாங்கள் எங்களைத் தண்டித்துவிட்டீர்கள். அதற்காக நாங்கள் வருந்தவில்லை. ஆயினும், ஒரு விஷயத்தில் மட்டும் தாங்கள் எங்கள்பால் அருள் பாலிக்க வேண்டும். தங்கள் சாபத்தின் பயனாய்

நாங்கள் கீழ் உலகம் சென்ற பிறகு, இறைவனைப்பற்றிய மதிமயக்கம் எங்களுக்கு ஏற்படாது இருக்க வேண்டும். இதுவே நாங்கள் தங்களிடம் வேண்டுவது" எனது சொன்னார்கள்.

துவார பாலகர்கள் இப்படி முனிவர்களிடம் வேண்டிக்கொண்டு நின்றபோது, பரமாத்மாவான திருமால், இலக்குமி தேவியையும் அழைத்துக்கொண்டு அங்கு எழுந்தருளினார்.

அவரைப் பார்த்ததும், முனிவர்கள் பரவசமடைந்து, தலைமீது கைகூப்பி, பரமாத்மாவை வணங்கினார்கள் துதித்தார்கள்.

"தங்கள் பெருமைகளை எங்கள் தந்தை பிரம்ம தேவர் கூறக் கேட்டு, தங்களை எங்கள் இதயத்தில் இருத்தி, இதுவரை நாங்கள் தியானித்து வந்தோம். இப்போது தங்களை நேரில் தரிசிக்கும் பெரும் பேறு பெற்றோம். இழிந்த பிறவி எடுக்க நேரினும், மாசுமறுவற்ற உமது புகழை எப்பொழுதும் கேட்கும் பேறும், உம்மைப் பற்றிச் சாதா நெஞ்சில் நினைக்கும் பேறும் எங்களுக்குக் கிட்டினால் போதும். தீய நினைப்புகளுள்ள தீயவர்களால் காண முடியாத உம்மை, நேரில் தரிசிக்கும் பெரும் பேறு பெற்றோம் நாங்கள். குதர்க்க புத்தியுள்ளவர்களால் அறிய முடியாத உம்மை நாங்கள் வணங்குகிறோம்" என்று சொல்லித் துதித்தார்கள்.

## திதியின் கருப்பம்

பக்தி யோகத்தில் ஈடுபட்டு, தம்மைப் பலவாறு பாராட்டிப் பேசும் முனிவர்களின் துதியைக் கேட்டு, வைகுந்தநாதன் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். அவர்களைப் பாராட்டி, அடியில் வருமாறு அவர் பதில் சொன்னார் :

''முனிவர்களே! ஜயன், விஜயன் என்னும் எனது வாயில் காப்போர் இருவரும், என் பக்தர்களாகிய உங்களை அவமதித்து, அபசாரம் செய்துவிட்டார்கள். உங்களுக்கு அவர்கள் செய்த அவமதிப்பை, எனக்குச் செய்த அவமதிப்பாகவே நான் கருதுகிறேன். அதன் பொருட்டு, இவர்களுக்கு நீங்கள் விதித்துள்ள தண்டனையை நான் அங்கீகரிக்கிறேன். வேலைக்காரர்கள் குற்றம் செய்வார்களாயின், அந்தக் குற்றத்தை எஜமான் மீது சாட்டி, உலகத்தார் எஜமானைத் தூற்றுவார்கள். 'இன்னருடைய வேலைக்காரன், எஜமானின் ஏவுதலால் இப்படி இப்படிக் குற்றம் புரிகிருன்!' என்று எஜமானைப் பழிப்பார்கள்; தோல்மீது பரவி, உடலின் அழகை வெண்குஷ்டம் கெடுத்துவிடுவதுபோல, வேலைக்காரன் நடத்தை, எஜமானுக்கு அவகீர்த்தியை உண்டாக்குகிறது. பக்தவத்சலனை என் உள்ளக்கிடையை அறியாது, என் வேலைக்காரர் இருவரும், உங்களை அவமதித்துவிட்டார்கள். அதன் பலனை அனுபவித்துவிட்டு, இருவரும் என்பால் விரைவில் திரும்பட்டும். இதுவே இவர்களுக்கு நான் செய்யும் சலுகை'' என்று கூறினுர்.

வேதத்துக்கு ஒப்பான இந்த இனிய பதிலை, பகவான் கூறக் கேட்டு, முனிவர்கள் வருத்தம் அடைந்தார்கள். "கோபம் என்னும் பாம்பால் கடியுண்டு, துவார பாலகர்களைச் சபித்து, செய்யத் தகாத காரியத்தை நாம் செய்துவிட்டோமே ; என்னே மதியீனம்!'' என்று தங்களைத் தாமே கடிந்துகொண்டார்கள்.

கலக்கமடைந்து இருந்ததன் காரணமாக, பகவான் கூறின பதிலின் பொருளை முனிவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. ''பகவான் இவ்வளவு இனிமையாகப் பதில் சொல்லுவதன் கருத்து யாது? பகவான்

நம்மைக் கொண்டாடுகிருரா? அல்லது நிந்திக்கிருரா? நாம் சபித்ததை உண்மையில் ஆதரிக்கிருரா? அல்லது புறக்கணிக்கிருரா? ஒன்றும் புரியவில்லையே!'' என்று திகைத்தார்கள்.

ஆயினும், பரந்தாமனைப் பார்க்கும் பேறு பெற்ற தால் புளகாங்கிதம் அடைந்த அவர்கள், சிரம்மீது கை குவித்து வணங்கிக்கொண்டே, ''பகவானே! உமது உளக் கருத்தை எங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. நீர்தான் இந்தப் பிரபஞ்சம் அனைத்துக்கும் பிரபு. உமது திருவுளப்படி நடக்க நாங்கள் சித்தமாய் இருக்கிறோம். இந்தத் துவாரபாலகர்கள் இருவரையும் தாங்கள் தண்டித் தாலும் சரி, அல்லது மன்னித்தாலும் சரி, அதை நாங்கள் அங்கீகரிக்கக் கடமைப்பட்டுள்ளோம். குற்றம் புரியாத இவர்களை நாங்கள் அறியாது சபித்துவிட்டோம். அந் தக் குற்றத்துக்கு ஏற்ற தண்டனையைத் தாங்கள் எங்களுக்கு விதிக்க வேண்டும்'' என்று வேண்டிஞர்கள்.

முனிவர்கள் இவ்வாறு வேண்டியதும், பகவான் அவர்களைப் பார்த்து, ''அந்தணர்களே! ஜயன், விஜயன் என்னும் இந்த இரு துவார பாலகர்களும், பூமியில் அசுரர் களாய்ப் பிறப்பார்கள். சதா என்மீது கோபமுள்ளவர் களாய் என்னை நினைந்துகொண் டிருப்பார்கள்; அந்த யோகத்தின் பயனாய், விரைவில் என்னை அடைவார்கள். ஆகையால், அவர்களுக்கு நீங்கள் கொடுத்த சாபம், நான் கொடுத்த சாபமே யாகும்'' என்று பதில் சொன்னார்.

பகவான் சொன்ன இந்தப் பதிலைக் கேட்டு, முனிவர் கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். சுயம் பிரகாசமான பகவா னையும் வைகுந்த லோகத்தையும் கண்குளிரக் கண்டு ஆனந்தம் கொண்டார்கள். வலம் வந்து, பகவானை வணங்கிஞர்கள். அவனுடைய பெருமைகளை எல்லாம்

வியந்து பேசிக்கொண்டே, பகவானிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினார்கள்.

முனிவர்கள் போன பின்பு, பகவான் துவார பாலகர் இருவரையும் பார்த்து, "பயப்படாமல் நீங்கள் இங்கிருந்து போய்விடுங்கள்; எல்லாம் நன்மையாக முடியும். அந் தணர்கள் இட்ட சாபத்தை என்னுல் அகற்ற முடியு மாயினும், அவ்வாறு செய்ய, நான் விரும்பவில்லை. அவர் கள் உங்களுக்கு இட்ட சாபத்தை நான் அங்கீகரிக் கிறேன். என்மீது நீங்கள் கோபம் கொள்வதன் காரண மாக, சதா என்னைப்பற்றிய நினைப்பு உங்களுக்கு உண் டாகும். அதன் பயனாய், நீங்கள் விரைவில் என்னை அடையலாம்" என்று கூறினுர்.

இவ்வாறு கூறிவிட்டு, பகவான் தமது வாசஸ்தலத் துக்குத் திரும்பினுர்.

அந்தத் தேவர்கள் இருவரும் ஒளி குன்றி, கர்வம் ஒடுங்கிப் பூமிக்கு இறங்கினுர்கள்.

அவர்கள் இருவரும்தான், இப்பொழுது கசியபரின் மனைவி திதியின் கருப்பத்தில் வாசம் செய்கிறுர்கள் என்று சொல்லி முடித்தார் பிரம்ம தேவர்.

இதைக் கேட்டதும் பயம் நீங்கி, தேவர்கள் சொர்க் கம் போய்ச் சேர்ந்தார்கள்.

## இரண்யாக்கன் வதம்

**மை**த்ரேய முனிவர் மேலும் தொடர்ந்து சொன்ன தாவது :

தகாத நேரத்தில் கருத்தரித்த திதி நூறு ஆண்டு கள் நிரம்பின பின்பு, ஒரு நாள், இரண்டு ஆண் குழந்தை களைப் பெற்றுள்.

அவளுக்கு இந்த இரு குழந்தைகளும் பிறந்த சமயம், பயங்கரமான அபசகுனங்கள் பல தோன்றின. பூமியிலும்

சொர்க்கத்திலும், இரண்டுக்கும் நடுவே இருக்கும் இடை வெளியிலும், பல தீய சகுனங்கள் ஏற்பட்டன. பூமி நடுங்கிற்று; எரி கொள்ளிகளும் இடிகளும் விழுந்தன. புயல் வீசி, பெரிய பெரிய மரங்களை எல்லாம் வேரோடு பிடுங்கிற்று. மின்னல்களின் பிரகாசத்தால், சூரியன் ஒளி மங்கிப் போயிற்று; அலைகள் உயரத்தில் கிளம்பின; கிணறு, குளம் முதலியன கலங்கின. நரிகளும் கோட்டான்களும் கூக்குரலிட்டுக் கத்தின. நாய்கள் பல வகையாகக் குரைக்கத் தொடங்கின. கழுதைகள் ஓலமிட்டுக் கத்துவதைக் கேட்டுப் பயந்து போய், பறவைகள் கூடுகளிலிருந்து கீழே விழுந்தன.

இத்தகைய அபசகுனங்களைக் கண்டு, உலகத்தில் பிரளயம் சமீபித்துவிட்டது என்று, மற்ற மக்கள் பயந்தார்கள். பிரம்ம தேவரின் புதல்வர்கள் சனகர் முதலியோர் மட்டும் பயப்படவில்லை.

இந்த நிலையில், திதி பெற்ற பிள்ளைகள் இருவரும், தங்கள் ஆற்றலையும் பலத்தையும் வெளிப்படுத்திக் கொண்டு, கருங் கல்லைப்போல் உறுதியாக வளர்ந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த தங்கக் கிரீடங்கள், ஆகாயம்வரை அளாவின. பூமி அதிர அடி எடுத்து வைத்து, அவர்கள் நடந்தார்கள்.

முதலில் பிறந்த பிள்ளைக்கு இரண்யாக்கன் என்றும், இரண்டாவது பிறந்த பிள்ளைக்கு இரண்யகசிபு என்றும், கசியப முனிவர் பெயர் வைத்தார்.

இரண்ய கசிபு என்பவன் தனது புயவலிமையால், மூன்று உலகங்களையும் தன் வசப்படுத்திக்கொண்டான். பிரம்மாவிடம் தான் பெற்ற வரத்தினால் மரண பயமின்றி, உலகில் அவன் சஞ்சரித்தான். இரண்ய கசிபு புயவலி மிக்க தன் தமையனைப் பெரிதும் நேசித்தான்.

போர் செய்வதில் விருப்பமுற்று, கதாயுதத்தைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, இரண்யாக்கன் சொர்க்கத்துக்குச் சென்றான். அவன் காலில் அணிந்திருந்த தங்கமயமான தண்டைகள் அவன் நடக்கும்போது, கலீர் கலீர் என ஒலித்தன; வைஜயந்தி மாலையை அணிந்து கொண்டு, அவன் அழகுடன் விளங்கினான்.

இரண்யாக்கனைக் கண்டதும், தேவர்கள் கருடனைக் கண்ட பாம்புபோல், பயந்து நடுங்கி, மறைந்துகொண்டார்கள்; இந்திரனும் மறைந்துகொண்டான்.

இதைக் கண்ட இரண்யாக்கன் வெற்றி முழக்கம் செய்துவிட்டு, திரும்பினான். பிறகு, சமுத்திரத்தில் இறங்கி, அதைக் கலக்கத் தொடங்கினான்.

ஜலம் வாழ் ஜந்துக்கள் எல்லாம் இரண்யாக்கனைக் கண்டதும் கதி கலங்கிப் போயின; அவற்றை அவன் ஒன்றும் செய்யாமல் இருந்தும், பீதியுற்று, அவை அங்கும் இங்கும் சிதறியோடின.

இரண்யாக்கனோ தனது கதாயுதத்தால் சமுத்திரத்தின் தண்ணீரை அடித்து அடித்துக் குறும்புத்தனம் செய்துகொண்டே, பல ஆண்டுகள் சமுத்திரத்தில் சஞ்சரித்தான். பிறகு, வருண பகவான் வாழும் பட்டணத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

பாதாள லோகத்தில் இருக்கும் வருண பகவானைச் சந்தித்து, குறும்புத்தனமாக நகைத்துக்கொண்டே அவரை வணங்கினான். பிறகு அவரிடம், "மேன்மை பெற்ற அரசே! நீர் உலக பாலர்களுக்கு அதிபதி; புகழுள்ளவர்; அகந்தையும் ஆணவமும் கொண்ட தீயவர்களை அடக்கிக் கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றவர்; முன்பு தைத்தியர்களையும் தானவர்களையும் வெற்றிகொண்ட உம்முடன் நான் போர் செய்ய விரும்புகிறேன்" என்று கிண்டலும் குறும்புத்தனமும் தொனிக்கச் சொன்னான்.

இப்படி இரண்யாக்கன் குறும்பாகச் சொன்னதைக் கேட்டு, தனக்கு வந்த கோபத்தை வருண பகவான் அடக்கிக்கொண்டார். பிறகு அவனைப் பார்த்து, "அசுர சிரேஷ்டனே! போர் செய்வதில் இப்பொழுது எனக்கு ஆர்வம் இல்லை. பகவான் ஒருவரைத்தவிர்த்து, உன்னோடு வேறு யாராலும் போர் செய்ய முடியாது. நல்லோரைக் காக்கவும், தீயோரை அழிக்கவும், பகவான் பல அவதாரம் எடுக்கிறார். அவருடன் நீ போர் செய்தால், உனது கர்வம் ஒடுங்கிப் போய், பூமியில் நீ கிடப்பாய்" என்று பதில் சொன்னார்.

இவ்வாறு வருண பகவான் பதில் சொன்னதும், தன்னோடு போர் செய்ய ஒருவர் இருக்கிறார் என்பது தெரிய வந்து, இரண்யாக்கன் ஆனந்தம் கொண்டான். பகவான் எங்கு இருக்கிறார் என்பதை நாரத முனிவர் மூலம் கேட்டுத் தெரிந்துகொண்டு, பாதாள லோகம் போனான்.

அங்கே பகவான் வராக உருவத்தில் தமது கோரப் பற்களினால் பூமியைத் தூக்கிக்கொண்டு நின்றார். இரண்யாக்கனைப் பார்த்ததும், தமது பார்வை மூலம், அவனுடைய பிரபாவத்தை எல்லாம் பகவான் கிரகித்துக் கொண்டார்.

இரண்யாக்கனோ, வராக உருவில் இருக்கும் பகவானைப் பார்த்து, "காடுகளில் திரிகின்ற விலங்கு ஒன்று இங்கு வந்திருக்கிறதே!" என்று கேலி செய்தான். அவன் வராக மூர்த்தியை நோக்கி, "அறிவில்லாத மூடா! பூமியை விட்டுவிட்டு இங்கே வா. பாதாளத்தில் வாழ்பவர்களுக்காகப் பிரம்ம தேவன் படைத்த பூமி இது. அதனால்தான் பூமி பாதாள லோகத்துக்கு வந்திருக்கிறது. ஆகையால் பூமியைத் தூக்கிச் செல்ல முய

லாதே ! மீறி முயன்ருல் உன்னை நான் விட மாட்டேன்'' என்று மிரட்டினுன்.

இரண்யாக்கனின் இந்தக் கொடும் சொற்கள் ஈட்டி போலக் குத்தின; ஆயினும் தமது கோரைப் பற்கள்மீது இருக்கும் பூமாதேவி பயப்படுவதைக் கண்டு இரண்யாக் கனின் ஏச்சுக்களைப் பொருட்படுத்தாமல், நீரைப் பிளந்து கொண்டு, வெளியே புறப்பட்டார் வராக மூர்த்தி.

இரண்யாக்கனும் சும்மா இருக்க வில்லை. யானையை மகர மீன் துரத்துவதுபோல, பகவானைத் துரத்திக் கொண்டு, அவருக்குப் பின்னே சென்ருன். சிங்கப் பற்களுள்ள தனது வாயைத் திறந்து பயங்கரமாகக் கூவினுன். ''வெட்கமில்லாதவர்கள் எந்தக் காரியத்தை யும் துணிந்து செய்வார்கள். நல்லது என்றும் கெட் டது என்றும் அவர்கள் பார்ப்பது இல்லை'' என்று குத்த லாகச் சொன்னுன்.

பகவானே நீரைவிட்டு வெளிப் போந்து, தகுந்த ஒரு இடத்தில் பூமா தேவியை வைத்து, அதை நிலைப்புள்ள தாகச் செய்தார்.

தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்; பிரம்ம தேவன் அவரைத் துதி செய்து போற்றினுன்.

. இரண்யாக்கன் என்னும் அசுரனே, அவரை விடாது பின்தொடர்ந்து வந்தான்.

இதைக் கவனித்த பகவான் அவனைப் பார்த்துக் கோபச் சிரிப்புச் சிரித்தார். பிறகு அவனிடம், ''அட அசுரா ! நாங்கள் விலங்குகள் என்பது உண்மையே. உன்னைப் போன்ற நாய்களைத் தேடும் பொருட்டுத்தான் நாங்கள் விலங்கு வேடம் எடுத்தோம். சாவின் பிடிப்பில் சிக்கிக்கொண்டுள்ள நீ வீணே தற்புகழ்ச்சி செய்து கொள்கிருய். இதை வீரர்கள் மெச்ச மாட்டார்கள். உன்

னுடன் போர் செய்ய நாங்கள் தயாராய் இருக்கிறோம் வந்து பொருதிப் பார்" என்று பரிகாசம் செய்தார்.

பகவான் தன்னை இவ்வாறு பரிகசிப்பதைச் செவி மடுத்த இரண்யாக்கன், பாம்புபோல் அளவற்ற சீற்றம் கொண்டான். அவனுடைய ஐம்பொறிகளும் கலங்கின; கோப மிகுதியால் பெருமூச்சுவிட்டுக்கொண்டே, பக வானை அணுகி, தமது கதையால் அவரை ஓங்கி அடித் தான்.

அந்த அடி தம்மீது விழாதபடி, பகவான் தமது மார்பை ஒடுக்கிக்கொண்டார்.

இதைக் கவனித்த இரண்யாக்கன் கோபமுற்று, பகவான் அருகே ஓடினான்.

அப்போது பகவான், தமது கதையால், இரண்யாக் கனை அடித்தார்.

கதைப் போரில் வல்லவனான இரண்யாக்கன், அந்த அடி, தன்மீது படாதபடி, தனது கதைகொண்டு தடுத்து விட்டான்.

பூமியின் பொருட்டு இருவரும் முயற்சியுடன் போர் செய்தார்கள்; இருவர் உடல்களிலிருந்தும் இரத்தம் பெருகியோடத் தலைப்பட்டது.

இருவருக்கும் இடையில் நடக்கும் போரைக் காணும் பொருட்டு,பிரம்ம தேவர் அனேக மகரிஷிகளுடன் அங்கே வந்தார்.

வராக மூர்த்தியான பகவான் இரண்யாக்கனை ஒரு நொடியில் வதம் செய்து இருப்பார். போரைச் சிறிது நீடித்தால், ஒருக்கால் அவன் மனம் திருந்தினாலும் திருந் தக் கூடும் என்று நினைத்து, இரண்யாக்கனுடன் அவர் நீடித்துப் போர் செய்தார்.

பகவானின் உளக்கருத்தைப் பிரம்மதேவர் தெரிந்து கொண்டார். ஆகவே, அவர் பகவானிடம், "தேவதேவே!

அடைக்கலம் என்று உமது திருவடிகளை வணங்கும் அந்தணர், பசுக்கள், தேவர்கள் ஆகிய அனைவரையும் இந்த அரக்கன் துன்புறுத்தியவன்; பிறருக்குத் தீங்கு செய்வதையே விரதமாகக் கொண்டவன். என்னிடமிருந்து பெற்ற வரத்தால் செருக்குற்றுத் திரிபவன். தன்னுடன் போர் செய்யத் தகுந்த வீரன் ஒருவனைத் தேடிக்கொண்டு உலக முழுதும் சஞ்சரிப்பவன்; இத்தகைய கொடியவனோடு, தாங்கள் விளையாடுவது உசிதமல்ல. சந்தியா காலம் நெருங்குகிறது. அப்போது அசுரர்களுக்குப் பலம் அதிகரிக்குமாதலால், அதற்கு முன்பே இவனை வதம் செய்துவிடுங்கள். சுப முகூர்த்தமான இந்த நேரத்தில், இந்தக் கொடியவனைக் கொன்று, எங்களுக்கு அருள்புரியுங்கள்" என்று வேண்டினார்.

பிரம்ம தேவனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, பகவான் சிரித்துவிட்டு, அந்த அசுரனுடன் போர் தொடுக்க ஆயத்தமானார்.

பகவானின் போக்கை அறிந்த இரண்யாக்கன், கதையால் பகவானின் கன்னத்தில் அடித்தான்.

அதைப் பகவான் தடுத்துவிட்டார்.

இருவருக்கும் இடையில் தொடர்ந்து போர் நடந்தது.

பிறகு,பகவான் அந்த அசுரனைக் கீழே தள்ளி, தமது கைகளால் இரண்யாக்கனுடைய கன்னத்தில் அடித்தார்.

அந்த அடி தாங்க மாட்டாது, கண்கள் பிதுங்கி, அந்த அசுரன் உயிர் நீத்தான்.

இதைக் கவனித்த பிரம்மா முதலான தேவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். "இத்தகைய மேலான கதி யாருக்குக் கிட்டும்? பகவானுடைய கையால் அடியுண்டு,

மாளும் பேறு இந்த அசுரனுக்குக் கிட்டியிருப்பது அவன் செய்த பாக்கியம்'' என்று பாராட்டிச் சொன்னுர்கள்.

இதன் பின்னர், தேவர்கள், பகவானை பலவாறு துதித்துப் போற்றினுர்கள்.

இரண்யாக்கனை இப்படி வதம் செய்த பின்னர், திருமால் வைகுந்தம் திரும்பினுர்.

## கர்த்தமர் திருமணம்

வராகவதாரம் எடுத்து, பகவான் பூமியை எடுத்து வந்ததையும், அப்போது இரண்யாக்கனை வதம் செய்ததையும் மைத்ரேயர் சொல்லக் கேட்டு விதுரர் மனம் மகிழ்ந்தார். பிறகு, அவர் மைத்ரேய முனிவரிடம், ''அந்தணரே! சிருஷ்டியின் பொருட்டு மரீசி முதலிய பிரஜாபதிகளைப் படைத்த பின்னர், பிரம்ம தேவர் என்ன செய்தார்? மரீசி முதலிய பிரஜாபதிகளும், சுவாயம்புவ மனுவும், பிரம்ம தேவருடைய கட்டளைக்கு இணங்க, இந்த உலகத்தை எப்படிப் பரிபாலித்தார்கள்? தங்கள் மனைவியருடன் சேர்ந்து, இந்த உலகத்தை விருத்தி செய்தார்களா? அல்லது தனியே இருந்து விருத்தி செய்தனரா? அல்லது எல்லாரும் சேர்ந்து சிருஷ்டித் தொழிலைச் செய்தனரா?'' என்று கேட்டார்.

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டு, பிறகு, ஆண் பெண் தொடர்பினுல் உலகம் விருத்தியடைந்தது குறித்து, மைத்ரேயர் விதுரருக்குச் சொல்லத் தொடங்கினுர்.

சுவாயம்புவ மனுவுக்கும் சதரூபைக்கும் இரண்டு ஆண் குழந்தைகளும், மூன்று பெண் குழந்தைகளும், பிறந்தனர்.

பிரம்மா சிருஷ்டி செய்யத் தொடங்கி, சிருஷ்டி

செய்து வந்தபோது, அவருடைய நிழலிலிருந்து கர்த்தமப் பிரஜாபதி என்பவர் தோன்றினர்.

அவர் பிரம்ம தேவரின் விருப்பத்துக்கு இசைந்து, பிரஜைகளின் உற்பத்தியின் பொருட்டாய், சரஸ்வதி ஆற்றங் கரைக்குச் சென்று, பதிறையிரம் ஆண்டுகள் தவம் செய்தார். ஒழுக்கத்திலும் பக்தியிலும் மேம்பட்டு விளங்கி, பரந்தாமனை அவர் தியானித்தார்.

கிருத யுகத்தில் கர்த்தமர் இவ்வாறு தவம் செய்த சமயம், அவருடைய தவத்தை மெச்சி, பரமாத்மா அவருக்குத் தரிசனம் தந்தார்.

வான வீதியில் பரமாத்மா திருமகளுடன் சேர்ந்து வந்து, தமக்குத் தரிசனம் தருவதைப் பார்த்ததும், புளகாங்கிதம் அடைந்த கர்த்தமர், எழுந்து நின்று, பிறகு தரையில் வீழ்ந்து அவரை வணங்கினர். பிறகு எழுந்து நின்று கைகூப்பிக்கொண்டே பரந்தாமனைத் துதித்தார். "இறைவனே! உம்மைக் காணும் பேறுபெற்ற நான் மகா பாக்கியசாலி. பேரின்பத்தைக் கொடுக்கும் ஆற்றல் பெற்ற உம்மிடம், சிற்றின்பத்தை விரும்பி, மக்கள் பிரார்த்திப்பது, விந்தையிலும் விந்தையே ஆகும். இது உமது மாயையே யன்றி வேறு இல்லை. என் தந்தை இல்லறத்தை ஏற்று, பிரஜைகளை உண்டாக்கும்படி கட்டளையிட்டு இருக்கிறார். அதன் பொருட்டாகத்தான் நான் தவம் செய்கிறேன். என் தந்தையின் கட்டளையும் எனது தவமும் நிறைவேறத் தாங்கள் அருள்புரிய வேண்டும்" என்று வேண்டினர்.

கருடன்மீது வந்திருக்கும் பகவான், கர்த்தமரின் துதியைக் கேட்டு, அவருக்கு அன்போடு பதில் சொன்னர்: "கர்த்தமரே! உமது கருத்தை அறிந்து, அதற்குத் தகுந்த ஏற்பாட்டை நான் செய்திருக்கிறேன். என்னை ஆராதிப்பவரின் விருப்பம் ஒருபோதும் வீண்போகாது.

''பிரம்மாவின் புதல்வன் சுவாயம்புவ மனு என்பவன் பிரம்மவர்த்தம் என்னும் நாட்டில் இருந்துகொண்டு, ஏழு கடல் சூழ்ந்த இந்தப் பூமண்டலத்தைப் பரிபாலித்து வருகிறான். ஒழுக்கசீலன் என்று புகழ்படைத்த அந்த மன்னன், தன் மனைவி சதரூபை என்பவளை அழைத்துக்கொண்டு, உன்னைக் காண வருவான். அந்த மனு தன் புதல்வி தேவஹூதியை உனக்குத் திருமணம் செய்துதருவான்; நீ விரும்பும் காலம்வரை, அந்தப் பெண் உன் கூடவே இருப்பாள்; உனது வீரியத்துக்குக் கருவுற்று, தேவஹூதி ஒன்பது பெண் மக்களைப் பெறுவாள்.

''இந்த ஒன்பது பெண்களிடத்திலும் மகரிஷிகள் சந்தான விருத்தி செய்வார்கள். நானும் உன் மனைவி தேவஹூதியின் வயிற்றில் அவதரித்து, தத்துவ சம்பந்தமான நூல் ஒன்றை இயற்றுவேன்'' என்று சொன்னார்.

இவ்வாறு கர்த்தமருக்கு அறிவித்துவிட்டு, அவர் பார்த்து இருக்கும்போதே, பிந்துசரஸைக் கடந்து, பகவான் மறைந்து போய்விட்டார்.

பகவான் சென்ற பின்பு, கர்த்தமப் பிரஜாபதி, மனுவின் வரவை எதிர்பார்த்து, பிந்துசரஸின் கரையில் காத்து இருந்தார்.

சுவாயம்புவ மனு, தன் மனைவி சதரூபையையும், மகள் தேவஹூதியையும் அழைத்துக்கொண்டு, தங்கமயமான தேரில் ஏறி, கர்த்தமர் இருக்கும் இடத்துக்கு வந்தார்.

தம் பக்தன் கர்த்தமரின் அன்பை வியந்து, பகவான் ஆனந்தக் கண்ணீர் பெருக்கிய இடமாதலால், அந்த இடத்துக்குப் பிந்துசரஸ் என்னும் பெயர் உண்டாயிற்று.

பிந்துசரஸில் தவம் செய்துகொண் டிருக்கும் கர்த்த

மரை, சுயாம்புவ மனு சந்தித்தார்; அருகே சென்று அவரை வணங்கினர்.

கர்த்தமரும் அவரைத் தக்கபடி உபசரித்து மரியாதை செய்தார்; ஆசனம் கொடுத்து, அமரச் சொன்ஞர். பிறகு அவரை நோக்கி, "அரசே! மக்களைப் பாது காப்பதால் அரசர்கள் திருமாலின் அம்சம் ஆவர். நல்லாரைக் காப்பதும் தீயோரைத் தண்டிப்பதும் அரசரின் கடமை. சஞ்சாரம் செய்து தருமங்களை அரசர்கள் பாது காவாமல் இருந்தால், தருமங்கள் நிலைகுலைந்து அழிந்து போகும்; அரசனின் பாதுகாப்பு இல்லாது போயின், ஆசைவயப்பட்ட மக்கள், அத்துமீறி, அதருமத்தைச் செய்வார்கள். அரசே! இப்போது நீர் தேரில் ஏறிக்கொண்டு இங்கு வரக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

தன்னைக் கர்த்தமர் இவ்வாறு புகழ்ந்து பேசுவதைக் கேட்டு, சுவாயம்புவ மனு நாணமடைந்தார். பிறகு அவரிடம், "அந்தணரே! இதோ இருக்கும் என் புதல்வி பெயர் தேவஹூதி. யௌவனப் பிராயத்தில் இருக்கும் இவள், நற்குணங்கள் வாய்ந்த, தகுந்த நல்ல ஆடவனைத் திருமணம் செய்துகொள்ளும் விருப்பத்துடன் இருக்கிருள். நாரத முனிவர் மூலம் உமது குணங்களையும் மேன்மைகளையும் கேள்வியுற்று, உம்மையே கணவனுகப் பெற இவள் நிச்சயம் செய்துகொண்டு இருக்கிருள். விருப்புடன் இவளை நான் உம்பால் ஒப்படைக்கிறேன். நீர் இவளை ஏற்றுக்கொள்ளும். இல்லறம் நடத்துவதற்கும் தொண்டு செய்வதற்கும் இவள் உமக்கு உதவுவாள். ஆசையை ஒழித்தவனுயினும் விரும்பாமல் கிடைப்பதை யாரும் மறுக்கக் கூடாது. திருமணம் செய்துகொள்ளும் விருப்பம் உமக்கு இருப்பதாக அறிகிறேன். ஆகவே, பெண்குலத்துக்கு மாணிக்

கம் போல் விளங்கும் இவளை மனமுவந்து நான் தருகி றேன். ஏற்றுக்கொள்ளும்'' என்று வேண்டினுர்.

இப்படி சுயாம்புவ மனு கூறியதும், கர்த்தமர் அவருடைய விருப்பத்துக்கு இசைந்தார். ''அரசே! உம் விருப்பபடியே, உம் புதல்வியை நான் ஏற்றுக்கொள் கிறேன். திருமணம் செய்துகொண்டு இல்லறத்தை நடத்துகிறேன். கருவுற்று இவள் பிள்ளையைப் பெறும் வரை, நான் இவளுடனே இருப்பேன். அதன் பின்னர், நான் துறவறத்தை மேற்கொள்வேன். உலகத்தைப் படைத்தும், காத்தும், கரந்தும் விளையாடும் இறைவன் எனக்கு இவ்வாறுதான் கட்டளையிட்டுள்ளார்'' என்று கர்த்தமர் சொன்னுர்.

பிறகு வாசுதேவரைத் தியானம் செய்துகொண்டு மௌனமாய் இருந்தார்.

தன் மனைவியின் அபிப்பிராயத்தையும் மகளுடைய அபிப்பிராயத்தையும் கேட்டுத் தெரிந்துகொண்டு, சுவாயம்புவ மனு தன் புதல்வி தேவஹூதியைக் கர்த்த மருக்கு முறைப்படி திருமணம் செய்து கொடுத்தார்.

சுவாயம்புவ மனுவின் மனைவி சதரூபை, தன் புதல் விக்கு, அணிகலன்கள், விளையாட்டுச் சாமான்கள், ஆடைகள் முதலியவற்றை, சீதனமாகக் கொடுத்தாள்.

இதன் பின்னர், ''அம்மா! குழந்தாய்!'' என்று சொல்லி, ஆனந்தக் கண்ணீர் பெருக்கி, தம் புதல்வி தேவஹூதியிடம் விடைபெற்றுக்கொண்டார் சுவாயம் புவ மனு.

பிறகு தம் மனைவி சதரூபையையும் உடன் அழைத் துக்கொண்டு, தேரில் ஏறி, தமது நகரம் திரும்பினுர்.

பிரம்மவர்த்தத்தில் உள்ள மக்கள், தங்கள் அரசர் சுவாயம்புவ மனுவை எதிர்கொண்டு வரவேற்று மரியாதை செய்தார்கள்.

# ஆண் குழந்தை வேண்டும்

தாய் தந்தையர் திரும்பிய பின்பு, தேவஹூதி, தம் கணவர் கர்த்தமருடன் இங்கிதமாக நடந்துகொண்டாள். பரமசிவனுக்குப் பார்வதி பணிவிடைகள் புரிவதைப் போல், கர்த்தமருக்கு அவள் பணிவிடைகள் புரிந்தாள். கண்கண்ட தெய்வமாகக் கருதி, கணவனிடம் அன்போடு நடந்துகொண்டாள். அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்தாள். பதில் சொல்லும்போது, இனிமையோடு பதில் சொன்னாள்.

தம் மனைவியின் நடத்தையால் கர்த்தமர் உளம் பூரித்தார். அன்பு மேலிட்டு அவளை நோக்கி, "மேன்மையான பெண்ணே! எனக்குக் கௌரவத்தைத் தேடித் தருபவள் நீ; எந்த உயிருக்கும், தமது உடல்மீது பிரியம் அதிகம் இருக்கும்; அத்தகைய உடலை வருத்தி, எனக்கு நீ பணிவிடைகள் புரிகிறாய்; என்னிடம் அன்பாக நடந்து கொள்கிறாய். இதனால் நான் மகிழ்ச்சி அடைந்தேன். நீ செய்யும் பணிவிடையின் பயனால்தான், என்னால் தவம் செய்ய முடிந்தது; யோகம் செய்ய முடிந்தது; உபாசனை செய்து மனத்தை ஒருவழிப்படுத்த முடிந்தது. ஆகவே, எனது தவத்தால் கிடைத்திருக்கும் போகங்கள் அனைத்திலும் உனக்கும் உரிமை உண்டு உனக்கு ஞானக் கண்ணைக் கொடுக்கிறேன். விரும்புவதை நீ அனுபவிக்கலாம்" என்று சொன்னார்.

யோகத்திலும் தவத்திலும் உபாசனையிலும் தன் கணவன் சிறந்து விளங்குவதைக் கண்டு தேவஹூதி மகிழ்ச்சி அடைந்தாள். நாணமுற்றவளாக அவரை நோக்கித் தழுதழுத்த குரலில், "அந்தண சீலரே! உமது தவமும் யோகமும் வீணாகாதவை என்பதை நான் அறிவேன். திருமண காலத்தில் நீர் கூறியபடி கருத்தரித்தலை

நான் விரும்புகிறேன். ஒரு பெண்ணுக்குக் கணவனிடமிருந்து கிடைக்கும் பேறுகளில், புத்திர பாக்கியத்தைக் காட்டிலும் சிறந்த பேறு வேறு இல்லை. நோன்பு முதலியவற்றாலும், மன்மதனுடைய உபத்திரவத்தாலும் நலிந்து இருக்கும் எனது உடலை, உமது யோக மகிமையால், போகத்துக்கு இயைந்தவாறு செய்ய வேண்டும். காம இன்பத்துக்குத் தேவைப்படும் சாதனங்களையும் சம்பாதிக்க வேண்டும்; அதற்கு ஏற்ற இல்லமும் வேண்டும்'' என்று நாணத்துடன் சொன்னாள்.

தன் மனைவியின் விருப்பத்தை அறிந்த கர்த்தமர் அதை நிறைவேற்றி வைப்பது எனத் தீர்மானித்தார். தமது யோக பலத்தால் உடனே ஒரு விமானத்தை அவர் உண்டுபண்ணினார்.

அந்த விமானம் விரும்பிய இடத்துக்கு எல்லாம் செல்லக் கூடியது; விரும்பிய பொருள்களை எல்லாம் கொடுக்கக் கூடியது; இரத்தின கசிதமானது; பார்க்க வெகு அழகாய் இருப்பது; விசித்திரமான தோரணங்களால் விளங்குவது; படுக்கைகள், தோட்டங்கள், விளையாடுமிடங்கள் முதலியன அந்த விமானத்தில் இருந்தன.

இத்தகைய சிறந்த விமானத்தைத் தேவஹூதி பார்த்தாள். ஆயினும் அதை அவள் விரும்பவில்லை.

அனைத்தையும் அறியும் ஆற்றல் பெற்ற கர்த்தமர், தன் மனைவியின் மன நிலையைத் தெரிந்துகொண்டார். ஆகவே, அவர் அவளிடம், ''பெண்ணே! திருமாலால் உண்டாக்கப்பட்ட, இந்தப் பிந்துசரஸில் நீராடிவிட்டு வந்து, இந்த விமானத்தில் ஏறிக்கொள். மக்கள் விரும்புவதைக் கொடுக்கும் ஆற்றல் பெற்றது இது'' என்று சொன்னார்.

அப்போது தேவஹூதி அழுக்கடைந்த மேனியுடன் இருந்தாள். அவள் அணிந்திருந்த ஆடைகளும் அழுக்கேறி இருந்தன. கூந்தல் சடை சடையாய்த் தொங்கிற்று.

இந்தக் கோலத்தில் இருந்த தேவஹூதி,பிந்துசரஸில் இறங்கி, ஜலத்தில் மூழ்கியவுடன், அங்கே ஒரு மாளிகையில், ஆயிரம் பெண்கள் இருப்பதைப் பார்த்தாள்.

அவர்கள் அனைவரும் இளம் வயதினர்; அவர்களின் உடம்பிலிருந்து நீலோத்பல மலரின் நறுமணம் கமழ்ந்தது.

தேவஹூதியைப் பார்த்ததும், அவர்கள் அனைவரும் எழுந்து நின்று கைகூப்பி அவளை வணங்கினர். "அம்மையே! நாங்கள் அனைவரும் தங்களின் பணிவிடைப் பெண்கள்; தாங்கள் கட்டளையிடுவதைச் செய்யக் காத்து இருக்கிறோம். என்ன செய்ய வேண்டும்? உத்தரவிடுங்கள்" என்று கேட்டார்கள்.

பின்னர்,நறுமணம் கமழும் தைலத்தைத் தேவஹூதியின் உடம்பில் பூசி, அவளை நீராட்டி வைத்தார்கள்; வெண் பட்டாடையை எடுத்து வந்து உடுத்திவிட்டார்கள். பிரகாசமான விலையுயர்ந்த ஆபரணங்களை அவளுக்கு அணிவித்தார்கள்.

அப்போது தன் மேனியைக் கண்ணாடியில் பார்த்து, தேவஹூதி அக மகிழ்ந்தாள்; அவளுடைய முகம் பிரகாசமாயும் வசீகரமாயும் இருந்தது. கண்கள் இரண்டும் தாமரை மலர்போல அழகாய் இருந்தன.

இவ்வளவு சோபையுடன் இருந்த தேவஹூதி, "இப்பொழுது என் கணவர் அருகில் இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்?" என்று நினைத்தாள்.

என்ன ஆச்சரியம்! தான் நினைத்த மாத்திரத்தில் தானும் தம் பணிவிடைப் பெண்களும், தன் கணவர்

கர்த்தமருக்கு அருகே நிற்பதை அவள் கண்டாள். இது தம் கணவரின் யோக மகிமைதான் என நினைத்து, தேவஹூதி ஆச்சரியத்தில் மூழ்கிப் போனாள்.

நீராடி, புத்தாடை அணிந்து, ஆபரணங்கள் பூண்டு, ஆயிரம் வித்தியாதரப் பெண்கள் புடைசூழ, தன் மனைவி தேவஹூதி வந்திருப்பதைப் பார்த்ததும், கர்த்தமருக்கு அவள்மீது ஆசை உண்டாயிற்று. ஆகவே, அவளை விமானத்தில் ஏற்றிக்கொண்டார் கர்த்தமர்; வித்தியா தரப் பெண்களும் அந்த விமானத்தில் ஏறிக்கொண்டார் கள். மலைச்சாரல்களிலும் மற்ற இடங்களிலும் சஞ் சரித்து, இந்தப் பெண்கள் புடைசூழ்ந்து பணிவிடை செய்ய, கர்த்தமர் உல்லாசமாகப் பொழுது போக்கினார்.

தம் மனைவி தேவஹூதியிடம் ஒன்பது குழந்தை களை உண்டுபண்ண வேண்டும் என்னும் விருப்பத் துடன், அவளை அணைந்து மருவி, கர்த்தமர் மகிழ்ச்சி யோடு இருந்தார்.

தன் கணவனுடன் இருந்ததால் காலம்கழிவது தெரி யாமல், தேவஹூதியும் ஆனந்தசாகரத்தில் திளைத்தாள்.

இப்படி ஒரு இன்ப சாகரத்தில் தோய்ந்து, கணவன் மனைவி இருவரும், நூறு ஆண்டுகளைக் கழித்தார்கள்.

பிள்ளைகளை உண்டுபண்ண வேண்டும் என்னும் ஆசை ஒன்றைத் தவிர்த்து, வேறு ஆசைகளுக்கு இடம் கொடாது, தேவஹூதியை அணைந்து மருவி, அவளிடம் கர்த்தமர் ஒன்பது பெண் குழந்தைகளைத் தமது வீரி யத்தை ஒன்பது வகையாகச் செலுத்தி, உண்டுபண் ணினார்.

உடனே தேவஹூதி ஒன்பது பெண் மக்களை ஈன்றாள்.

அந்த ஒன்பது பெண்களும் அழகுமிக்கவர்களாய் இருந்தார்கள். அவர்களின் உடம்பிலிருந்து, செந்தாமரை மலரை யொத்த நறுமணம் வீசிற்று.

குழந்தைகள் பிறந்ததும் கர்த்தமர் துறவறத்தை மேற்கொள்ளத் தயாராஞர்.

இதைக் கவனித்த தேவஹூதி, வந்த கண்ணீரை அடக்கிக்கொண்டு, நிலத்தைக் கால் நகத்தால் கீறிய வாறே, தம் கணவன் கர்த்தமரை நோக்கி, "நாதா! தாங்கள் எனக்கு வாக்களித்தபடி, அனைத்தையும் நிறைவேற்றி முடித்துவிட்டீர்கள். ஆயினும், அபயம் அளித்து என்னைத் தாங்கள் காப்பாற்ற வேண்டும். தாங்கள் காடு சென்று தவ வாழ்வை மேற்கொண்டால், நம் பெண்களுக்குத் தகுந்த கணவன்மாரை யார் தேடித் தருவார்கள்? சம்சார சாகரத்தைக் கடக்க விரும்பினுல், புத்திரன் வேண்டும் அல்லவா? உம்மோடு இவ்வளவு காலம் இருந்தும் உமது மனநிலையை அடியாள் இன்னும் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறேன்; பகவானிடம் மட்டும் பக்தி செலுத்தத்தக்க மனப் பக்குவம் இன்னும் எனக்கு ஏற்படவில்லை. ஆகவே, தாங்கள் எனக்கு அருள்புரிய வேண்டும்" என்று நயமாகவும் அழகாகவும் வேண்டிஞள்.

## கபிலர்

இவ்வாறு தேவஹூதி உரைத்ததும், அவள் வயிற்றில் கருவுற்று அவதரிப்பதாக, பகவான் வாக்களித்தது, கர்த்தமரின் நினைவுக்கு வந்தது. ஆகவே, அவர் தம் மனைவி தேவஹூதியை நோக்கி, "சுவாயம்புவ மனுவின் திருமகளே! மாசுமறுவற்ற நடத்தையுடையவளே! கவலையை விட்டுவிட்டு, மகிழ்ச்சியுடன் இரு. சகல கல்யாண குணங்களும் நிறைந்த பகவான், விரைவில் உனது வயிற்றில் அவதரிக்கப் போகிருர். தான தருமங்களைச் செய்து, மனத்தைப் பரிசுத்தமாக வைத்துக் கொள். ஐம்பொறிகளையும் மனத்தையும் கட்டுப்படுத்தி, பகவானைத் தியானித்து வா. விரதம் முதலியவற்றை

மேற்கொண்டு வாழ்க்கை நடத்து; அப்படி நீ செய்து வந்தால், உன் புகழைப் பரவச் செய்யும் பொருட்டு, பகவான் உன் வயிற்றில் பிறப்பார். அஞ்ஞானத்தை அகற்றி உனக்கு மெஞ்ஞானத்தை உபதேசிப்பார்'' என்று கூறினர்.

தம் கணவன் கர்த்தமர் கூறியதை அங்கீகரித்து, தேவஹூதி, அதன்படி பகவானை வழிபட்டு வந்தாள். வெகு காலத்துக்குப் பின்னர், பகவான் கர்த்தமருடைய வீரியத்தில் பிரவேசித்து, அக்னியானது கட்டையில் இருப்பதைப்போல, தேவஹூதியின் கருவில் பகவான் உருவானர்.

தேவஹூதி ஆண்மகவு ஒன்றை ஈன்றாள்; அப்போது தேவ துந்துபிகள் முழங்கின; தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். கந்தர்வர்களும் கின்னரர்களும் பாடினர்கள்; தேவ மடந்தையர் நடனம் ஆடினர்கள்.

பிரம்ம தேவர், மரீசி முதலிய மகரிஷிகளை அழைத்துக்கொண்டு, சரஸ்வதி ஆற்றங்கரையில் இருக்கும் கர்த்தமருடைய ஆசிரமத்துக்கு வந்தார்.

எல்லாம் வல்ல இறைவனே தத்துவத்தை உபதேசிக்கும் பொருட்டு, தேவஹூதியின் வயிற்றில் அவதரித்து இருப்பதைக் கண்டு, பிரம்ம தேவர் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். கர்த்தமரையும் தேவஹூதியையும் நோக்கி, அடியில் வருமாறு அவர் சொன்னர்.

"மைந்தா! என் சொல்லை ஏற்று மதித்து, அதன்படி நீ நடந்தது, பூசித்து என்னை நீ பெருமைப்படுத்தியதாகும். தந்தைக்கு மகன் செய்ய வேண்டிய பணி இதுவே. மெல்லிய இடையையுடைய உன் புதல்வியர்கள், பிள்ளை குட்டிகளைப் பெற்று, உலகில் சந்ததியைப் பெருக்குவார்கள். ஆகையால், உன் புதல்வியரை மரீசி முதலிய முனிவர்களுக்குத் திருமணம் செய்துகொடு.

அதனால் உனக்குப் பெருமையும் புகழும் பெருகும். ஏ கர்த்தமா! எல்லாம் வல்ல இறைவன் உன் மனைவி வயிற்றில் கபிலராக அவதரித்து இருக்கிறார்'' என்று சொன்னார்

பிறகு தேவஹூதியை நோக்கி, ''சுவாயம்புவ மனுவின் மகளே! கைடபன் என்னும் அசுரனை வதம் செய்த திருமால் உன் வயிற்றில் கபிலராக அவதரித்து இருக்கிறார்; கர்ம பந்தங்களின் வேர்களை எல்லாம் அறுத்து எறிந்து, ஞானத்தை அவர் உபதேசிக்கப் போகிறார். அறியாமை, ஐயம் என்னும் முடிச்சுகளைக் களைந்துவிட்டு, உலகில் அவர் சஞ்சரிக்கப் போகிறார். ஜிவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை விவரிக்கும் சாங்கிய தத்துவத்தை அவர் உபதேசிக்கப் போகிறார். உன் மகன் கபிலரைப் பெரியோர்கள் கொண்டாடுவார்கள். அதனால் உனக்குப் பெருமை ஏற்படும்'' என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, அன்ன வாகனத்தின்மீது ஏறிக்கொண்டு, பிரம்மா சத்திய லோகம் திரும்பினார்.

பிரம்ம தேவர் புறப்பட்டுச் சென்ற பின்பு, அவருடைய விருப்பப்படி, கர்த்தமர் தம் புதல்வியரை மரீசி முதலிய முனிவர்களுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

மரீசி முனிவருக்குக் கலை என்பவளையும், அத்ரிக்கு அனுசூயாவையும், அங்கீரஸுக்குச் சிரத்தை என்பவளையும், புலஸ்தியருக்கு அவிர்ப்பூவையும், புலகருக்குக் கதி என்னும் பெண்ணையும், பிருகுவுக்குக் கியாதி என்பவளையும், வஸிஷ்டருக்கு அருந்ததியையும், அதர்வருக்குச் சாந்தி என்பவளையும், கிருதுவுக்குக் கிரியை என்பவளையும் திருமணம் செய்து கொடுத்தார்.

கர்த்தமரும் மகிழ்ச்சி அடைந்தார்; மகரிஷிகளும் மகிழ்ச்சி அடைந்தார்கள். பிறகு தங்கள் மாமனாரான கர்த்தமரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, மகரிஷிகள் தத்தம் மனைவியையும் அழைத்துக்கொண்டு, புறப்பட்டார்கள். தங்கள் மாமனாருக்கு, இறைவனே கபிலராக வந்து அவதாரம் செய்திருக்கிறார் என்பதை அறிந்து, மகரிஷிகள் அளவற்ற மகிழ்ச்சியுடன் புறப்பட்டுப் போனார்கள்.

பகவான்தான் தனக்கு மகவாய் வந்து அவதரித்து இருக்கிறார் என்பதை அறிந்த கர்த்தமர், தனித்து அவர் அருகே சென்று, அவரை வணங்கினார்.

''சம்சார சாகரத்தில் உழன்று பாவ கர்மங்களினால் துயருறும் மாந்தர்களுக்கு, வெகு காலத்துக்குப் பின்னரே, தேவர்கள் கருணை செய்கிறார்கள். துறவிகள் பல பிறவிகள் எடுத்து, தவமும் தியானமும் செய்து, எவருடைய திருவடிகளைக் காண முயல்கிறார்களோ அத்தகைய பகவான், எளியேனுடைய இல்லத்தில் வந்து அவதரித்து இருக்கிறீர். 'உனக்கு மகவாய் வந்து பிறப்பேன்' என்று முன்பு எனக்கு நீர் அளித்த உறுதி மொழியை நீர் நிறைவேற்றிவிட்டீர் சாங்கிய தத்துவத்தை உபதேசிக்கவும், பக்தர்களின் பெருமையை விருத்தி செய்யவும், என் மனைவியின் வயிற்றில் நீர் அவதரித்து இருக்கிறீர். பக்தர்கள் எந்த உருவத்தில் உம்மைக் காண விழைகின்றனரோ, அந்த உருவத்திலேயே அவர்களுக்கு நீர் காட்சி கொடுக்கிறீர். நான் உம்மைச் சரண் அடைகிறேன். இப்பொழுது நான் சமர்ப்பிக்கும் எனது விருப்பத்தை நீர் அங்கீகரித்து அருள வேண்டும். துறவறத்தை மேற்கொண்டு, அதன் மூலம் உம்மை அடைவதை நான் விரும்புகிறேன். அதற்கு நீர் அனுமதி அளிக்க வேண்டும்'' என்று சொன்னார்.

இதைக் கேட்ட கபிலர், தம் தந்தையாகிய கர்த்தமரிடம், ''முனிவரே! உமக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றும் பொருட்டே இப்பொழுது நான் அவதரித்து உள்ளேன். உடல்மீது இருக்கும் பற்றுதலை விட்டுவிட விரும்புவர்களுக்கு உபதேசிக்கும் பொருட்டும் நான் அவதரித்துள்ளேன். பரமாத்மாவைப் பற்றித் தெரிந்துகொள்வது என்பது மிகவும் நுட்பமானது; முன்பு இதுபற்றி உபதேசித்தவை மறைந்து போயின. அவற்றை மீண்டும் பரப்பும் பொருட்டே நான் இப்பொழுது அவதரித்து இருக்கிறேன். நீர் விரும்பியபடி துறவறத்தை மேற்கொண்டு, ஆசாபாசங்களை ஒழித்து விட்டு, என்னைத் தியானியும். நீர் வீடுபேற்றை அடைவீர். என் தாய் தேவஹூதிக்கும் கர்மங்களினின்று விடுதலை பெறக் கூடிய ஆத்ம ஞானத்தை உபதேசிக்கிறேன். அதனால் அவளும் வீடுபேற்றை அடைவாள்'' என்று சொன்னார்.

இப்படிக் கபிலர் பதில் சொன்னதும், கர்த்தமர் அவரை வலம் வந்து வணங்கி விடை பெற்றுக்கொண்டு காட்டுக்குப் போய்விட்டார். பிறகு, பக்தி யோகத்தில் ஈடுபட்டு, மோட்சத்தை அடைந்தார்.

## முக்தி நிலை

கர்த்தமர் காட்டுக்குச் சென்ற பின்பு, கபிலரும் அவருடைய தாய் தேவஹூதியும், பிந்துசரஸின் கரையில் வசித்தார்கள்.

ஒரு நாள் தேவஹூதி தன் மைந்தன் கபிலரிடம் சென்று, ''பரிபூரணரே! பொறிகளின் போக்கிலேயே சென்று நான் மிகவும் சோர்ந்து போனேன். ஆசைகளை நிறைவேற்றிக்கொள்வதிலேயே நான் அழுந்திக் கிடந்த

மையால் நான் அறியாமையில் மூழ்கிக் கிடக்கிறேன். அறியாமை என்னும் கடலில் மூழ்கித் தத்தளிக்கும் என்னை, கரையேற்ற உம்மால்தான் முடியும். பல பிறவிகளுக்குப் பின்னர், உமது அருளினால், சிறந்த கண்ணைப் பெற்றேன். ஐம்பொறிகள் மூலம் கிடைக்கும் இன்பத்தையே நான் பெரிது என மதித்து இருந்தேன். தப்பான அந்த எண்ணம் அகன்று இப்போது உண்மையான அறிவுக் கண்ணைப் பெற்றேன். நான், எனது என்னும் மோகம் உம்மால்தான் ஏற்பட்டது; உம்மைத் தவிர்த்து வேறு யாராலும் அந்த மோகத்தைப் போக்க முடியாது. பிரகிருதி என்பது என்ன? புருஷன் என்பது யார்? இவற்றைப்பற்றி எனக்குத் தாங்கள் உபதேசிக்க வேண்டும்'' என்று வேண்டினாள்.

தம் தாய் தேவஹூதி கேட்ட இந்தக் கேள்விகள், மாந்தருக்கு வீடு பேற்றின்மீது விருப்பத்தை விளைவிக்கக் கூடியவை என்பதை அறிந்து, கபிலர் மகிழ்ச்சி அடைந்தார். முகத்தில் புன்னகை தோன்ற, அடியில் வரும் பதிலைக் கபிலர், தம் அன்னைக்குச் சொன்னார்:

''எந்த மார்க்கத்தைக் கடைப்பிடித்தால் சுகமும் துக்கமும் முற்றிலும் நாசமாகி, மோட்சம் சித்திக்குமோ, அந்த ஆத்ம ஞானத்தைப்பற்றிச் சொல்லுகிறேன் கேள். ஆத்மஞானத்தைத் தெரிந்துகொள்ள விரும்பிய முனிவர்களுக்கு, முன்பு இதுபற்றி நான் உபதேசித்து இருக்கிறேன். ஜீவனின் பந்தத்துக்கும் மோட்சத்துக்கும் காரணமாய் இருப்பது மனம். இது அனைவரும் ஒப்ப முடிந்த உண்மை. புலன் நுகர்ச்சிகளில் மனம் அழுந்திக் கிடக்குமாயின், அப்போது, சம்சார பந்தம் ஏற்படுகிறது. பரமாத்மாவிடம் பக்தி ஏற்படுமாயின், அது முக்தியைக் கொடுக்கிறது. நான் எனது என்னும் அகந்தைகள் அற்றுப் போமாயின், மனத்தில் ஆசை, மோகம்,

கோபம் முதலிய குணங்கள் ஏற்பட மாட்டா. அதனுல் மனம் பரிசுத்த மடைவதோடு, இன்பம், துன்பம் என்னும் உணர்ச்சிகளைக் கடந்து, அது சமநிலையை அடையும். அதனுல் எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை அவன் காண்பான்; அப்படிக் காண்பதற்குப் பக்தி அவசியம் ஆகும். ஒருவரோடு ஒருவர் உறவுகொள்வதே பந்தம் என்று பண்டிதர்கள் சொல்லி இருக்கிறுர்கள். ஆயினும் சான்றேரோடு உறவு ஏற்படுமாயின், அது, மோட்சத் துக்குச் சாதனமாகிறது.

"சான்ருேர் என்போர் யார்? அவர்களுக்குப் பூமாதேவி யைப் போல் பொறுமை இருக்கும். பிறருக்குத் துயரம் நேர்ந்தால் அதைத் தனக்கு நேர்ந்த துயரமாகக் கருதி அதைப் போக்க முயல்வர்; அதற்காகப் பிரதிப் பிரயோஜ னத்தை அவர்கள் எதிர்பார்க்க மாட்டார்கள். இதனுல் எல்லா உயிர்களையும் சமமாகப் பாவிக்கும் மனப்பக்குவம் அவர்களுக்கு இருக்கும். யாரையும் அவர்கள் பகைவர்க ளாய்க் கருத மாட்டார்கள். இறைவனிடம் அவர்கள் மாருத பக்தி செலுத்துவர். பக்திக்கு விரோதமாய் இருக்கும் பந்தங்களை எல்லாம் அவர்கள் அகற்றிவிடுவர். இறைவனுடைய கதையைக் கேட்பதிலும் பிறருக்குச் சொல்வதிலும் ஆர்வத்துடன் இருப்பர்.

"இத்தகைய சான்றேரோடு இணங்கி வாழ்தலே சத் சங்கம் எனப்படும். சத் சங்கத்தின் பயனுய் இறைவ னுடைய பெருமைகளை அறியவும் கேட்கவும் வாய்ப்பு உண்டாகும். அந்த வாய்ப்பினுல் பக்தி ஏற்படும். இந்தப் பக்தியின் பயனுய் தீயோர் சகவாசமும், பற்று, பாசம் முதலியனவும் விலகிப்போகும். அதனுல் ஞான யோகமும் கர்யோகமும் கைகூடி, இறைவனேடு இரண் டறக் கலக்கும் மோட்ச நிலையை ஜீவாத்மா அடைகிறுன்" என்று சொன்னுர்.

கபிலர் இவ்வாறு சொன்னதும், தேவஹூதி அவரிடம், "எவ்விதமான பக்தியைச் செலுத்தினல் மோட்சம் கிட்டும்? பெண்பாலான நான் எத்தகைய பக்தியைக் கடைப்பிடிக்க வேண்டும்? உமது திருவடிகளைச் சீக்கிரம் அடைவதற்கு எதைச் செய்ய வேண்டும்? இவற்றை எல்லாம் பற்றி, மந்த புத்தியுள்ள எனக்குத் தாங்கள் உபதேசிக்க வேண்டும்" என்று வேண்டினாள்.

தம் தாயார் இவ்வாறு கேட்டதும், பகவான் கபிலர் மகிழ்ச்சி அடைந்தார். ஆத்ம தத்துவத்தை விளக்கும் சாங்கிய சாஸ்திரத்தை அவளுக்கு மனமுவந்து உபதேசித்தார்.

"விகாரமில்லாத மனது, ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகியன சத்வகுணமுள்ள பகவானிடத்தில் லயித்து, விருத்தியடைவதையே பக்தி என்று சொல்லலாம். இத்தகைய பக்தியை, முக்தியைக் காட்டிலும் மேலானது என்று கூறலாம். உணவை ஜடராக்கினி நாசம் செய்வதைப்போல், இத்தகைய பக்தி, பூர்வீக கர்மவாசனை அனைத்தையும் போக்கடித்துவிடும். எனது சரிதத்தை ஒருவருக்கு ஒருவர் சொல்லிக்கொண்டு, எனது புகழைப் பாடிப் பரவும் அடியார்கள் சிலர், மோட்சத்தையும் விரும்புவது இல்லை. மோட்சத்தை அவர்கள் விரும்பாவிடினும், மங்களகரமான எனது வடிவத்தை அவர்கள் பார்ப்பதால், அவர்களுக்கு மோட்ச நிலை கிட்டியே தீரும். வைகுந்த லோகத்தில் இருக்கிற என் பக்தர்கள் அழிவை அடைவது இல்லை. மனைவி, மக்கள், வீடுவாசல், பணம், உற்றார் உறவினர் அனைத்தையும் துறந்து, யார் என்னிடம் மாறாத பக்தி செலுத்துகிறார்களோ, அவர்களை நான் சம்சார சாகரத்தினின்றும் கரையேற்றுகிறேன். மீண்டும் பிறவி ஏற்படாதபடி முக்தியை அவர்களுக்கு நான் கொடுக்கிறேன். ஆர்வத்துடன் என்பால் பக்தி

செலுத்தி, மனமானது என்னிடமே லயித்துவிடுமாயின், அந்த நிலைதான் முக்தி ஆகும்'' என்று சொன்னர் கபிலர்.

## கபிலர் செய்த உபதேசம்

மேலும் தொடர்ந்து கபிலர் சொல்லுகிருர் :

எதை அறிந்தால் இயற்கைக் குணங்களின் பிடிப்பிலிருந்து ஜீவன் விடுபடுவானே, அந்தத் தத்துவங்களின் தன்மையை உனக்கு நான் தனித் தனியே கூறுகிறேன். புருஷன், பிரகிருதி, காலம் இந்த மூன்றின் சொரூபத்தையும் உனக்கு நான் விளக்குகிறேன்.

எவன் உலக முழுதும் வியாபித்து இருக்கிருனே, எவன் பிரகிருதியையும் கடந்து நிர்க்குணமாய் இருக்கிருனே, எவன் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் உறைந்திருக்கிருனே, வேறு ஒளியின்றி எவன் தானே பிரகாசிப்பவனே, எவனுக்கு ஆதி இல்லையோ, அவனே புருஷன்.

தேக சம்பந்தத்தால் ஆத்மாவுக்கு, பிறப்பு இறப்பு முதலியன ஏற்படுகின்றனவே யன்றி, உண்மையில் ஆத்மாவுக்குப் பிறப்பு இறப்பு முதலியன கிடையா.

கனவில் காணும் பொருள்கள் அழிந்து போயினும், கனவு காண்பவன் அழியாமல் இருப்பதைப்போல, பிரகிருதி அழிந்து போயினும், பிரகிருதிக்குள் சூட்சுமமாய் இருக்கும் புருஷன் அழிவது இல்லை.

பிரகிருதியாயும் காலமாயும் இருந்து இறைவன் இந்தப் பிரபஞ்சத்தைப் படைக்கிருர். ஆயினும், காலத்தையும் பிரகிருதியையும் கடந்து நின்று அவர் செயற்படுகிருர்.

ஐந்து பூதங்கள், ஐந்து தன்மாத்திரைகள், ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, அந்தக்கரணங்கள் நான்கு.

இந்த இருபத்து நான்கு தன்மைகளைக் கொண்டே பிரகிருதி என்பது தொழிற்படுகிறது.

இந்த இருபத்து நான்கு தத்துவங்களையே சகுணப் பிரமத்தின் உடலாகத் தத்துவம் அறிந்தவர்கள் கூறுகின்றனர்.

காலம் என்பது இருபத்தைந்தாவது தத்துவமாகும்.

புருஷன், பிரகிருதி, காலம் இந்த மூன்றையும்பற்றி இப்போது உனக்கு நான் சொன்னேன். வெவ்வேறாய் இருப்பினும், இந்த மூன்றும் பகவத் சொரூபங்களே ஆகும்.

பிரகிருதி சொரூபம் ஸ்துலமாகக் காணக் கூடியது; புருஷன், காலம் ஆகிய இரண்டும் சூட்சும ரூபத்தில் இருப்பதால், அவற்றை யூகத்தினால் மட்டுமே அறிய முடியும். அப்படி அறிவதற்குச் சாத்திர அறிவு வேண்டும்.

பிரகிருதியின் மாயைத் தோற்றத்தில் பற்றுதல் கொண்டு அலைந்து திரியும் மனத்தை, இடையூறுகளால் தடைப்படாத பக்தியிலும் வைராக்கியத்திலும் செலுத்தி, மெல்ல மெல்ல தன் வயப்படுத்திக்கொள்ள வேண்டும்.

ஆசைப்படத்தகுந்த பொருள்களிடத்தில் ஆசை கொள்ளாது இருத்தலே வைராக்கியம் எனப்படும்.

வைராக்கியத்தை அபிவிருத்தி செய்து, மனத்தைப் பகவானிடம் செலுத்துவதே பக்தி எனப்படும்.

பக்தி அபிவிருத்தி அடைய அடைய, சம்சார பந்தம் தானே விலகிப் போகும்.

பக்தியை அபிவிருத்தி செய்துகொள்வதற்கு அங்கங்களாய் இருப்பவை பின்வருவன :

இறைவனே நமக்குத் தாய் தந்தை, உற்ருர் உற உறவினர் அனைத்தும் என்று நம்பும் மனநிலை;

எப்பொழுதும் உண்மையைப் பேசுதல்;

எல்லா உயிரிலும் இறைவனே இருக்கிருன் என்னும் சமத்துவ புத்தி;

விரோத மனப்பான்மை இல்லாமை;

தீயோர் கூட்டுறவை விட்டுவிடுதல்;

நல்லோர் உறவை நாடுதல்;

பெண் உறவை விலக்குதல்;

பிரமசரியம் அனுஷ்டித்தல்;

மிதமாகப் பேசுதல்;

மௌனமாய் இருத்தல்;

பகவானைப் பற்றிய கதைகளைச் செவிமடுத்தல்.

இவற்றினுல், பக்தியை ஒருவன் அபிவிருத்தி செய்துகொள்ள முடியும்.

இறைவனிடம் ஒருவனுக்கு இத்தகைய பக்தி ஏற்படுமாயின், பிரகிருதிக்கும் புருஷனுக்கும் இடையே இருக்கும் பேதத்தை அறிய முடியும்; அதனுல் இறைவனிடம் உண்மையான ஞானம் ஏற்படும்.

அரணிக்கட்டைக்குள் மறைந்து இருக்கும் நெருப்பு, அரணிக்கட்டையை எரித்து விடுதல்போல, பிரகிருதிக்குள் மறைந்து இருக்கும் தத்துவ ஞானம், துலக்கம் பெறுமாயின், பிரகிருதியை மறைத்து, புருஷனைக் காட்டுகிறது. அதனுல் ஜீவாத்மா மேலான நிலையை அடைகிருன்.

* * *

இறைவனிடம் ஒருவன் இடையருது பக்தி செலுத்தி வருவானுயின், அவன் மனது மாசுமறுவற்றதாய் இருக்கும்; இறைவனுடைய திருவுருவத்தில் மனம் பதிந்து,

இத்தகைய பக்தி யோகத்தை அஷ்டாங்க யோகம் என்று சொல்லுவார்கள்.

யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணம், தியானம், நிதித்யாசனம் என்பவையே அஷ்டாங்க யோகமாம்.

தனது ஆற்றலுக்கு இயைய வருணச்சிரம தருமத்தைக் கடைப்பிடித்தல்; புறம்பான தருமத்தை விட்டு விடுதல்; தெய்வச் செயலால் கிடைப்பதைக் கொண்டு மகிழ்ச்சி அடைதல்; இறைவனுடைய மெய்யடியார்களைப் பூசிப்பது; இகலோக தருமத்தில் அதிக நாட்டம் செலுத்தாது, மோட்ச சாதனமாகிய தர்மங்களில் அதிக நாட்டம் செலுத்துவது; சுத்த உணவை மிதமாக உண்பது; இரண்டு பாகம் உணவு, ஒரு பாகம் தண்ணீர் அருந்துவது; நான்காவது பாகத்தைக் காற்றின் சஞ்சாரத்துக்கு விட்டுவிடுவது; ஏகாந்தமான இடத்தில், தொந்திரவுகள் இல்லாத இடத்தில் வசிப்பது; உண்மையையே பேசுவது; பிறரைத் துன்புறுத்தாது இருப்பது; பிறர் பொருளை அபகரியாதிருப்பது; தேவைக்கு அதிகமாகச் செல்வம் தேடாமல் இருப்பது; புலன்களை வெற்றி கொள்வது; சந்திராயன நோன்பு இருப்பது; மறைகளை மனப்பாடம் செய்வது; பகவானைப் பூசிப்பது; மௌனத்தைக் கடைப்பிடிப்பது.

மேலே குறிப்பிட்ட முறைகளைக் கடைப்பிடித்து, தீய வழிகளில் செல்லும் மனத்தைப் பகவானிடம் செலுத்த வேண்டும். சோம்பி இருத்தல் கூடாது.

ஆசனத்தில் அமர்ந்து, யோக முறையைக் கடைப்பிடித்து, மனத்தை ஒருநிலைப்படுத்தி, ரஜோ குணத்தை வெற்றிகொள்ள வேண்டும்

அதன் பின்னர், பகவானுடைய சொரூபத்தைக் காணும் விருப்போடு தியானம் செய்ய வேண்டும். தான்

வேறு, பரப்பிரமம் வேறு என்னும் நிலையைக் கடந்து, எல்லாம் ஒன்று என்ற உணர்வு ஏற்பட வேண்டும். இதையே மோட்சம் என்பார்கள்.

பகவானை அடைவதற்குப் பக்தியும் யோகமும் சாதனங்கள் ஆகும்.

எல்லா உயிர்களிடத்திலும் நான் இருக்கிறேன். இந்த உண்மையை எப்பொழுதும் நினைவில் கொண்டு என்னிடம் பக்தி செலுத்த வேண்டும். அப்படியின்றி, எவன் பிறரை நிந்திக்கிருனே, அவன் என்னை நிந்திக்கிருன். அத்தகைய மனநிலை உள்ள ஒருவன், என்னிடம் பக்தி செலுத்துவானுயின், அதை நான் ஏற்பது இல்லை; மகிழ்ச்சி அடைவதும் இல்லை.

உயிரில்லாத சடப் பொருள்களைக் காட்டிலும் உயிருள்ளவை சிறந்தவை. உயிருள்ளவற்றில் சித்தம் உள்ளவை சிறந்தவை; சித்தம் உள்ளவற்றில் இந்திரியங்கள் உள்ளவை சிறந்தவை; இந்திரியங்கள் உள்ளவற்றில் ஐந்து இந்திரியங்களும் செயல்படுபவை சிறந்தவை; அவற்றில் நான்கு கால்களுள்ளவை சிறந்தவை; அவற்றில் இரண்டு கால்கள் உள்ளவை சிறந்தவை. இரண்டு கால்களுள்ள மனிதர்களில் அந்தணன் சிறந்தவன்; அந்தணனில் வேதம் அத்தியயனம் செய்தவன் மேலானவன்; அவனைக் காட்டிலும் வேதங்களின் பொருள், தெரிந்தவன் மேலானவன்; அவனைவிட ஐயங்களைப் போக்குபவன் சிறந்தவன்; அவனைக் காட்டிலும் சகல ஆசைகளையும் ஒழித்தவன் மேலானவன். சகல ஆசைகளை ஒழித்தவனுக்கும் எனக்கும் அதிக பேதம் இல்லை.

யோக மார்க்கம், பக்தி மார்க்கம் இந்த இரண்டில் எதையாவது ஒன்றைக் கடைப்பிடித்து, ஒருவன் இறைவனை அடையலாம் என்று தன் தாயாருக்கு, கபில

முனிவர் உபதேசித்தார்; புருடன், பிரகிருதி, காலம் மூன்றையும்பற்றி விளக்கினார்.

## மேலான கதி

மேலும் தொடர்ந்து கபிலர் சொன்னார் :

"மனுவின் மகளே! காற்றின் வலிமையால் தள்ளுண்டு அங்கும் இங்கும் மேகங்கள் சிதறிப் போயினும், இது காற்றினால்தான் நேருகிறது என்பதை, மேகங்கள் உணர்வது இல்லை. அதைப் போலவே, ஜீவனும் காலத்தின் வலிமையை உணர்வது இல்லை.

சுகத்தை விரும்பி, ஜீவன் எடுத்துக்கொள்ளும் முயற்சியின் பயனாய்க் கிடைக்கும் பொருள்கள் அனைத்தையும், காலம் என்பது கெடுத்துவிடுகிறது. அதனால் முயற்சி செய்த ஜீவன்—அதாவது மனிதன்—துயரமடைகிறான். பணம், வீடு, நிலம், மனைவி மக்கள், உற்றார் உறவினர் இவற்றை எல்லாம் நித்தியமானவை என்று மனிதன் மடத்தனமாகக் கருதுகிறான்; நிலையற்ற தனது உடலையும் நிலையானது என்று அசட்டுத்தனமாக நம்புகிறான்.

அதனால் வீடு வாசல், பணம் காசு, மனைவி மக்கள், உற்றார் உறவினர் ஆகியோரிடம் அதிக பற்றுதல் கொண்டு, தன்னைத் தானே அவன் பாராட்டிக்கொள்கிறான்; உடலைப் பேணிக் காப்பதில் மனத்தைச் செலுத்தி, சிந்தையுற்று, இன்ன செய்வது என்பதை அறியாது, மனம் கலங்கிப் பாவங்களைச் செய்கிறான். விலைமாதருடன் சேர்ந்தும், குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டும் இன்புற்று மயங்கி, வாழ்க்கை நடத்துகிறான்; பிறரைத் துன்பப்படுத்தி, பணம் தேடி, குடும்பத்தைக் காப்பாற்றுகிறான்; பாவம் செய்து குடும்பத்தைப் பாதுகாப்பதனால் நரகத்தை அடைகிறான்.

முயன்று பொருள் தேடும் காலத்தில் போதிய அளவு பணம் கிடைக்காவிட்டால், பிறர் பொருள்மீது ஆசை கொள்கிருன். போதிய அளவு பொருள் தேடாதபடியால், அவனுடைய மனைவி மக்கள் அவனை இழிவாக நடத்து கின்றனர். உலோப குணமுள்ள குடியானவன், வயது சென்ற காளை மாட்டைக் கவனித்துப் போஷிப்பானு?

இந்த நிலையிலும் அவன் வைராக்கியத்தை அடைவது இல்லை. நரை திரை மூப்பினுல் நலிந்து, சாகும் நிலையில் வீட்டில் இருக்கிருன். வீட்டைக் காத்திருக்கும் நாய்க்குச் சோறு போடுவது போல், வீட்டில் இருப்பவர்கள், அவனுக்குக் கொஞ்சம் சோறு போடுகிருர்கள்.

அதை உண்டு, காலத்தையும் பொழுதையும் அவன் கழிக்கிருன்; இருந்த இடத்திலேயே உணவைச் சாப்பிட்டுவிட்டு, அவன் உட்கார்ந்து இருப்பதனுல், உடலை நோய்கள் பீடிக்கின்றன; உணவை ஜீரணிக்கும் சக்தி குறைந்து போகிறது; நடமாட்டமும் குறைந்து, அவன் நலிவை அடைகிருன்; மூச்சுவிட முடியாமல் திணறு கிருன்; கபம் தொண்டையை அடைக்கிறது. கர்புர் என்று மூச்சுவிட்டுக்கொண்டு கலக்க மடைகிருன்; உற்ருர் உறவினர்கள் அவனைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டு அழத் தொடங்குகிருர்கள்; காலன் வயப்பட்டு அவன் இறந்து போகிருன்.

இறந்து போன இந்தப் பாவி நரக லோகத்தை அடைந்து, துன்புறுகிருன்; தான் செய்த பாவங்களுக்குத் தகுந்த ஜென்மத்தை அடைந்து, அல்லலுற்றுத் தவிக்கிருன். பிறகு மீண்டும் மனிதப் பிறவியை அடைகிருன்.

தான் செய்த கர்ம வினைப் பயனுய் மானுட ஜன்மத்தை எடுப்பதற்கு ஆணின் சுக்கிலத்தில் அந்த ஜீவன் பிரவேசிக்கிருன். இந்தச் சுக்கிலம், பெண்ணின் சுரோணி

த்தை அடைகிறது. இரண்டும் கலந்து, ஒரு நாள் உருப் பெறத் தொடங்குகிறது.

ஐந்தாவது நாளில் குமிழியைப்போல் வட்டமாகிறது.

பத்தாம் நாள் இலந்தையைப்போல் கெட்டியாகிறது.

அதன் பின்னர், மாமிசத் தன்மையை அடைந்து, முட்டை போன்ற உருவைப் பெறுகிறது.

ஒரு மாதமானவுடன் தலை உண்டாகிறது.

இரண்டாம் மாதத்தில் கை, கால், உடல் முதலியன உருவாகின்றன.

மூன்றும் மாதம், நகங்கள், மயிர்கள், எலும்புகள், தோல், ஆண்குறி அல்லது பெண் குறி, துவாரங்கள் முதலியன ஏற்படுகின்றன.

நான்காவது மாதத்தில் இரத்தம், மாமிசம் முதலிய எழு வகைத் தாதுக்கள் ஏற்படுகின்றன.

ஐந்தாவது மாதத்தில் பசியும் தாகமும் ஏற்படுகின்றன.

ஆறுவது மாதத்தில் அந்தக் கரு, தாயின் வயிற்றில் வலது பக்கத்தில் அலைந்துகொண் டிருக்கிறது.

ஏழாவது மாதத்தில் தனது பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தையும் மாயையால் பந்தம் ஏற்பட்டு மறுபடி வந்து, தான் பிறவி எடுக்கப் போவதையும் அந்த ஜீவன் தெரிந்துகொள்கிருன். தாய் உட்கொள்ளும் உணவினுலும், நீரினுலும் அந்தக் கரு வளர்ச்சி அடைகிறது. மனம் இல்லாது இருந்தும், மலம் மூத்திரம் நிறைந்த குழியில் வசித்து, அந்தக் கரு வளர்ச்சி அடைகிறது; அந்தக் குழியிலுள்ள புழுக்கள், சிசுவின் தேகத்தைக் கடித்துத் தொந்தரவு செய்கின்றன. தாய் உண்ணும் உறைப்பு, புளிப்பு, உப்பு முதலியவற்றை ஏற்க முடியாது சிசு

கருப்பைக்குள் கிடந்து அவதிப்படுகிறது. ஏழாவது மாதத்தில் பூர்வ ஜன்ம நினைப்பு வந்து, இறைவனை அவன் துதிக்கிறான்.

பத்தாவது மாதத்தில் தாயின் கருப்பத்தைவிட்டு, மிகுந்த சிரமத்துடன் பிறக்கிறான். இந்தச் சிரமத்தின் பயனாய், பூர்வ ஜன்ம வாசனைகளை எல்லாம் அவனுக்கு மறந்து போகின்றன; அழுதுகொண்டே அவன் பிறக்கிறான். இப்படிப் பல ஜன்மங்கள் எடுத்து, ஜீவன் பெரிதும் அவஸ்தைப்படுகிறான்.

இவ்வாறு தன் புதல்வர் கபிலர் செய்த உபதேசத்தைக் கேட்டு, தேவஹூதி பரவசமடைந்தாள்; அவரைப் புகழ்ந்து போற்றினாள்.

இதன் பின்னர் கபிலர் தம் தாயை நோக்கி, "அம்மா! நான் உனக்கு உபதேசித்த பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் மேலான கதியை அடைவர்" என்று சொல்லி, விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார்.

தன் புதல்வன் போன பின்பு, சரஸ்வதி ஆற்றங்கரையில் இருக்கும் ஆசிரமத்துக்குத் திரும்பி, அவர் உபதேசித்த மார்க்கத்தைக் கடைப்பிடித்து, தேவஹூதி மேலான கதியை அடைந்தாள்.

# ஸ்ரீமத் பாகவதம்



## நான்காம் ஸ்கந்தம்

# ஸ்ரீமத் பாகதவம்

## நான்காம் ஸ்கந்தம்

### தக்ஷன் கதை

மைத்ரேய மகரிஷி தொடர்ந்து சொல்கிறார்:

''விதுரா! சுவாயம்புவ மனுவின் சந்ததியைப்பற்றிச் சொல்லுகிறேன் கேள். சுவாயம்புவ மனுவுக்குச் சதரூபை என்பவளிடத்தில் மூன்று பெண்களும், பிரிய விரதன், உத்தானபாதன் என்று இரு புதல்வர்களும் பிறந்தார்கள்.

இவர்களில் தேவஹூதி என்னும் பெண்ணை கர்த்தமப் பிரஜாபதிக்கு, சுவாயம்புவ மனு திருமணம் செய்து கொடுத்தார். இந்தச் சதிபதிகளுக்கு, கபிலர் பிறந்தார்.

மேலும் தனக்கு ஆண் குழந்தைகள் வேண்டும் என்ற விருப்பத்துடன் சுயாம்புவ மனு இருந்து வந்தார். ஆகவே, தன் புதல்வி ஆகூதியைத் திருமணம் செய்து கொடுக்கும் போது, ''இவளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தையை எனக்குத் தந்துவிட வேண்டும்'' என்ற ஒரு நிபந்தனையின் பேரில், தன் புதல்வி ஆகூதியை, ருசி என்பவருக்கு, சுவாயம்புவ மனு திருமணம் செய்து கொடுத்தார்.

ருசி என்னும் இந்தப் பிரஜாபதி, மிகுந்த பிரம்ம தேஜஸ் உள்ளவர்; எப்பொழுதும் திருமாலைப் பூசிப்பவர்; ஆகூதியிடம் இரண்டு குழந்தைகளை இவர் உண்டு பண்ணினர்.

ஆண் குழந்தை திருமாலின் அம்சம்; பெண் குழந்தை திருமகளின் அம்சம். ஆண் குழந்தையை யக்ஞன் என்றும், பெண் குழந்தையைத் தக்ஷிணை என்றும் அழைத்தார்கள்.

தன் புதல்வி, ஆகூதிக்கு ஆண் குழந்தை பிறந்து இருப்பதை அறிந்து, சுவாயம்புவ மனு அகமகிழ்ந்தார். திருமணம் செய்து கொடுத்த காலத்தில் செய்துகொண்ட உடன்படிக்கைப்படி, யக்ஞனைத் தன் இல்லத்துக்கு அழைத்து வந்து, சுவாயம்புவ மனு வளர்த்து வந்தார். ருசி தக்ஷிணையை வளர்த்து வந்தார்.

தக்க பருவத்தை அடைந்ததும், தக்ஷிணை திருமணம் செய்துகொள்ளப் பிரியப்பட்டாள்; அவளை, திருமாலின் அம்சமான யக்ஞன் திருமணம் செய்துகொண்டார்.

இருவரும் மகிழ்ச்சியுடன் இல்லறத்தை நடத்தினர். யக்ஞனுக்கு, ஆகூதியிடத்தில் பன்னிரு புதல்வர்கள் பிறந்தார்கள்.

* * *

தம் மூன்று பெண்களில் ஒருத்தியான பிரஸூதி என்பவளை, சுவாம்புவ மனு, தக்ஷன் என்னும் பிரஜாபதிக்குத் திருமணம் செய்து கொடுத்தார்.

தக்ஷப் பிரஜாபதி மூலம், பிரஸூதி என்பவள் பதினாறு புதல்வியரைப் பெற்றாள்.

இந்தப் பெண்களில் பதின் மூன்று பேர்களைத் தருமத்துக்கும், ஒரு பெண்ணை அக்கினி பகவானுக்கும், மற்றொரு பெண்ணைப் பிதிருக்களுக்கும், சதி என்னும் புதல்வியை, பரம சிவனுக்கும், தக்ஷப் பிரஜாபதி

தருமத்துக்குத் திருமணம் செய்து கொடுத்த பதின் மூன்று பெண்களில், மூர்த்தி என்பவள் ஒருத்தி. இவள் நரன், நாராயணன் என்னும் இரு ரிஷிகளைப் பெற்றாள்.

அப்போது தேவ துந்துபிகள் முழங்கின; தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்; உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் ஆனந்தம் அடைந்தன. தேவர்கள் துதித்துப் போற்ற, தருமத்தின் இல்லத்தில் பிறந்த இந்த இரு ரிஷிகளும், கந்தமாதன மலைக்குச் சென்றார்கள்.

இந்த இருவரும் பூபாரத்தைக் குறைக்கும் பொருட்டு, யது குலத்தில், கிருஷ்ணனாகவும், குரு குலத்தில் அர்ச்சுனனாகவும் அவதரித்து இருக்கிறார்கள்.

தக்ஷப் பிரஜாபதியின் பதினாறுவது பெண்ணான சதி என்பவள் தக்க கணவனை அடைந்து இருந்தும், தம் கணவனுக்குப் பணிவிடைகள் செய்தும், அவளுக்குக் குழந்தை பிறக்கவில்லை.

தம் தந்தை தக்ஷன், தம் கணவன் பரமசிவனோடு விரோதமாய் இருப்பது குறித்து, சதி பெரிதும் கவலைப் பட்டாள். ஆகையால் இளமைப் பருவத்திலிருந்தே யோக மார்க்கத்தைக் கடைப்பிடித்து, சதி தனது சரீரத்தை விட்டுவிட்டாள்.

மைத்ரேயர் இவ்வாறு சொன்னதும், விதுரர், "அந்தண சீலரே! சீலமுடையோரில் சிறந்தவரான சிவபெருமானுக்கும், தம் புதல்வியரிடத்தில் பாசம் அதிகமுள்ள தக்ஷப் பிரஜாபதிக்கும் இடையில் ஏன் விரோதம் உண்டாயிற்று? அதை எனக்குச் சொல்லுங்கள்" என்று கேட்டார்.

அதற்கு மைத்ரேய முனிவர், "விதுரா! முன்பு ஒரு காலத்தில் மரீசி முதலிய முனிவர்கள் சத்ர யாகம் ஒன்று நடத்தினார்கள். அந்த யாகத்துக்கு, மக ரிஷிகளும்

தேவர்களும், இந்திரனும் அவனுடைய பரிவாரத்தின ரும், அக்கினி முதலானவர்களும் வந்திருந்தார்கள்.

இந்த யாகத்துக்குத் தக்ஷப் பிரஜாபதியும் வந்தார்; தமது காந்தியினுலும் பிரபாவத்தினுலும் அந்தச் சபையின் சோபையை மேலும் மிகுதிப்படுத்திக்கொண்டு, சபைக்குள் அவர் நுழைந்தார்.

அவரைக் கண்டதும், தேவர்களும் முனிவர்களும் தத்தம் ஆசனத்தைவிட்டு எழுந்து, தக்ஷருக்கு மரியாதை செய்தார்கள்.

ஆனல், பரமசிவனும் பிரம்ம தேவரும் ஆசனத்தை விட்டு எழவில்லை.

தக்ஷப் பிரஜாபதி சென்று தம் தந்தை பிரம்ம தேவரை வணங்கினர்; அவருடைய கட்டளைப்படி ஆசனத்தில் அமர்ந்தார்.

தமக்கு முன்னே சபைக்கு வந்து, ஆசனத்தில் அமர்ந்திருக்கும் பரமசிவன் எழுந்து தமக்கு மரியாதை செய்யாததைக் கண்டு, தக்ஷர் ஆத்திரம் அடைந்தார். அவரைப் பொசுக்குபவர்போல் கோபத்துடன் முறைத்துப் பார்த்துவிட்டு, அங்கு இருப்பவர்களை நோக்கி, தக்ஷன் பேசத் தொடங்கினர்.

"தேவர்களே! பிரம்ம ரிஷிகளே! சான்றோர்கள் எப்படி நடந்துகொள்வார்கள் என்பதைப் பற்றிக் கூறுகிறேன்; கேளுங்கள். அறியாமையாலோ பொருமையாலோ நான் பேசுவதாக நீங்கள் எண்ணக் கூடாது. இவன்—சிவன்—லோகபாலர்களின் பெருமையைக் குறைப்பவன்; வெட்கமில்லாதவன்; சான்றோர்கள் செல்லும் வழி செல்லாது, அகந்தையோடு நடந்துகொள்கிறன். சாவித்திரியை நிகர்த்த என் புதல்வியை, அந்தணர்கள் முன்னிலையும் அக்கினி முன்னிலையிலும் [illegible] என் புதல்வி

சதியின் கண்கள், மான் குட்டியின் கண்களைப் போன்று அழகாக இருக்கும்; இவனுடைய கண்களோ, குரங்கின் கண்களை ஒத்திருக்கின்றன. என் புதல் வியைத் திருமணம் செய்துகொண்ட இவன், எதிர் கொண்டு வரவேற்று, என்னை வணங்கி இருக்க வேண் டும். அதைச் செய்யப் பிரியமில்லாவிட்டால் வாயா லாவது உபசார வார்த்தைகள் கூறி இருக்க வேண்டும். இவன் நல்ல காரியங்களைச் செய்யாதவன். அசுத்த மானவன்; அகந்தையுள்ளவன்; சுடுகாட்டில் அலைபவன்; மரியாதையைக் கெடுப்பவன்; சிதையின் சாம்பலைப் பூசிக்கொண்டு, பித்தன்போல் திரிபவன். இத்தகைய கபவனுக்குப் பிரம்ம தேவன் கட்டளையால் என் பெண் சதியை நான் திருமணம் செய்து கொடுத்தேன்'' என்று சொன்னார்.

பிறகு நீரைச் சிறிது கையில் அள்ளி ஆசமனம் செய்துவிட்டு, ''தேவர்களில் கடைப்பட்டவனான இந்தச் சிவனுக்கு, வேள்வியில் அவிர்ப்பாகம் பெறும் உரிமை இல்லாது போகட்டும்'' என்று சபித்தார்.

சபையில் இருக்கும் பெரியவர்கள், ''சபிக்க வேண் டாம்'' என்று சொல்லித் தக்ஷனைத் தடுத்தார்கள்.

அதைப் பொருட்படுத்தாது, சிவபெருமானைச் சபித்து விட்டு, கோபத்துடன் சபையை விட்டு வெளியேறி, தக்ஷன் தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

தக்ஷன் இவ்வாறு சிவபெருமானைச் சபித்ததும், சிவபெருமானுடைய கணங்களில் சிறந்தவரான நந்திக்கு, கோபத்தால் கண்கள் சிவந்துவிட்டன. தக்ஷனையும் அவனுக்கு ஆதரவு காட்டிக்கொண்டு, சபையில் இருந்த மற்ற அந்தணர்களையும் அவர் சபிக்கத் தொடங்கினார்:

''தன்னைச் சிறந்தவனாகக் கருதிக்கொண்டு, பேத புத்தி இல்லாத சிவபெருமானைச் சபித்த இந்தத் தக்ஷன்

பேதபுத்தியுள்ளவனுகி, தத்துவத்தை அறியும் புத்தியை இழக்கட்டும். சம்சார சாகரத்தில் உழன்று, கர்மபந்தத்தில் ஈடுபட்டுக் கிடக்கட்டும். ஜீவாத்மா பரமாத்மா ஆகியவற்றின் சொரூப நிலையை அறியாது, விலங்குகளைப் போல, காமத்தில் மயங்கிக் கிடக்கட்டும். அவனுடைய முகம் விரைவில் ஆட்டு முகல்போல் ஆகட்டும்'' என்று சபித்தார்.

பிறகு தக்ஷனுடைய சாபத்துக்கு அனுசரணையாக இருந்த அந்தணர்களையும் அவர் சபித்தார் : ''தக்ஷன் சார்பாக இருந்த அந்தணர்கள், பிறப்பு, இறப்பு முதலிய துன்பங்களை அடையட்டும்; மலரின் மணத்திலும் அழகிலும் மதிமயங்கிக் கிடப்பவர்களைப் போல, வேதங்களின் அர்த்த வாதத்தில் மனக் கலக்கமடைந்து, மோகத்தை அவர்கள் அடையட்டும். நியதி இன்றி ஆகாரத்தை உண்டு, தங்கள் உடலை அவர்கள் வளர்த்துக் கொள்ளட்டும். கல்வி, தவம், நோன்பு ஆகியவற்றை உடல் விருத்திக்காக அவர்கள் உபயோகிக்கட்டும்; பணம், தேகம், புலன் நுகர்ச்சி இவற்றிலேயே தோய்ந்து கிடந்து, பிச்சை வாங்கி உண்டு, அவர்கள் பிழைக்கட்டும்'' என்று சபித்தார்.

அந்தணர் குலத்தையே நிந்தி இவ்வாறு சபித்ததும், அந்தக் குலத்தவரான பிருகு பதில் சாபம் கொடுத்தார் :

''சிவனுக்கு ஆதரவாய் இருப்பவர்கள், மறைகளுக்கு ஒவ்வாத கருமங்களில் ஈடுபட்டு, வாழ்க்கை நடத்தட்டும். ஜடை, எலும்பு, விபூதி முதலியவற்றைத் தரித்துக் கொண்டு, சிவ தீட்சையை அடையட்டும்'' என்று சபித்தார்.

பிராமண சாபமாகையால், அதிலிருந்து தப்ப முடியாது என்று கருதி, சிவ பெருமான் சிறிது வருத்தம் அடைந்தார்.

பிறகு தமது கணங்களை அழைத்துக்கொண்டு அங்கிருந்து சிவபெருமான் போய்விட்டார்.

பிரஜாபதிகள் அந்த சத்ர யாகத்தை முடித்துவிட்டு, கங்கையில் நீராடி, தத்தம் இருக்கை திரும்பினர்.

மாமனுருக்கும் மருமகனுக்கும் இடையில் ஏற்பட்ட இந்தப் பகைமை நீடித்துக்கொண்டே போயிற்று. தான் மற்ற பிரஜாபதிகளுக்கு எல்லாம் தலைவன் என்ற முறையில், தக்ஷன் மிகுந்த கர்வத்துடன் நடந்துகொண்டார்.

பரமசிவனையும் அவரைச் சார்ந்தவர்களையும் அலட்சியம் செய்துவிட்டு, வாஜபேய யாகம் செய்து, அதன் பின்னர், பிருகஸ்பதி ஸவம் என்னும் மேன்மையான ஒரு யாகத்தைச் அவர் செய்யத் தொடங்கினர்.

இந்த யாகத்துக்கு தேவ ரிஷிகளும் பிரும்ம ரிஷிகளும், தேவதைகளும், தேவர்களும், தத்தம் மனைவியருடன் விஜயம் செய்தார்கள். இவர்கள் அனைவருக்கும், தக்ஷப் பிரஜாபதி, தக்கபடி மரியாதை செய்து கௌரவித்தார்.

தம் தந்தையால் யாகத்தில் உபசரிக்கப்பட்டு மகிழ்ச்சியுடன் தேவ லோகம் திரும்பும் தேவர்களின் வார்த்தைகளைச் சதி செவிமடுத்தாள்; கைலாச பர்வதத்துக்கு அருகே கந்தர்வ மாதர்கள், ஆடை அணிகலன்களால் அலங்கரித்துக்கொண்டு, தம் கணவன்மாருடன் சேர்ந்து விமானத்தில் ஏறி, தம் தந்தை தக்ஷருடைய யாகத்துக்கு செல்வதையும் சதிதேவி கண்டாள்.

இவர்களை எல்லாம் பார்த்ததும், தம் தந்தை சிறப்பாக நடத்தும் வேள்விக்குத் தானும் போக வேண்டும் என்னும் விருப்பம் சதி தேவிக்கு உண்டாயிற்று. ஆகவே, அவள் தம் கணவர் பரமசிவனிடம் சென்று, "மகாதேவரே! தங்கள் மாமனுர் தக்ஷப் பிரஜாபதி சிறந்த யாகம் ஒன்றைத் தொடங்கி இருக்கிறுர். தங்களுக்கு

விருப்பம் இருந்தால் நாமும் அந்த யாகத்துக்குப் போக லாம். என் சகோதரிகள் தத்தம் கணவன்மாருடன் அங்கே யாகத்துக்கு வந்திருப்பார்கள். ஆகவே, நானும் உம்முடன் சென்று, என் தந்தை யாகத்தில் கொடுக்கும் சன்மானத்தைப் பெற விரும்புகிறேன். என் தாயையும் சகோதரிகளையும் பார்த்து வெகு நாட்கள் ஆகிவிட்டன. என் தாயாருக்கும் என்னைப் பார்க்க வேண்டும் என்னும் விருப்பம் இருக்கும். என் தந்தை நடத்தும் இந்த யாகம் மிகவும் சிறப்பான யாகம். ஆகவே யாகத்தையும் என் உற்ருர் உறவினரையும் காண நான் பெரிதும் பிரியப் படுகிறேன். மாயையினுல் இந்தப் பிரபஞ்சமானது உமக்கு வசப்பட்டு இருப்பதால், இந்த யாகத்தைப் பார்க்க வேண்டும் என்ற அவா உமக்கு இராது; ஆயி னும் பெண்பாலான எனக்கு, பார்க்க வேண்டும் என்னும் ஆவல் மிகுதியாக இருக்கிறது. தத்துவ விசாரம் தெரி யாத நான், பிறந்த வீட்டுக்குப் போக விரும்புவது இயல்பே! நீலகண்டரே! அன்னம்போன்ற வெண்மை யான விமானங்களில் ஏறிக்கொண்டு மற்ற பெண்கள், தத்தம் கணவருடன் அந்த யாகத்துக்குப் போய்க்கொண் டிருக்கிருர்கள். ஆகவே, என் தந்தையின் இல்லத்தில் நடக்கும் யாகத்தைக் காண எனக்கு ஆசை இல்லாமல் இருக்குமா? அழைத்தாலும் அழைக்காவிட்டாலும் தந்தை, கணவன், நண்பன், குரு இவர்களின் இல்லத் துக்குச் செல்லலாம் என்பது பெரியோர் கடைப்பிடிக் கும் மரபு. என்பால் அன்பு பூண்டு, உமது தேகத் திலேயே பாதி உடம்பை நீர் எனக்குத் தரவில்லையா? அத்தகைய அன்புள்ள நீர், எனது விருப்பம் நிறைவேற அருள்புரியும். என்னை என் தந்தையின் யாகத்துக்கு அழைத்துச் செல்லும்'' என்று நயந்த முறையில் வேண் டினுள்.

பிரியமுள்ள, தன் மனைவி சதி தேவி இவ்வாறு வேண்டியதும், மகாதேவன் மர்மத்தைப் பிளக்கும் வகையில் தக்ஷப் பிரஜாபதி கூறின கொடிய வார்த்தைகளை நினைத்து மெல்லச் சிரித்துக்கொண்டார். பிறகு அவளைப் பார்த்து, "நல்லியல்புகள் வாய்ந்தவளே! அழைக்காவிடினும் உறவினர் இல்லத்துக்குப் போவது தவறு இல்லை என்று நீ கூறியது முற்றிலும் நியாயமானது. தங்களை மேம்பட்டவர்களாக கருதிக்கொண்டு, அகந்தையும் கோபமும் இல்லாது நடந்துகொள்ளும் உறவினர்கள் அழைக்காவிட்டாலும் அங்கு செல்வது பொருத்தமாய் இருக்கும். கல்வி, தவம், பணம், அழகு, இளமை, நல்ல குலம், இந்த ஆறும் சான்றோரிடம் இருக்குமாயின், அவை நன்மையைக் கொடுக்கும்; தீயோரிடம் இருக்குமாயின், அவற்றால் தீமைதான் அதிகரிக்கும்; தீயவர்கள் விவேகம் இன்றி நடந்துகொள்ளத் தலைப்படுவார்கள்; பெரியோரை அவர்களுக்கு மதிக்கத் தெரியாது; இத்தகைய மனப்பாங்கு உள்ள உறவினர்களின் இல்லத்துக்குப் போதல் கூடாது; போனால் உறவினர்களை அவர்கள் மரியாதையோடு நடத்த மாட்டார்கள். முகத்தைச் சுளித்துக்கொண்டு, தங்கள் இல்லத்துக்கு வந்திருக்கும் உறவினர்களைக் கோபத்தோடு பார்ப்பார்கள்; கோணல் புத்தியோடு அவர்கள் பேசுகின்ற பேச்சு மனத்தைப் புண்படுத்தும்; உறவினர்களின் அவமதிப்பு, பகைவர்களின் அவமதிப்பைக் காட்டிலும், அம்பினால் ஏற்படும் புண்ணைக் காட்டிலும், கொடியதாய் இருக்கும். பெண்ணே! நீ தக்ஷப் பிரஜாபதியின் மகள்; அவருக்கு மிகவும் பிரியமான மகள்; ஆயினும் என்மீது அவருக்குக் கோபம் இருப்பதால், என் மனைவியான உன்னை, தக்ஷப் பிரஜாபதி மரியாதையோடு நடத்த மாட்டார். அசுரர்கள் திருமாலைத் துவேஷிப்பதைப் போலவே, மூர்க்கர்கள்,

பெரியோர்களைத் துவேஷிக்கிறார்கள். வணங்குவது, எதிர்கொண்டு அழைப்பது, உபசார வார்த்தைகள் சொல்வது, மரியாதை செய்வது, ஆகியன வழக்கமாய் இருப்பினும், இது அஞ்ஞானிகள் கடைப்பிடிக்கும் முறை யாகும்; ஞானிகளாய் இருப்போர் அந்தர்யாமியாய் இருக்கும் இறைவனை மட்டும்தான் வணங்குவார்கள்; தேகம் முதலியவற்றுக்கு மரியாதை செய்வது அவர்களிடம் இராது. சத்துவ குணங்களால் நிறைந்த பரம்பொருளை வாசுதேவன் என்பார்கள். அவரை மனத்தால் தியானித்தால் போதும்; வாக்காலும் காயத்தாலும் வணங்கி மரியாதை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. தக்ஷன் உன் தந்தை; உனக்குத் தேகத்தைத் தந்தவன். ஆயினும் என்னை அவன் பகைப்பதால் அங்கு நீ போதல் கூடாது. ஏனெனில் சத்ர யாகம் நடந்தபோது, குற்ற மற்ற என்னை உன் தந்தை தக்ஷன் அவமதித்தான்; கௌரவமுள்ள ஒருவன், உறவினர்களால் அவமதிக்கப் படுவானாயின், அது மரணத்துக்கு ஒப்பாகும். ஆகவே, உன் தந்தை நடத்தும் யாகத்துக்கு நீ போக வேண்டாம். மீறி நீ சென்றால், அதனால் விளையும் பயன் விபரீதமாய் இருக்கும்'' என்று சொன்னார்.

''பிறந்த வீட்டுக்குப் போனாலும் இவள் உயிர் போய் விடும்; போகாமல் இருந்தாலும் உயிர் போய்விடும்'' என்ற முடிவுக்கு வந்து, மேலும் எதுவும் பேசாது சிவபெருமான் மௌனமாய் இருந்தார்.

சதி தேவிக்கோ இருப்புக் கொள்ளவில்லை. உற்றார் உறவினரைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை காரண மாக வெளியே போனாள்; கணவர் கோபித்துத் தடுத்தால் என் செய்வது எனப் பயந்து, திரும்பி வந்தாள். போவதும் வருவதுமாக இருந்து, சதி தேவி பெரிதும் சஞ்சலப் ாள். உறவினரைப் பார்க்கப் போக வேண்டாம்

என்று சிவபெருமான் தடுத்ததால் மனமுடைந்து, சதிதேவி கண்ணீரைப் பெருக்கினாள்; எரித்துவிடுபவள் போல், கோபத்துடன் அவரைப் பார்த்தாள்; பெருமூச்சு விட்டு, உடம்பெல்லாம் நடுங்கப் பொறுமினாள். தனக்குப் பாதி உடம்பு தந்து பெருமைப்படுத்தியதை ஒரு பொருட்டாக அவள் கருதவில்லை. சான்றோரின் நேசரான சிவபெருமானை விட்டுவிட்டு, பெண் புத்தியால் உந்தப் பட்டு, சதிதேவி, தன் பெற்றோரை நாடிப் புறப்பட்டுப் போனாள்.

சதிதேவி இப்படித் தனியாகச் செல்வதைப் பார்த்ததும், மணிமான், மதன் முதலிய பூத கணத்தினர் இடபத்தை நடத்திக்கொண்டு, சதிதேவிக்குப் பின்னே சென்றனர். அருகே சென்று சதிதேவியை இடபத்தில் ஏறிக்கொள்ளச் செய்து, சங்கம், துந்துபி, குழல் முதலியன முழங்க, அவளை அழைத்துப் போயினர்.

சதிதேவி தன் தந்தை தக்ஷனுடைய யாகசாலையை அடைந்தாள். வேத கோஷங்கள் முழங்கிக்கொண்டிருந்தன. பிரம்ம ரிஷிகள் பலர் அங்கே இருந்தார்கள். மண், மரம், இரும்பு, தங்கம், தர்ப்பம், தோல் ஆகியவற்றில் செய்த பாத்திரங்கள் இருந்தன.

யாகசாலைக்கு வந்த சதிதேவியை, தக்ஷனுக்குப் பயந்து, ஒருவரும் வரவேற்கவில்லை. ஆனால், தாயாரும் சகோதரிகளும் அன்பு மேலிட்டுச் சதிதேவியைக் கட்டித் தழுவிக்கொண்டு வரவேற்றார்கள்; ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கினார்கள்; ஆசனம் கொடுத்து, அவளை உட்காரச் சொன்னார்கள்.

ஆனால், தந்தை தக்ஷன் அவளை ஆதரித்து வரவேற்கவில்லை. இதனால் வருத்தமுற்ற அவள், தன் தாய், சகோதரிகள், சிற்றன்னை முதலியோர் கொடுத்த ஆசனத்தில் உட்கார

தன் கணவன் ருத்திரருக்குப் பாகம் கொடாமல் தன் தந்தை யாகம் நடத்துவதையும், அதனால் தன் தந்தை தக்ஷன், தன் கணவர் ருத்திரரை அவமதிப்பதையும் நினைத்து, சதிதேவி கடும் சீற்றம் கொண்டாள்; உலகத்தையே பொசுக்கிவிடுபவள்போல் சுற்று முற்றும் அவள் பார்த்தாள்.

தேவியின் கோபத்தைப் பார்த்ததும், அவளுடன் வந்திருந்த பூத கணங்கள், தக்ஷனைக் கொல்வதற்கு ஆயத்தமாயினர்.

"அவ்வாறு செய்ய வேண்டாம்" என்று சதிதேவி அவர்களைத் தடுத்தாள். பிறகு, கர்மம் செய்வதால் கர்வம் கொண்டிருப்பவனும், பகவானை நிந்திப்பவனுமான தக்ஷனை நோக்கி, எல்லாருடைய காதுகளிலும் விழும்படி, அடியில் வருமாறு பேசினாள் :

"எவரைக் காட்டிலும் உலகத்தில் மேலானவர் யாரும் இல்லையோ, எவருக்கு நண்பனும் பகைவனும் இல்லையோ, எவரை சகல உயிர்களும் நேசிக்கின்றனவோ, எவர் அனைத்துக்கும் காரணபூதரோ, அவரை விரோதிப்பவர், உன்னைத் தவிர்த்து, உலகில் யாரும் இலர். சான்றோர் என்போர், பிறரிடம் இருக்கும் குணங்களைப் பொருட்படுத்துவார்களே யன்றி, குற்றங்களைப் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால், உன்னைப் போன்ற மூர்க்கர்கள் குற்றத்தைப் பெரிதாகக் கருதுவார்களே யன்றி, குணத்தைப் போற்ற மாட்டார்கள். நீயோ குற்றத்தையே பெரிதாகக் கருதுகிறாய்; இறக்கும் இயல்புள்ள தேகத்தை ஆத்மா என நம்பும் மூடர்கள், பெரியோரை அவமதிக்காமல் இருக்க மாட்டார்கள். இரண்டு எழுத்துக்கள் கொண்ட "சிவ" என்னும் திவ்விய நாமத்தைப்பேச்சோடு பேச்சாக யார் சொல்லுகிறார்களோ, அவர்கள் செய்த பாவங்கள் அனைத்தும் நிவர்த்தியாகிவிடுகின்றன. அத்

தகைய பெருமைவாய்ந்த சிவபெருமானிடம் நீ பகைமை பாராட்டுகிருய். மங்களகரமான சிவபெருமானை எவன் நிந்திக்கிருனே அவனுடைய நாக்கைத் துண்டித்து எறிய வேண்டும். அதற்குத் தமக்கு ஆற்றல் இல்லையாயின், அந்த நிந்தனை காதுகளில் விழாதபடி தம் காதுகளைப் பொத்திக்கொண்டு, வெளியே போய்விட வேண்டும். அதற்கும் இயலாவிடில் இறை நிந்தையைச் செவிமடுக்காமல் உயிரை விட்டுவிட வேண்டும். சிவபெருமானை நிந்தித்த உன்னால் தரப்பட்ட எனது தேகத்தை நான் வைத்துக்கொள்ளப் பிரியப்படவில்லை. என் கணவனை நிந்தித்த உன்னோடு, சம்பந்தம் இருப்பதே எனக்கு நாணத்தை உண்டுபண்ணுகிறது. வேடிக்கையாகப் பேசும்பொழுது உன்னைச் சம்பந்தப்படுத்தி, என் கணவர் என்னை, 'தாக்ஷாயணி' என்று அழைப்பார் அவர் என்னை அழைக்கும்போதெல்லாம், துயரால் நலிவுற்று நான் வாடுவேன். ஆகவே, நீ தந்த பிணத்துக்கு ஒப்பான எனது உடலை நான் விட்டுவிடப் போகிறேன்'' என்று சொன்னுள்.

இவ்வாறு சொல்லிய பின், சதிதேவி, ஆசமனம் செய்துவிட்டு, வடக்கு நோக்கி உட்கார்ந்து, கண்களை மூடிக்கொண்டு, யோகத்தில் அமர்ந்தாள் மூச்சை அடக்கி ஒரு நிலைக்குக் கொண்டுவந்தாள். காற்று நெருப்பும் தனது உடலில் உண்டாகுமாறு தியானம் செய்தாள். கணவனுடைய திருவடிகளைத் தவிர்த்து வேறு எந்த நினைப்பும் இன்றி, நெருப்பினிடையே, அவள் பிரகாசித்தாள். தன் தந்தைமீது கொண்டுள்ள கோபத்தின் காரணமாக, தனது உயிரை சதிதேவி விட்டாள்.

இதைப் பார்த்ததும் சபையில் இருந்தவர்கள், ''ஹா! ஹா!'' என்று அலறினுர்கள். ''தக்ஷன் தீயவன்; இவனுடைய மகள் சதிதேவி கௌரவத்துக்கு உரியவள்;

அவளை அவமதித்து உயிர் இழக்கும்படி தக்ஷன் செய்தான்; அவள் உயிர் விட முயன்றபோது, தடுக்காமல் அலட்சியமாக இருந்தான்; பரமசிவனைத் துவேஷிக்கும் இவன் பிராமணர்களில் தாழ்ந்தவன்; இவன் அவகீர்த்தி அடையப் போகிறான்'' என்று சொன்னார்கள்.

சதிதேவி உயிர் துறந்ததும், கோபமுற்ற சிவபெருமானுடைய பூத கணங்கள், தக்ஷனைக் கொல்ல விரைந்தார்கள்.

இதைப் பார்த்ததும் பிருகு மகரிஷி கோபம் கொண்டார். யாக விரோதிகளை நாசம் செய்யக் கூடிய மந்திரத்தை உச்சரித்து, ஹோமம் செய்தார்.

உடனே அந்த அக்கினியிலிருந்து ருபுக்கள் என்னும் தேவர்கள் உண்டானார்கள். அவர்கள் கொள்ளிக்கட்டைகளை ஆயுதமாக எடுத்துக்கொண்டு, பூத கணங்களைத் தாக்க விரைந்தார்கள்.

அவர்களை எதிர்த்து நிற்க மாட்டாது, பூத கணங்கள் திசைதோறும் பயந்து ஓடினார்கள்.

தக்ஷனால் அவமதிக்கப்பட்டு, தம் பத்தினி சதிதேவி உயிர் துறந்ததையும், யாகத்தில் உண்டான ரிபுக்களால் தமது கணங்கள் அடித்துத் துரத்தப்பட்டதையும், நாரதர் சொல்லக் கேட்டுச் சிவபெருமான் தெரிந்து கொண்டார். கோபத்தின் காரணமாக, தமது இரு உதடுகளையும் கடித்துக்கொண்டார். மின்னல் போலும், அக்கினிக் கொழுந்து போலும் பிரகாசிக்கும் தமது சடையைத் தூக்கி, கர்ஜித்துக்கொண்டு பூமியில் அடித்தார் சிவபெருமான்.

அதிலிருந்து, சிவபெருமானின் அம்சத்தைக் கொண்ட வீரபத்திரர் உண்டானார். அவருடைய பெரிய சரீரம் ஆகாயம்வரை வியாபித்து நின்றது. ஆயிரம் [illegible] சூரியனை நிகர்த்த பிரகாசமுள்ள

மூன்று கண்கள் இருந்தன. அவருக்கு இருந்த கோரைப் பற்கள் பார்க்கப் பயங்கரத்தை உண்டாக்கின. அவருடைய தலைமயிர் நெருப்பைப்போல் பிரகாசித்தது; மண்டையோடுகளை அவர் மாலையாகப் போட்டுக்கொண்டிருந்தார். பல்வகையான ஆயுதங்களைக் கைகளில் ஏந்தி இருந்தார்.

இத்தகைய தோற்றத்துடன் விளங்கும் வீரபத்திரர் சிவபெருமானைக் கைகூப்பி வணங்கினார். "நான் தங்களுக்கு என்ன செய்ய வேண்டும்? கட்டளையிடுங்கள்" என்று கேட்டார்.

அதற்குச் சிவபெருமான், "நீ என்னுடைய அம்சம்; எனது படைகளுக்கு அதிபதி; நீ சென்று தக்ஷனையும் அவனுடைய யாகத்தையும் அழித்துவிட்டு வா" என்று உத்தரவிட்டார்.

கோபத்தோடு, சிவபெருமான் இவ்வாறு கட்டளையிட்டதும், தேவருக்குத் தேவரான அவரை வீரபத்திரர் வலம் வந்து வணங்கினார்; அவருடைய அனுக்கிரகத்தால் தம்மை அதி பலசாலியாகக் கருதிக்கொண்டார். உலகத்தை அழிக்கும் ஆற்றல் பெற்ற யமனையும் அழிக்கக்கூடிய சூலாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, காலில் அணிந்திருக்கும் வீரதண்டை ஒலிக்க, தக்ஷனுடைய யாகசாலையை நோக்கி அவர் புறப்பட்டார்.

பூதகணங்கள் முழக்கம் செய்துகொண்டு அவருக்குப் பின்னே சென்றன.

யாகசாலையிலிருக்கும் தக்ஷன், ரித்விக்குள், அந்தணர்கள், அவருடைய மனைவியர்கள் எல்லாம் வடக்குத் திசையில் தூசு உயரக் கிளம்புவதைக் கண்டார்கள். "எங்கிருந்து இந்த இருள் பரவுகிறது? காற்று வீசவில்லை; அரசன் பாதுகாப்பு இருப்பதனால் திருடர் பயம் இல்லை பசு மந்தைகளும் ஓடவில்லை. அப்படி இருக்கும்போது

இந்தத் தூசு எவ்வாறு கிளம்புகிறது ? பிரளயம் வந்து விட்டதா என்ன !'' என்று சிந்தித்தார்கள்.

"குற்றமற்ற சதியை அவமானப்படுத்தி உயிர் துறக்கச் செய்தாரே! அதன் பயனைத் தக்ஷன் அனுபவிக்கப் போகிறார் போலும்.'' என்று தக்ஷன் மனைவி பிரஸூதி முதலிய பெண்கள் மனக்கலக்கம் அடைந்தார்கள்.

பயத்தை உண்டாக்கக் கூடிய பல அபசகுனங்கள் ஆகாயத்திலும் பூமியிலும் தோன்றின.

இது சமயம் சிவபெருமானுடைய பூதகணங்கள் யாகசாலையை நான்கு புறங்களிலும் சூழ்ந்துகொண்டனர். அவர்கள் எல்லாரும் பலவிதமான ஆயுதங்களை வைத்திருந்தார்கள்; சிலர் குள்ளமாய் இருந்தார்கள் சிலர் சிவப்பு மேனியுடன் விளங்கினார்கள்; சிலர் பொன்னிறத்தில் இருந்தார்கள்; சிலருக்கு வயிறு மகர மீனைப்போல் இருந்தது; சிலருக்கு முகம் மகர மீனைப் போல இருந்தது.

சிலர் தூண்களை முறித்தார்கள்; சிலர் சபையை அழித்தார்கள்; மற்றும் சிலர் யாகசாலையையும் யாகப் பாத்திரங்களையும் நாசம் செய்தார்கள்; சிலர் நெருப்புகளை அணைத்தார்கள்; சிலர் அக்கினி குண்டங்களில் மூத்திரத்தைப் பெய்தார்கள்; சிலர் மகரிஷிகளைத் துன்புறுத்தினார்கள்; சிலர் பயந்து ஓடுகிற தேவர்களைப் பிடித்துக் கொண்டார்கள்.

மணிமான் என்பவன் பிருதுவைப் பிடித்துக் கட்டிப் போட்டான்; வீரபத்திரர் தக்ஷப் பிரஜாதிபதியைப் பிடித்துக் கட்டினார்; சண்டேசுவரர் சூரியனையும், நந்திகேசுவரர் பகன் என்பவனையும் பிடித்துக்கொண்டார்கள்.

சபையினரும் ரித்விக்குகளும் தேவர்களும் பூதகணங்களால் அடியுண்டும், தூக்கி எறியப்பட்டும்,

கற்களால் அடியுண்டும், துன்பமடைந்து சிதறியோடினார்கள்.

மீசையைக் காட்டிக்கொண்டு, சிரித்த பிருகுவின் மீசையை வீரபத்திரர் 'அருவம்' என்னும் ஆயுதத்தைக் கொண்டு பிடுங்கினார். பரமசிவனைத் தக்ஷன் நிந்தித்த போது, கண்சாடை செய்த பகனின் கண்களைப் பிடுங்கி எறிந்தார்; பற்கள் தெரியும்படி சிரித்த சூரியனுடைய பற்களை வீரபத்திரர் உடைத்தார்.

பிறகு வீரபத்திரர் தக்ஷனைக் கீழே தள்ளி, அவன் மார்பின்மீது உட்கார்ந்துகொண்டு. கத்தியால் அவனுடைய தலையைத் துண்டித்தார். ஆயினும் அந்தத் தலையை உடலைவிட்டுத் தனியே பிரித்து எடுக்க முடியவில்லை. "என்ன காரணம்?" என்று சிறிது நேரம் வீரபத்திரர் சிந்தித்தார். யாகப் பசுவைக் கொல்வது போல், கழுத்தை நெறித்து, தலையைத் திருகி, வேறாக எடுத்தார்.

பிறகு மிகுந்த கோபத்துடன் அந்தத் தலையைத் தென் மூலையில் இருக்கும் அக்கினியில் போட்டு, வீரபத்திரர் ஹோமம் செய்தார்.

அதன் பின்னர் யாகசாலையை நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டு, வீரபத்திரர் கைலாசம் திரும்பினார்.

பூதகணங்களும், பிசாசுகளும், "நல்லது நல்லது" என்று வீரபத்திரரைக் கொண்டாடின.

மற்றவர்களோ வீரபத்திரரை நிந்தித்தார்கள்.

ருத்திருருடைய படையினரால், சூலம், கத்தி, கதை, இருப்புலக்கை முதலியவற்றால் அடியுண்டும் வெட்டுண்டும் : காயமடைந்த தேவர்களும், ரித்விக்குகளும் சபையோரும் தோல்வியுற்று, பயத்தால் நடுங்கிக்கொண்டு, பிரம்ம தேவனிடம் சென்றார்கள். வணங்கிவிட்டு நடந்த விருத்தாந்தம் முழுவதையும் அவரிடம் சொன்னார்கள்.

பிரம்மாவும் பகவான் நாராயணனும், நடக்கப் போவதை முன்னரே அறிந்திருந்தமையால், தக்ஷனுடைய யாகத்துக்கு அவர்கள் இருவரும் வரவில்லை.

ஆகவே,பிரம்மா தம்மை வணங்கிய தேவர் முதலானவர்களிடம் "ஆற்றல் பெற்றவர்கள் அபராதம் செய்வார்களாயின், அதற்குப் பதில் அபராதம் செய்ய மற்றவர்கள் விரும்புவார்களாயின், அதனால் பெரும்பாலும் நலன் விளைவது இல்லை. அப்படியிருந்தும் சிவபெருமானுக்கு யக்ஞ பாகம் கொடாது நீங்கள் அபராதம் செய்துவிட்டீர்கள். அவர் எளிதில் இணங்கிப் போகும் இயல்பு படைத்தவர். ஆகவே நீங்கள் அவரிடம் சென்று அவருடைய கால்களைப் பிடித்துக்கொண்டு மன்றாடுங்கள். எவர் கோபம்கொண்டால் இந்த உலகமே நாசமடையுமோ, அவர் தம் மனைவியைப் பிரிந்து இருக்கிறார். தக்ஷன் கூறின கொடு மொழிகளைக் கேட்டு வருத்தமடைந்து இருக்கிறார். அவருடைய ஆற்றல் பெரிது; எனக்குத் தெரிந்த அளவு உங்களால் அதை அறிய முடியாது. ஆகவே,அவரிடம் சென்று வேண்டுங்கள்" என்று புத்திமதி சொன்னார்.

இவ்வாறு கூறிவிட்டு, பிரம்ம தேவர், பிரஜாபதிகள் தேவர்கள், பித்ருக்குள் ஆகியோரை அழைத்துக் கொண்டு, மலைகளில் சிறந்த மலையான கைலாச மலைக்குச் சென்றார்.

கைலாசம் என்பது திரிபுர சம்ஹாரம் செய்த சிவ பெருமானுக்குப் பிரியமான வாசஸ்தலம். பிறவியினால் சித்தியடைந்தோர், மருந்தால் சித்தியடைந்தோர், யோகத்தால் சித்தியடைந்தோர், தவத்தால் சித்தியடைந்தோர், மந்திரத்தால் சித்தியடைந்தோர் வாழும் இடம் கைலாச மலை. கின்னரர்களும் அப்சரசுகளும் எப்பொழுதும் அந்த மலையை அடுத்து வாழ்கிறார்கள்.

அந்த மலையின் கொடுமுடிகள், பல்வகையான ரத்னங்களையும், தாதுப் பொருள்களையும் தம்முள் கொண்டிருப்பவை. மரம், செடி, கொடி, பூண்டு முதலியவற்றால் நிரம்பி இருப்பவை. மலைபருவிகளும் மான்களும் அந்த மலையில் ஏராளம். அங்கே குகைகளும் தாழ்வரைகளும் உண்டு. சித்தப் பெண்கள் தத்தம் கணவன்மாருடன் களித்து விளையாட ஏற்ற இடம் அது. மயில்கள் கேகாவென்று கூவிக்கொண்டிருக்கும். தேனைப் பருகி, வண்டுகள் பாடிக்கொண்டிருக்கும். குயில்கள் கூ கூ வென்று நீட்டிக் கூவும். மற்றப் பறவைகள் ஆங்காங்கு குலாவிக்கொண்டிருக்கும்.

மந்தாரம், பவளமல்லி, சரளம், பச்சிலை, சாலம், மராமரம், பனை, மலையகத்தி, வேங்கை, மருதம், மாமரம், கடப்பை, நீர்க்கடம்பு, சிறுநாகம், புன்னை, சண்பகம், பாதிரி, அசோகம், மகிழ், குருந்தம், மருதாணி முதலிய மரங்கள் அந்த மலையில் ஏராளமாக உண்டு.

பொன்மயமான தாமரை மலர், சிறந்த ஏலக்கொடி, ஜாதி முல்லை முதலியனவும் அந்த மலையில் உண்டு.

பலா, அத்தி, அரசு, ஆல், கல்லாலை, கோங்கு, பாக்கு, நாவல், பேரீச்சை, இலுப்பை, மூங்கில், கீசக மூங்கில் முதலியனவும் அந்த மலையில் இருக்கின்றன.

ஆம்பல், நீலோத்பலம், செந்தாமரை, வெண்தாமரை முதலியன உள்ள குளங்கள் இருக்கின்றன. அவற்றில் இருந்து பறவைகள் இனிமையாகப் பாடுகின்றன.

மான், பன்றி, சிங்கம், கரடி, முள்ளம் பன்றி, சரபம், புலி, எருமை, நாய் முதலியனவும் அந்த மலையில் சஞ்சரிக்கின்றன.

அங்கிருந்துதான் கங்கா நதி உற்பத்தியாகிறது.

இத்தகைய சிறப்புகள் பல வாய்ந்த கைலாய மலையைப் பார்த்துத் தேவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள்.

அங்கே சிவபெருமான் வாசம் செய்யும் அலகை என்னும் பட்டணத்தைத் தேவர்கள் பார்த்தார்கள். அங்கே சௌகந்திக வனத்துக்குப் பக்கத்திலே, பெரிய ஆல மரம் ஒன்று இருப்பதையும் பார்த்தார்கள்.

அந்த ஆல மரம் நூறு யோசனை உயரமுள்ளது; எழுபத்தைந்து யோசனை நீளமுள்ள கிளைகளைக் கொண்டது; அடர்த்தியான நிழல் உள்ளது; வெப்பம் சிறிதும் இல்லாதது; பறவைக் கூடுகள் அந்த மரத்தில் இல்லை.

இந்த ஆலமரத்தின்கீழ் கோபமற்ற அந்தகன்போல, சிவபெருமான் வீற்றிருப்பதைத் தேவர்கள் கண்டார்கள்.

திருநீறு, யோக தண்டம், மான் தோல், சந்திரகலை முதலியவற்றை அவர் தரித்து இருந்தார். தர்ப்ப ஆசனத்தில் அமர்ந்து, நாரதருக்கும் மற்ற முனிவர்களுக்கும் பிரம்மத்தைப்பற்றி உபதேசித்துக்கொண்டிருந்தார்.

இந்த நிலையில் இருந்த பரமசிவன், பிரம்ம தேவரைப் பார்த்ததும் எழுந்து நின்று வணங்கினார். இதைப் பார்த்ததும், தேவ கணங்களும் சித்த கணங்களும் பிரம்ம தேவரை வணங்கினார்கள்.

பிறகு பிரம்மதேவர் சிரித்துக்கொண்டே பரமசிவனை நோக்கி, "பிரகிருதிக்கும் புருஷனுக்கும் மேலான பிரம்மம் நீர் என்பது எனக்குத் தெரியும். சிவனாகவும் சத்தியாகவும் இயங்கி, பட்டுப்பூச்சிபோல் இந்த உலகத்தை நீர் படைக்கிறீர்; காப்பாற்றுகிறீர்; அழிக்கிறீர். நீர் நல்ல காரியம் செய்பவர்களுக்கு, சொர்க்கத்தைக் கொடுக்கிறீர். அதே போல, தீய காரியங்களைச் செய்பவர்களுக்கு நரகத்தைக் கொடுக்கிறீர். உம்மைப் போன்ற பெரியவர்கள் கோபம் கொள்ளுதல் தகாது. அறியாமையால் உம்பால் குற்றம் செய்தவர்களை நீர் பொறுத்தருள வேண்டும். தக்ஷன் செய்த யாகத்தை நீர்

அழித்துவிட்டீர். உமக்குப் பாகம் கொடாமல் அவன் யாகம் நடத்தியபடியால்தான் நீர் அவ்வாறு செய்து இருக்கிறீர். பெரியவரான நீர் அவனிடம் அன்பு காட்டி, அந்த யாகத்தை நீர் முற்றுப்பெறச் செய்ய வேண்டும். அந்த யாகத்தைத் தொடங்கிய தக்ஷன் உயிர் பிழைக்க வேண்டும்; பகன் கண்களைப் பெற வேண்டும்; பிருகுவுக்கு மீசை உண்டாக வேண்டும்; சூரியனுக்குப் பற்கள் முளைக்க வேண்டும். காயமடைந்த தேவர்களும் ரித்துவிக்குகளும் நலத்தை அடைய வேண்டும். யாகம் செய்த பின் மிகுந்திருக்கும் அவிசு முழுதும் உமக்கே உரியதாகட்டும். ஆகவே, யாகம் முற்றுப்பெற அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினார்.

இவ்விதம் பிரம்மதேவர் வேண்டியதும், சிவபெருமான் மகிழ்ச்சி அடைந்து சிரித்தார். 'கேளுங்கள்' என்று சொல்லி, பதில் சொல்ல ஆரம்பித்தார். ''பிரஜைகளுக்கு அதிபரே! இறைவனின் மாயையால் அறிவு கெட்டு, மூர்க்கர்கள் செய்யும் அபசாரத்தை நான் மனத்தில் கொள்வதும் இல்லை; பிறரிடம் அதைச் சொல்வதும் இல்லை. ஆயினும் அவர்களை நான் தண்டித்தேன். தென் அக்கினியில் தலை எரிக்கப்பட்டுவிட்டதால் தக்ஷனுக்கு ஆட்டு முகமுள்ள தலை உண்டாகட்டும்; பகன் கண்களைப் பெறட்டும்; சூரியன் மாவைச் சாப்பிடட்டும்; தேவர்கள் முன்போலவே தேக நலம் அடையட்டும்; பிருகுவுக்கு ஆட்டுக் குட்டியின் மீசை உண்டாகட்டும்'' என்று சொன்னார்.

நல்ல இயல்புள்ள சிவபெருமான் இவ்வாறு கூறியதும், அனைவரும் மகிழ்ச்சி அடைந்து, ''நல்லது நல்லது'' என்று சொன்னார்கள். ''நீரே வந்து இந்த யாகத்தை நடத்தித் தர வேண்டும்'' என்று தேவர்கள் பரமசிவனை வேண்டினர்.

பிறகு அவரையும் பிரம்மாவையும் மற்றவர்களேயும் அழைத்துக்கொண்டு, தக்ஷனுடைய யாகசாலையை அடைந்தனர். பரமசிவன் சொன்னபடி அனைத்தையும் செய்தனர். யாகப் பசுவான ஆட்டின் தலையை எடுத்து, தக்ஷனுடைய உடலில் ஒட்டினார்கள்.

அப்போது பரமசிவன் அருள் நிறைந்த பார்வையால் தக்ஷனைப் பார்த்தார்; உடனே தக்ஷன் தூங்குபவன் விழிப்பதுபோல, உயிர்பெற்று எழுந்தான்.

பரமசிவனை அவன் பார்த்தான்; கோபத்தால் மாசுற்று இருந்த அவன் மனம், பகவானைப் பார்த்ததும், சரத் காலத்து மடுப்போல, தெளிவு பெற்றது. அதனால் பகவானைத் துதிக்க வேண்டும் என்ற விருப்பம் அவனுக்கு உண்டாயிற்று; ஆயினும் சதிதேவியின் நினைப்பு வந்து கண்கலங்கி தக்ஷன் வருந்தினான்; அதனால் உடனே தோத்திரம் செய்யும் தெம்பு அவனுக்கு ஏற்பட வில்லை. ஆயினும் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு, பிறகு அவன் தோத்திரம் செய்யலானான்: ''பகவானே! உம்மை நான் அவமதித்தேன்; அதற்குத் தக்கபடி என்னைத் தண்டித்து, எனக்கு நீர் அருள்புரிந்து இருக்கிறீர்! உம்முடைய பெருமையையும் உண்மையையும் அறியாமல், கொடும் சொற்களால் உம் மனதை நான் புண்படுத்தினேன். நான் செய்த குற்றத்தை மறந்து, என்னை நீர் காப்பாற்றினீர்'' என்று துதித்தார்.

பிறகு, அவரிடமும் பிரம்மதேவரிடமும் அனுமதி பெற்றுக்கொண்டு, யாகத்தை நடத்தத் தக்ஷன் ஏற்பாடு செய்தான்; ரித்விக்குகளையும் உபாத்தியாயர்களையும் சேர்த்துக்கொண்டு யாகத்தைத் தொடங்கினான். யாகம் முன்பு தடைப்பட்டு நின்றதற்காகச் செய்ய வேண்டிய பரிகாரம் முதலியவற்றைச் செய்த பின்னர், திருமாலை

நினைந்து, புரோடாசம் என்னும் ஹவிசை அக்கினியில் ரித்விக்குகள் ஹோமம் செய்தார்கள்.

உடனே மகாவிஷ்ணு அங்கே எழுந்தருளினர். தமது காந்தியால் சபையிலுள்ளவர்கள், கண்களைக் கூசச் செய்துகொண்டு, கருட வாகனத்தின்மீது அவர் அங்கு வந்தார்.

வந்ததும் எல்லாரும் விரைவில் கூட்டமாய் எழுந்து, கைகூப்பி வணங்கித் தோத்திரம் செய்தார்கள்.

திருமாலும் தனக்கு உரிய பாகத்தை ஏற்றுக் கொண்டு, தக்ஷனை நோக்கி அடியில் வருமாறு கூறினர்:

"நானும், பிரமனும், சிவனும் ஒன்றே; எனது முக்குணமாகிய மாயையைக் கொண்டு, படைக்கவும் காக்கவும் அழிக்கவும் வேண்டி, பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் பெயர்களை நான் அடைகிறேன். பரப்பிரம்மத் தைக் காட்டிலும் எங்கள் மூவரையும் வேருக நினைப்பவர் கள் அறிவிலிகள் ஆவர். எங்கள் மூவருக்குள் எவன் பேதத்தைக் காணவில்லையோ, அவனே சாந்தியடை வான்" என்று சொன்னர்.

இதன் பின்னர், தக்ஷன், யாகத்தை நிறைவேற்றி முடித்து, அபவிருத ஸ்நானம் செய்தான்.

"உம் மனம் தருமத்தில் நாட்டமுடையதாய் இருக் கட்டும்" என்று ஆசி கூறிவிட்டு, தேவர்கள் சொர்க்கம் திரும்பினர்கள்.

யாகத்தில் உயிர் துறந்த சதிதேவி, ஹிமாவனுடைய மனைவி மேனை என்பவளுக்கு மகளாகப் பிறந்தாள்; பரம சிவனையே பதியாக அடையும் பேறு பெற்ருள்.

இவ்வாறு தக்ஷனுடைய கதையை, விதுரருக்கு, மைத்ரேய முனிவர் சொல்லி முடித்தார்.

## துருவன் கதை

**மைத்ரேயர் சொல்லுகிறார் :**

சனகாதிகள், நாரதர், ரிபு, ஹம்ஸர், அருணி, யதி இவர்கள் பிரம்மாவின் புதல்வர்கள். ஆரம்பத்திலிருந்தே இல்லற வாழ்வை விரும்பாது பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்தபடியால் இவர்களுக்கு வம்சமே இல்லை

பிரம்மாவின் புதல்வர்களில் அதர்மன் என்பவன் ஒருவன்; அவன் மனைவியின் மிருஷை; இவர்களுக்குத் தம்பன் என்று ஒரு மகனும், மாயை என்று ஒரு பெண்ணும் பிறந்தார்கள். நிருதி என்பவருக்குக் குழந்தைகள் இல்லாதபடியால், இந்த இரு குழந்தைகளையும் வாங்கி அவர் வளர்த்து வந்தார்.

தம்பன், தன் சகோதரியான மாயையை மணந்து கொண்டான்; இந்தத் தம்பதிகள், லோபன் என்ற ஆணையும் நிக்ருதி என்ற பெண்ணையும் பெற்றார்கள்.

இந்த இருவரும் தம்பதிகள் ஆகி, குரோதம் என்ற புத்திரனையும் ஹிம்ஸை என்னும் பெண்ணையும் பெற்றார்கள்.

குரோதமும் ஹிம்ஸையும் ஒன்றுகூடி, கலி என்னும் மகனையும் துருத்தி என்னும் பெண்ணையும் பெற்றார்கள்.

துருத்தியும் கலியும் ஒன்று கூடி, யாதனை என்னும் பெண்ணையும், நிரயம் என்னும் ஆணையும் பெற்றார்கள்.

இவர்கள் அனைவரும் அதர்மம் என்னும் மரத்துக்குக் கிளைகளாய் இருப்பவர்கள்; சம்சாரத்தை மென்மேலும் வளர்ப்பவர்கள். வீடுபேற்றை விரும்புபவன் இவர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ளக் கூடாது. சந்நியாச ஆசிரமத்தை மேற்கொண்டு இருப்பவர்கள் இவர்களைச் சிறிதும் கண்ணெடுத்துப் பார்க்கக் கூடாது.

விதுரா! பிரதி ஸர்க்கம் என்பதைப்பற்றி இதுவரை உமக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இவை தீயவை என்பதைத் தெரிந்துகொண்டு ஒருவன் வாழ்க்கை நடத்தினால் மேன்மை அடையலாம்.

* * *

இதுவரை சுவாயம்புவ மனுவின் புதல்வியரின் வமிசத்தைப்பற்றிச் சொன்னேன்; இனிப் புத்திரர்களின் வமிசத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேள்

சுவாயம்புவ மனுவுக்குச் சதரூபையிடத்தில் பிரிய விரதன் உத்தானபாதன் என இரு புதல்வர்கள் பிறந்தார்கள். இந்த இருவரும் வாசுதேவருடைய அம்சமாக விளங்கி, உலகத்தைப் பாதுகாத்து வந்தார்கள்.

உத்தானபாதருக்கு சுருசி, சுநீதி என்று இரு மனைவியர் இருந்தார்கள். சுருசி என்னும் இளைய மனைவியை உத்தானபாதன் அதிகம் நேசித்தான். துருவனின் தாய் சுநீதியை அவன் நேசிக்கவில்லை.

ஒரு சமயம் அரசன் உத்தானபாதன், சுருசியின் புதல்வன் உத்தமனைத் தன் மடிமீது வைத்துக் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்தான்.

அப்போது சுநீதியின் புதல்வன் துருவன் அங்கே வந்தான். தானும் தன் தந்தை மடிமீது இருக்கப் பிரியம் கொண்டு, தந்தை அருகே போனான் துருவன்.

அதற்கு உத்தானபாதன் இடம் கொடுக்கவில்லை.

துருவனின் நடத்தையைக் கவனித்த சுருசி, கர்வ மிக்கவளாகி, துருவனைப் பார்த்துக் கடிந்து பேசத் தொடங்கினாள்; அவள் பேசியதை அரசனும் கேட்டுக் கொண்டு இருந்தான்.

"குழந்தாய்! என் வயிற்றில் பிறக்காத காரணத்தால், அரசருக்குப் பிறந்தவனாய் இருந்தும்கூட, அரசன் என்னும் பதவியைப் பெற உனக்கு அருகதை கிடை

யாது. நீ சிறுவன்; வேறு ஒரு பெண் வயிற்றில் பிறந்தவன். அத்தகைய நீ அடைய முடியாத ஒன்றை அடைய ஆசைப்படுகிறாய். அரச சிம்மாதனம் வேண்டும் என்ற விருப்பம் உனக்கு இருக்குமாயின், அதற்கு நீ என் வயிற்றில் பிறக்க வேண்டும். ஆகவே, மறு ஜன்மத்திலாவது என் வயிற்றில் பிறக்க வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை நீ வேண்டிக்கொள்'' என்று சொன்னாள்.

தன் சிற்றன்னை கூறின இந்தச் சொற்களைச் செவிமடுத்த துருவன், தடியால் மொத்துண்ட பாம்புபோல் பெருமூச் செறிந்தான்; தன் தந்தை மௌனமாய் இருப்பதைப் பார்த்து, அழுதுகொண்டே தன் தாயிடம் போனான்.

உதடு துடிக்கப் பெருமூச்செறிந்து அழுதுகொண்டு வரும் தன் புதல்வன் துருவனை, அவன் தாய் சுநீதி, வாஞ்சையோடு தூக்கி மடியில் வைத்துக்கொண்டாள்.

அந்தப்புரத்தில் இருப்பவர்கள் அவள் சக்களத்தி சொன்ன கொடும் சொற்களைச் சுநீதியிடம் சொன்னார்கள்.

காட்டுத் தீயில் அகப்பட்ட கொடிபோல, சுநீதி துயரத்தால் வெதும்பி அழுது புலம்பினாள். தாமரை மலரை நிகர்த்த தம் இரு கண்களிலிருந்தும் கண்ணீரை மளமள வென்று கொட்டினாள். பெருமூச்சு விட்டுக்கொண்டே துயரக் கடலில் மூழ்கி இருந்த அவள், தன் புதல்வன் துருவனுக்கு ஆறுதல் சொன்னாள்; "குழந்தாய்! பிறர் குற்றம் செய்துவிட்டதாக நீ கொள்ளாதே; பிறருக்குத் துக்கம் விளைவிப்பவன் தானும் துக்கத்திலிருந்து தப்ப முடியாது. சுருசி சொன்னது உண்மை. அதிர்ஷ்டமில்லாத என் வயிற்றில் நீ பிறந்தாய்; நான் ஊட்டிய பாலைக் குடித்து வளர்ந்தாய்; உன் தந்தை,

அரசராய் இருப்பவர், என்னைத் தம் மனைவி என்று கூறிக்கொள்ள நாணப்படுகிறார். அரச பதவியை அடைய நீ பிரியப்பட்டால், அதற்கு, நீ திருமாலைத் தியானிக்க வேண்டும். நாராயணனை மனத்தாலும் வாக்காலும் பூசித்துத்தான், பிரம்ம தேவர் பிரம்ம பதவியைப் பெற்றார்; உன் பாட்டனார் சுவாயம்புவ மனுவும், அவரை ஆராதனை செய்தே, அரச பதவியைப் பெற்றார். மன வடக்கமுடைய பெரியோரும் நாராயணனின் திருவடித் தாமரைகளையே வணங்குகிறார்கள். நாராயணனைச் சரண் அடைந்தால், சொர்க்க சுகத்தையும் அடையலாம்; மோட்ச சுகத்தையும் அடையலாம்; ஆகையால், குழந்தாய்! தூய மனத்தோடு, பகவானை நீ தியானம் செய். உன்னைக் காப்பதற்கு அவரைக் காட்டிலும் சிறந்தவர் யாரும் இல்லை" என்று புத்திமதி சொன்னாள்.

தாயார் சொன்ன நன்மை பயக்கும் இந்த வார்த்தைகளைச் செவிமடுத்த துருவன், மனத்தை அடக்கிக் கொண்டு, தைரியமுற்று, தந்தையின் நகரத்தை விட்டுப் புறப்பட்டான்.

துருவனுடைய மனநிலையை நன்கு தெரிந்து கொண்ட நாரதர், அதிக ஆச்சரியத்தில் மூழ்கினார்; பாவங்களைப் போக்கக் கூடிய தமது கைகளால் துருவனுடைய தலையைத் தொட்டார். "க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர்கள் பிறர் செய்யும் அவமரியாதையைப் பொறுக்க மாட்டார்கள்; சிறுவனாய் இருந்தும் மாற்றாந் தாயின் கொடுஞ்சொற்களைத் துருவன் பொறுமையுடன் சகித்துக்கொண்டது ஆச்சரியம்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டார். பிறகு துருவனை நோக்கி, "குழந்தாய்! சுகம் நிறைந்த அரண்மனை வாழ்வைவிட்டு, தனியே நீ செல்லக் காரணம் என்ன? உறவினர் செய்த

அவமதிப்பால் நீ வருத்தமுற்று இருப்பதுபோல் தோன்றுகிறதே?" என்று கேட்டார்.

அதற்குத் துருவன், "முனிவர் பிரானே! என் மனத்தில் இருப்பதைத் தாங்கள் எப்படித் தெரிந்துகொண்டீர்கள்? தியானத்தாலா? அல்லது யோகத்தாலா? என் சிற்றன்னை கூறின கொடுஞ் சொற்களைப் பொறுக்க முடியாமல் நான் வெளியே போகிறேன்" என்று பதில் சொன்னான்.

இதைக் கேட்ட நாரதர் துருவனிடம், "குழந்தாய்! மானம் அவமானம் என்பதை அறியக் கூடிய வயது உனக்கு இன்னும் வரவில்லை. பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாட வேண்டிய பருவம் இது. மானம் அவமானம் என்பதை அறியும் திறன் இருப்பினும், அறியாமையால் மக்கள் துக்கத்தை அடைகிறார்கள். மானமும் அவமானமும் அவரவர் செய்யும் செய்கையாலே ஏற்படுகின்றன. தெய்வம் அனுகூலம் செய்யாவிடில், மனிதன் செய்யும் முயற்சிகள் பலனை அளிப்பது இல்லை. இதைத் தெரிந்துகொண்டு, தெய்வச் செயலால் கிடைப்பதைப் பெற்று மகிழ்ச்சி அடைய வேண்டும். எவருடைய ஆதரவைப் பெற நீ விரும்புகிறாயோ, அவரை ஆராதனை செய்வது சிரமமான காரியம். யோகம் செய்தும், பற்றுகளை அறுத்தும், பல பிறவிகளில் தொடர்ந்து பகவானை ஆராதனை செய்து வந்தும், அவருடைய பாதார விந்தத்தை முனிவர்கள்கூடக் கண்டது இல்லை. ஆகவே பயன் கிட்டாத காரியத்தில் பிடிவாதமாய் இராதே; தக்க காலம் வந்ததும் இத்தகைய முயற்சியில் ஈடுபடலாம். தெய்வாதீனத்தால், அந்த அந்தக் காலங்களில் சுகத்தையோ துக்கத்தையோ மாந்தர்கள் அனுபவிக்கிறார்கள். சுகத்தை அனுபவித்தால் புண்ணியம் குறைகிறது என்றும், துக்கத்தை அனுபவித்தால்

பாவம் குறைகிறது என்றும் தெரிந்து வாழ்க்கை நடத்துகிறவன், வீடுபேற்றை அடைவான். தன்னைக் காட்டிலும் மேலான குணங்கள் கொண்டவனைக் கண்டால் பொறாமைப்படக் கூடாது; தன்னைக் காட்டிலும் தாழ்ந்தவனை அலட்சியமாய் நடத்தக் கூடாது; சம நிலையில் இருப்பவனோடு, பகைமை பாராட்டக் கூடாது. இப்படி வாழ்க்கை நடத்துபவனை, சுக துக்கங்கள் பாதிக்க மாட்டா'' என்று கூறினார்.

நாரத முனிவர் இவ்வாறு கூறியதும், துருவன் அவரைப் பார்த்து, "முனிபுங்கவரே! சுகத்தாலும் துக்கத்தாலும் வாட்டமுறும் மாந்தரின் மனது சாந்தி அடையும் மார்க்கத்தைத் தாங்கள் இப்பொழுது உபதேசித்தீர்கள். என்னைப் போன்றவர்களுக்கு இந்த மார்க்கம் சரிப்பட்டு வராது, நான் க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவனாதலால், என் சிற்றன்னை சுருசி கூறிய கொடுஞ் சொற்கள் என் நெஞ்சைப் பிளக்கின்றன. ஆகையால், தாங்கள் செய்த இந்த உபதேசம் என் மனத்தில் பதியவில்லை. ஆகவே, என் முன்னோர்களும் மற்றையோரும் மூவுலகங்களிலும் அடைய முடியாத ஒரு பதவியை நான் பெற ஆசைப்படுகிறேன். கிருபை கூர்ந்து அதற்கு உரிய மார்க்கத்தைத் தாங்கள் எனக்கு உபதேசிக்க வேண்டும். தாங்கள் பிரம்மாவின் புதல்வராய் இருப்பதால், உரிய வழியைத் தங்களால் எனக்குக் காட்ட முடியும்'' என்று வேண்டினான்.

துருவனின் விருப்பத்தை அறிந்த நாரதர் அவன் மீது பரிவுகொண்டார். பின்வரும் பதிலைத் துருவனுக்கு அவர் சொன்னார் :

"குழந்தாய்! உன் தாய் சுநீதி உனக்கு உபதேசித்த மார்க்கமே உனக்கு நன்மையைக் கொடுக்கும். வாசுதேவனே பகவான். மனத்தை அவரிடம் செலுத்தி,

அவரை நீ தியானிப்பாயாக! அறம், பொருள், இன்பம், வீடு இந்த நான்கு பேறுகளையும் அடைய விரும்புபவன், பகவான் நாராயணன் திருவடித் தாமரைகளைத் தியானிப்பது அவசியம் ஆகும்.

"யமுனை நதிக் கரையில் மதுவனம் என்று ஒரு புண்ணிய பூமி இருக்கிறது; பகவானுடைய சாந்நித்தியம் எப்பொழுதும் இருக்கும் இடம் அது. அங்கு சென்று மூன்று காலம் யமுனையில் நீராடி, தேவதைகளை வணங்கிவிட்டு, தர்ப்பை ஆசனத்தில் அமர்ந்து, பிராணாயாமத்தால் மனத்திலுள்ள மாசுகளைப் போக்கிக்கொள்ள வேண்டும்; அதன் பின்னர், ஊக்கத்துடன் நாராயணனைத் தியானிக்க வேண்டும். தியானிக்கத் தியானிக்க, பகவானுடைய மங்களகரமான வடிவம் மனதில் நன்கு பதிந்துவிடும். அதற்காக ஜெபிக்கக் கூடிய மந்திரம் ஒன்று உண்டு; மிகவும் ரகசியமான அந்த மந்திரத்தை ஏழு நாட்கள் ஜெபித்தால் தேவர்களை நேரில் நீ தரிசிக்கலாம். அந்த மந்திரத்தை உனக்கு நான் உபதேசிக்கிறேன்:

**"ஓம் நமோ பகவதே வாசுதேவாய."**

"இதுதான் மந்திரம். இதைத் துருவனுக்கு நாரதர் உபதேசித்தார்.

"இந்த மந்திரத்தை ஜெபித்து, காலம், இடம், தேசம் இவற்றுக்குத் தகுந்தபடி, மலர், கனி முதலியவற்றால் பகவானைத் தியானிக்க வேண்டும். மனம், வாக்கு, காயம் இந்த மூன்றினாலும் இறைவனை வணங்க வேண்டும். காட்டில் கிடைக்கும் கிழங்கு முதலியவற்றைச் சிறிது உண்டு, பகவானுடைய பெருமை பற்றிய கதைகளைச் செவிமடுக்க வேண்டும். இப்படி வைராக்கியத்துடன் பகவானைத் தியானித்து வந்தால், அறம்,

பொருள், இன்பம் இந்த மூன்றினுள் எதைப் பக்தன் விரும்புகிருனே, அதைப் பகவான் அவனுக்குக் கொடுக்கிருர். மேலும் பக்தி வைராக்கியத்தில் மனத்தைச் செலுத்தி வந்தால் வீடுபேற்றையும் கொடுக்கிருர்'' என்று சொன்னுர்.

இதைக் கேட்ட துருவன் நாரதரை வலம் வந்து வணங்கி விடை பெற்றுக்கொண்டு, புண்ணிய தலமான மதுவனத்துக்குப் புறப்பட்டான்.

துருவன் சென்ற பின்பு, நாரதர் உத்தானபாதனுடைய அந்தப்புரத்துக்குப் போனுர்.

நாரதரைக் கண்டதும், அரசன் வரவேற்று உபசரித்து, ஆசனம் கொடுத்து உட்காரும்படி வேண்டினுன்.

அமர்ந்த பின்பு, நாரதர் அவனை நோக்கி, ''அரசே! உன் மனம் வாட்டம் அடைந்து இருக்கிறதே ஏன்? அறம், பொருள், இன்பம் ஆகிய இவற்றில் ஏதாவது குறைவு நேர்ந்திருக்கிறதா?'' என்று கேட்டார்.

அதற்கு உத்தானபாதன் நாரதரிடம், ''அந்தணரே! பெண்களிடம் மயக்குண்டு, நான் கருணையற்றவன் ஆகிவிட்டேன். ஐந்து வயதுள்ள என் புதல்வன் துருவனையும் அவன் தாயையும் நகரைவிட்டு விரட்டிவிட்டேன். காட்டுக்குச் சென்று கடும் பசியால் வாடி, என் மகன் களைத்துப் போய் இருப்பானே என்னவோ! களைப்புற்றுப் படுத்து இருக்கும் அவனைச் செந்நாய்கள் தின்றுவிடுமே! என் மடிமீது அன்போடு உட்கார வந்த குழந்தையை, புறக்கணித்துப் பேசினேனே! என்னே என் மடமை! என்னே என் தீய நடத்தை!'' என்று வருந்

அதற்கு நாரதர் அரசனை நோக்கி, ''அரசே! உன் மைந்தன் துருவனைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அவனைத் தேவர்கள் காப்பாற்றுவார்கள். அவனுடைய

பெருமையை நீ அறிய மாட்டாய். அவனுடைய புகழ் உலகம் முழுதும் பரவப் போகிறது. உலக பாலகர்களாலும் செய்ய முடியாத செயலைச் செய்து, அதனால் உனது கீர்த்தியைப் பெரிதாக்கி, உன்னிடம் அவன் வந்து சேருவான்" என்று சொன்னார்.

நாரதர் சொன்னதில் அரசன் உத்தானபாதனுக்கு நம்பிக்கை பிறந்ததாயினும், தன் புதல்வனைப் பிரிந்த கவலை அவன் நெஞ்சைவிட்டு நீங்கவில்லை; ஆகவே, அரச போகங்களில் அவனுடைய நாட்டம் செல்லவில்லை.

நாரதர் சொன்னபடி துருவன் மதுவனத்தை அடைந்தான். யமுனை ஆற்றில் இறங்கி நீராடிவிட்டு, அன்று இரவு முழுதும் உபவாசம் இருந்து, சுத்தனாகி, நாரதர் உபதேசித்தபடி நாராயணனைத் தியானித்தான். மூன்று தினங்களுக்கு ஒரு முறை தனது தேகநிலைக்குத் தக்கபடி, விளாம் பழத்தையும் இலந்தைப் பழங்களையும் சாப்பிட்டுக்கொண்டு, பகவான் நாராயணனை, ஒரு மாதம் வரை பூசை செய்து வந்தான்.

அதன் பின்னர், ஆறு தினங்களுக்கு ஒரு முறை காய்ந்த புல், சருகு இவற்றை மட்டும் உண்டு, ஒரு மாதம் வரை பகவானைத் தியானித்தான். இப்படி இரண்டாவது மாதம் கழிந்தது.

பிறகு மூன்றாவது மாதத் தொடக்கத்திலிருந்து, ஒன்பது தினங்களுக்கு ஒரு முறை நீரை மட்டும் பருகி, இறைவனை வழிபட்டு வந்தான். கொஞ்ச நேரத்தைக் கழிப்பது போல, இந்த மூன்றாவது மாதத்தைத் துருவன் இறை வழிபாட்டில் கழித்தான்.

நான்காவது மாதம் தொடங்கியதும், பன்னிரு தினங்களுக்கு ஒரு முறை காற்றை மட்டும் உட்கொண்டு

மூச்சை அடக்கித் தியானம் செய்து இறைவனை பூசித்தான் துருவன்.

ஐந்தாவது மாதத் தொடக்கத்திலிருந்து, மூச்சை அடக்கி, கட்டைபோல் அசையாது, ஒற்றைக் காலால் நின்று, இறைவனைத் தியானித்தான் துருவன். ஒரு நிலைப்படுத்தி, தியானத்தில் ஆழ்ந்து, பகவான் நினைப்பாகவே இருந்ததால், பகவானைத் தவிர்த்து வேறு எதற்கும் துருவன் மனத்தில் இடம் இல்லாமல் போயிற்று.

துருவன் செய்த தவத்தின் வேகம் தாங்க முடியாமல் மூன்று உலகங்களும் நடுங்கின. தேவர்கள் மூச்சு விட முடியாமல் திணறினார்கள். இதனால் இந்திரனை முன்னிட்டுக்கொண்டு, லோக பாலகர்கள், திருமாலிடம் போனார்கள். ''பகவானே! தாவர சங்கமங்கள் அனைத்தும் மூச்சுவிட முடியாமல் திணறுகின்றன. இத்தகைய ஒரு நிலை ஏற்பட்டதை நாங்கள் கண்டதில்லை. இந்தத் துயரத்திலிருந்து எங்களைத் தாங்கள் காப்பாற்ற வேண்டும். அதன் பொருட்டு, சரண் அடையத்தக்க உம்மை நாங்கள் சரண் அடைகிறோம்'' என்று சொன்னார்கள்.

தேவர்கள் இவ்வாறு சொன்னதும், பகவான் அவர்களிடம், 'தேவர்களே! அரசன் உத்தானபாதனுடைய புதல்வன் என்னைக் குறித்துத் தவம் செய்வதால்தான் இந்த நிலை ஏற்பட்டு உள்ளது. நான் சென்று, தவத்தை நிறுத்தும்படி, அவனிடம் சொல்லுகிறேன். நீங்கள் திரும்புங்கள்'' என்று சொன்னார்.

பயம் நீங்கித் தேவர்கள் பகவானை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, சொர்க்கம் திரும்பினார்கள்.

இதன் பின்னர், பகவான் கருடன்மீது ஏறிக்கொண்டு, தம் பக்தன் துருவன் தவம் செய்யும் மதுவனத்துக்கு வந்தார்.

இது சமயம் துருவன் தனது இதயத் தாமரையில் பிரகாசிக்கும் பகவானுடைய சொரூபத்தைத் தரிசித்து, யோகத்தில் அமர்ந்து இருந்தான்.

பகவான் அங்கே வந்ததும், தம் இதயத்திலே பிரகாசித்த இறைவனின் வடிவத்தைத் துருவன் காண வில்லை. ஆகவே, துணுக்குற்றுக் கண்களைத் திறந்து பார்த்தான் துருவன்.

என்ன ஆச்சரியம்! சாட்சாத் பகவானே தன் எதிரே நிற்பதைத் துருவன் கண்டான். உள்ளமும் உடலும் புளகாங்கித மடைய, துருவன் தரையில் வீழ்ந்து, பக வானை வணங்கினன். பிறகு எழுந்து நின்று, அவரைத் தோத்திரம் செய்யத் துருவன் விரும்பினன். பகவா னுடைய பெருமைகளையும் அவருடைய அரிய குணங் களையும் அறியாதவனுகையால், துருவனுல் தோத்திரம் செய்ய முடியவில்லை, கைகளைக் கூப்பிக்கொண்டு மௌனமாக நின்றுன்.

துருவனுடைய மனநிலையை அறிந்த பகவான், மறையாய் நிகர்த்த தமது சங்கத்தால், துருவனின் கன் னத்தைத் தொட்டார்.

அதனுல் துருவனுக்கு, பரமாத்மா, ஜீவாத்மா ஆகிய வற்றின் நிலை தெரிந்து, பக்தியோடு, பகவானைத் தோத் திரம் செய்யத் தொடங்கினுன் :

"பகவானே! உம்மை நான் வணங்குகிறேன். பிறப்பு இறப்பு என்னும் துக்கத்திலிருந்து பக்தர்களை நீர் காப்பாற்றுகிறீர்; வீடுபேற்றைக் கொடுப்பவரும் நீரே; அனைத்தையும் அளிக்கும் ஆற்றல் பெற்ற உம்மிடம் மாந்தர்கள், சிறு சிறு விண்ணப்பங்களைச் செய்வது, நீர் புரியும் மாயை என்னும் விந்தையா? பிணத்துக்கு ஒப்பான இந்த உடலைப் பேண விரும்பி, கற்பக விருட் சம் போன்ற உம்மை மக்கள் பூசிப்பது எவ்வளவு

பேதமை! பெரியோர்களின் கூட்டுறவினால், உமது புண்ணிய கதையை மாந்தி மாந்தி, துக்க பயமான இந்தப் பிறவிப் பெருங்கடலை நான் நீந்திவிடுவேன. உமது ஸ்தூல சரீரத்தை நான் அறிகிறேனே யன்றி, உமது சூட்சும சரீரத்தை என்னால் அறிய முடியவில்லை. நீரே முக்தர்; அனைத்தையும் அறிந்தவர்; அனைத்துக்கும் ஆதியாய் இருப்பவர்; மாறுதல் இல்லாதவர்; பசு, தன் கன்றுக்குப் பால் கொடுத்துக் காப்பதுபோல, எங்களை நீர் கருணையுடன் காப்பாற்றுகிறீர்'' என்று தோத்திரம் செய்தான்.

துருவன் செய்த தோத்திரத்தைச் செவிமடுத்த பகவான் களிப்புற்று, அடியில் வரும் பதிலைச் சொன்னார்:

''அரச குமாரனே! நீ நலமடைவாய்; எந்த நோக்குடன் நீ தவம் செய்யத் தொடங்கினாய் என்பதை நான் அறிவேன். பிறரால் அறியப்படாத அழிவில்லாத பிரகாசமுள்ள ஒரு ஸ்தானத்தை உனக்கு நான் கொடுக்கிறேன். சப்த ரிஷிகள், நட்சத்திரங்கள் சுற்றக் கூடியதும், மூவுலகம் அழிந்தாலும் அழியாத தன்மையுடையதுமான, துருவ பதவியை உனக்கு நான் கொடுக்கிறேன். உன் தந்தை உத்தானபாதன் உனக்கு ராஜ்யத்தைத் தந்துவிட்டுக் கானகம் செல்வான்; இருபத்தாறாயிரம் ஆண்டுகள் இந்த நாட்டை நீ பரிபாலிப்பாய்; வேட்டைக்குச் செல்லும்போது உன் சகோதரன் உத்தமன் காணாமல் போய்விடுவான்; அவனைத் தேடிக்கொண்டு காட்டுக்குச் சென்று, தீயில் சிக்குண்டு அவனுடைய தாய் மரணமடைவாள். வேள்விகள் பல இயற்றி என்னை ஆராதிப்பாய; இந்த உலகின் சுகங்களை அனுபவித்து, பிறகு, நீ என்னைச் சிந்திப்பாய். அப்போது சப்தரிஷிகளுக்கும் மேலான துருவ பதவி உனக்குக் கிட்டும்'' என்று சொன்னார்.

இவ்வாறு சிறுவன் துருவனுக்கு அருள் செய்து விட்டு, பகவான் தமது இருக்கை திரும்பினார்.

"துருவனும் திருமாலைத் தரிசித்து, தன் விருப்பம் கைகூடப் பெறினும் அதிகக் களிப்பில்லாதவனாகி, தமது நகரம் திரும்பினான்" என்று மைத்ரேயரிஷி சொன்னார்.

அதைக் கேட்ட விதுரர், "பிறருக்குக் கிட்டாத பதவி தனக்குக் கிட்டி இருந்தும், பகவானை நேரில் தரிசிக்கும் பேறு பெற்றும், துருவன் ஏன் களிப்பு இல்லாதவராகச் சென்றார்?" என்று கேட்டார்.

"மாற்றாந் தாயின் கொடும் சொற்களால் மன முடைந்து இருந்த துருவன், வீடுபேற்றைக் கொடுக்கும் பரந்தாமனைத் தரிசிக்கும் பேறு பெற்றும், வீடுபேற்றை அவரிடம் தான் கேட்காமல் ஏமாந்து போனது குறித்து வருத்தமடைந்தான். பெரிய பெரிய மக ரிஷிகள் எல்லாரும் பெரும் தவமிருந்து பகவானின் திருவடிகளைக் காண முடியவில்லையோ, அத்தகைய திருவடிகளை ஆறு மாத காலத்தில் தரிசிக்கும் பேறு பெற்றேன். அத்தகைய பெரும் பேறு எனக்குக் கிட்டியிருந்தும் அநித்திய மான அற்ப சுகத்தை அவரிடம் நான் வேண்டினேன். அதனால் ஆயுள் இல்லாதவனுக்குச் செய்யும் மருத்துவம் போலவும், அரசனை அணுகிய தரித்திரன், செம்பு நிறைய அரிசி யாசகம் கேட்பது போலவும், என் தவம் வியர்த்தமாகிவிட்டது என்று வருந்தினான் துருவன்" என்று மைத்ரேயர் பதில் சொன்னார்.

துருவன், திரும்பி வருகிறான் என்று கேள்வியுற்றதும், முதலில் அரசன் உத்தானபாதன் அதை நம்ப வில்லை. 'இறந்தவன் பிறப்பது உண்டா? என்னைப் போன்ற அதிர்ஷ்ட வீனனுக்கு இத்தகைய நன்மையும் நேருவது உண்டா?' என்ற சந்தேகம் அவனுக்கு உண்டா

யிற்று. ஆயினும், தேவ ரிஷியான நாரதர் சொன்ன வார்த்தைகள்-உன் புதல்வன் துருவன் திரும்பி வருவான் என்பது - நினைவுக்கு வந்ததும், உண்மையாக இருக்கக் கூடும் என நினைத்து, இந்த நற்செய்தியைச் சொன்னவனுக்கு விலையுயர்ந்த முத்து மாலை ஒன்றை வெகுமதி அளித்தான் உத்தானபாதன்.

பிறகு, பொன்மயமான தேரில் ஏறிக்கொண்டும், அந்தணர்கள் மந்திரிகள் முதலியவர்களை அழைத்துக் கொண்டு, வாத்தியங்கள் முழங்க, தன் மைந்தன் துருவனை எதிர்கொண்டு வரவேற்கப் பட்டணத்திலிருந்து புறப்பட்டான். சுநீதி, சுருசி, உத்தமன் முதலியோர் பல்லக்கில் ஏறிக்கொண்டு புறப்பட்டார்கள்.

நகரத்துக்கு அண்மையில் இருக்கும் ஒரு பூஞ்சோலையில் துருவன் வந்துகொண்டிருப்பதைப் பார்த்ததும், தேரைவிட்டு விரைவில் இறங்கி, ஆனந்த பரவசத்துடன் சென்று, மைந்தன் துருவனை அரசன் வாஞ்சையோடு கட்டித் தழுவிக்கொண்டான். உச்சிமோந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான்.

உடனே, துருவன் தன் தந்தையை வணங்கினான். அதன் பின்னர், தாய்மார் இருவரையும் வணங்கினான்.

சுருசி, தன்னை வணங்கிய துருவனைக் கட்டித் தழுவிக்கொண்டு "நீடித்த காலம் வாழ்ந்து இரு!" என்று ஆசி சொன்னாள்.

ஆண்டவனின் அருள் பெற்றவர்களுக்கு எதுவும் அரிதில்லை என்பதை அறிவிப்பதுபோல் இருந்தது சுருசியின் நடத்தை.

பிறகு உத்தமனும் துருவனும் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

துருவனுடைய தாய் சுநீதி, தன் மைந்தனைத் தழுவிக்கொண்டு பரவசம் அடைந்தாள்; கவலையை

வந்திருந்த மற்ற மாந்தர்களும் துருவனைப் பாராட்டிப் பேசினார்கள்; அவனைப் பெரிதும் கொண்டாடினார்கள்.

பிறகு துருவனையும் உத்தமனையும் யானைமீது ஏற்றி வைத்துக்கொண்டு, அரசன் உத்தானபாதன் நகரம் திரும்பினான்.

நகரத்தில் இருக்கும் ஒவ்வொரு வீடும் நன்கு அலங்கரிக்கப்பட்டு இருந்தது; பாக்கு மரம், வாழை மரம், தோரணம் முதலியன கட்டி வீடுகளை அலங்கரித்து இருந்தார்கள்; வீடுதோறும் பூரண கும்பம் இருந்தது. வீதிகள் எல்லாம் குப்பை முதலியன இன்றிச் சுத்தம் செய்து, நீர் தெளிக்கப்பட்டு இருந்தன. சந்தனம், பொரி, அட்சதை முதலியவற்றால் அழகுபடுத்தப்பட்டு இருந்தன.

ஊருக்குள் வந்ததும், கற்புடைய மாதர்கள் முறைப்படி துருவனுக்கு ஆசி சொன்னார்கள்.

இவ்வாறு பலராலும் போற்றப்பட்டு, துருவன் தன் தந்தையின் அரண்மனையை அடைந்தான். அங்கே, சொர்க்கத்தில் தேவன் வசிப்பதுபோல், சுகமாக வசித்தான்.

தவம் செய்து, தன் புதல்வன் பெற்று இருக்கும் வரம்பற்றித் தெரிந்துகொண்டு அரசன் மகிழ்ச்சி அடைந்தான். சில காலம் கழிந்தது. ராஜ்யபாரம் செய்யும் வயதைத் துருவன் அடைந்தான்.

பிறகு தம் மைந்தன் துருவனுக்கு அரச பாரத்தைக் கொடுத்துவிட்டு, தவ வாழ்வை மேற்கொள்ள அரசன் உத்தானபாதன் கானகம் சென்றுவிட்டான்.

துருவன், பிரமி என்பவளையும் இளை என்பவளையும் திருமணம் செய்துகொண்டான் பிரமிக்கு வத்ஸரன், கல்பன் என்று இரு குமாரர்கள் பிறந்தார்கள்.

இளை என்பவளுக்கு உத்கலன் என்னும் மகனும்

இதன் பின்னர் துருவனின் சகோதரன், சுருசி புதல்வன் உத்தமன் என்பவன், இமயமலைச் சாரலுக்கு வேட்டையாடச் சென்றான். அப்போது அவனை யக்ஷின் ஒருவன் கொன்றுவிட்டான். அதன் பயனாய், உத்தமனின் தாய் சுருசி சோகமுற்று இறந்து போனாள்.

தன் சகோதரன் யக்ஷனால் கொல்லப்பட்டான் என்பதை அறிந்து, துருவன் துயரமடைந்தான். பிறகு கோபம்கொண்டு, தேர்மீது ஏறி, யக்ஷர்கள் வாழும் அளகாபுரிக்குப் புறப்பட்டான்.

வடக்குத் திக்கில் இருக்கும் இமய மலைச் சாரலை அவன் அடைந்தான். அங்கே அரக்கர்களும் குகயர்களும் வசிக்கிறார்கள்.

அங்கு சென்றதும், தமது சங்கத்தை எடுத்துத் துருவன் ஊதினான். அதன் ஒலியைக் கேட்டதும், யக்ஷ குலப் பெண்கள் பயந்து போனார்கள். யக்ஷ வீரர்களோ ஆயுதங்களை எடுத்துக்கொண்டு வெளியே ஓடிவந்தார்கள். துருவன் அவர்களை மூன்று பாணங்களினால் அடித்தான்; பதிலுக்கு யக்ஷர்கள் துருவனை ஆறு பாணங்களால் அடித்தார்கள். லட்சக் கணக்கான யக்ஷ வீரர்கள் அம்புமாரி பெய்து, துருவனை மறைத்து விட்டார்கள். ஆயினும் அவற்றைச் சமாளித்து, பனிப் படலத்தைக் கிழித்துக்கொண்டு கதிரவன் வெளிப்படுவது போல, துருவன் வெளிப்பட்டான். பிறகு, திறமையாகப் பாணங்களைத் தொடுத்து, யக்ஷர்களைத் துருவன் தாக்கினான்; அதனால் போர்க்களத்தில் தலைகளும் தோள்களும் தொடைகளும் தலைப்பாகைகளும் மாலைகளும் அறுப்புண்டு கீழே விழுந்தன. எனவே, தாக்குப் பிடிக்க முடியாமல், அறுப்புண்ட அவயவங்களுடன், சிங்கத்தால் துரத்தப்படும் யானைகள் போல, யக்ஷர்கள் ஓட்டம் பிடித்தார்கள். துருவனை எதிர்ப்

போர் ஒருவரையும் காணேம். ஆகவே, யக்ஷர்களின் பட்டணமான அளகாபுரியைப் பார்க்க, துருவன் விரும் பினன். ஆயினும் பகைவர்கள் மாயாவிகள் என்ற எண்ணம் வந்து, அந்த நகருக்குள் அவன் போகவில்லை. "பகைவர்கள் மாயாவிகள். அவர்களின் போக்கை மனிதரால் அறிய முடியாது" என்று, தன் தேர்ப் பாகனிடம் துருவன் சொன்னன்.

இது சமயம் வானம் திடும் என இருண்டது. கடல் முழக்கம்போல் பயங்கரமான சப்தம் உண்டாயிற்று; பெரும் புயல் காற்று கோரமாக வீசிற்று. ஒரே புழுதி மயம். ஒரு கணத்தில் வானம் முழுதும் மேகங்களால் மறைந்தது. பயங்கரமான இடிகளும் மின்னல்களும் உண்டாயின. இரத்தம், மலம், மூத்திரம், ஊன் நீர், சீழ் முதலியன வானத்திலிருந்து கொட்டின; தலையில் லாத முண்டங்கள் ஆகாயத்திலிருந்து விழுந்தன. ஆகா யத்தில் மலைகளும் தென்பட்டன. கல் மழையும், கத்தி. உலக்கை, கதை முதலிய ஆயுதங்களும் மேலிருந்து கீழே விழுந்தன; பாம்புகளும் மதம்கொண்ட யானைகளும் சிங் கங்களும் புலிகளும் கூட்டம் கூட்டமாக எதிர்த்து ஓடி வந்தன. கடல் பொங்கி எழுந்து பூமியை மறைத்தது.

அசுரர்கள் செய்த இந்த மாயைகளைப் பார்த்தவர்கள் பயந்து நடுங்கினர்கள். துருவனுக்கு எவ்வித இடுக் கணும் நேரக் கூடாது என்று முனிவர்கள் வாழ்த்தினர் கள். "பகைவர்களை எளிதில் துருவன் அழிக்க வேண் டும்" என்று ஆசி சொன்னர்கள்.

இது சமயம் துருவன் நாராயண அத்திரத்தைப் பிர யோகிப்பதற்கு ஆயத்தமானன். அந்த அத்திரத்தைத் துருவன் பிரயோகித்ததும், யக்ஷர்கள் தோற்றுவித்த மாயைகள் அனைத்தும் உடனே மறைந்தன. நாராயண அத்திரத்திலிருந்து கிளம்பின அம்புகள் சேனைக்குள்

புகுந்து பகைவர்களைத் தாக்கத் தொடங்கின. கருடனை எதிர்க்க வரும் பாம்புகள்போல, பகைவர்கள் துருவனை எதிர்க்க ஓடிவந்தார்கள்.

இப்படித் தன்னை எதிர்க்க வந்தவர்களை அம்பு களால் அடித்து, துருவன் தாக்கினான். இதனால் யக்ஷர் கள், சூரிய மண்டலத்தைப் பிளந்துகொண்டு, பர லோகத்தை அடைந்தார்கள்.

குற்றமில்லாத யக்ஷர்கள் அழிவதைக் கண்ட சுவா யம்புவ மனு, ரிஷிகளையும் அழைத்துக்கொண்டு, துருவ னிடம் வந்தார்.

அவர் துருவனைப் பார்த்து, "குழந்தாய்! நரகத்துக் கும் பாவத்துக்கும் காரணமான கோபத்தை விட்டுவிடு. கோபத்தின் பயனாய்க் குற்றமற்ற யக்ஷர்களை நீ கொன்றுவிட்டாய்; இது நம் குலத்துக்குப் பெருமை அன்று. பெரியோர்கள் இதை நிந்திப்பார்கள். உன் சகோதரனைக் கொன்றவன் ஒருவன்; அதன் பொருட்டு, பலரை நீ கொன்றுவிட்டாய். குழந்தாய்! உன் சகோதரனைக் கொன்றவர்கள் யக்ஷர்கள் என்று நீ எண்ணிக்கொண் டிருக்கிறாய். இது சரி யல்ல. தெய்வாதீனத்துக்கு உட்பட்டிருக்கிற இந்த உலகம் தெய்வாதீனத்தால் அழிகிறது என்பதை நீ அறி வாயாக; உன் சகோதரனும், தெய்வாதீனத்தால் இறந்து போனான் என்பதை நீ தெரிந்துகொள்; ஆகவே, கோபத்தை விட்டுவிடு. குபேரனுடைய பணியாளர்களை நீ கொன்றாய். ஆகவே குபேரனிடம் பணிவாக நடந்து அவனோடு சமாதானம் செய்துகொள். பெரியோருடைய கோபத்தால் நம் குலம் அழிய வேண்டாம்" என்று சொன்னார்.

சுவாயம்புவ மனு தன் பேரன் துருவனுக்கு இவ் வாறு புத்திமதி சொன்னார். அதை அங்கீகரித்து, துரு

வன் அவரை வணங்கினான். பிறகு, சுவாயம்புவ மனு ரிஷிகளை அழைத்துக்கொண்டு தமது இருக்கை திரும்பினார்.

மனுவின் உபதேசத்தினால் கோபம் அடங்கி, சாந்தம் ஆகிவிட்டான் என்பது தெரிய வந்து, குபேரன், யக்ஷர், கின்னரர், நாரதர் இவர்களுடன் துருவன் இருக்கும் இடம் வந்தான். அவர் துருவனைப் பார்த்து, "அரச குமாரனே! மனுவின் உபதேசப்படி நீ கோபத்தைத் துறந்துவிட்ட காரணத்தால், நான் உன்பால் மகிழ்ச்சி அடைந்தேன். விரோதத்தை விட்டுவிடுவது யார்க்கும் எளிதன்று. உன் சகோதரனை வதைத்தவர்கள் யக்ஷர்களும் அன்று; யக்ஷர்களை வதைத்தவன் நீயும் அன்று; காலமே இதற்குக் காரணம். இல்லாத ஒன்று உண்டாவதும் இல்லை; உண்டான ஒன்று இல்லாது போவதும் இல்லை. காலத்தின் கதியினால் அதனுடைய அவஸ்தை நிலை மாறுகிறதே யன்றி, அது அழிவது இல்லை. இதைப் போலவே உன் சகோதரனும் அழியவில்லை. யக்ஷர்களும் அழியவில்லை. அவர்களின் அவஸ்தை நிலையில்தான் மாற்றம் ஏற்பட்டு இருக்கிறதே யன்றி வேறு இல்லை. ஆகவே, நீ இவ்விடமிருந்து உன் நகரம் திரும்பு. நீ நலம் அடைவாய். சகல ஜீவன்களையும் ஆத்மாவாகப் பாவித்து ஆராதனை செய். உனக்கு வேண்டும் வரத்தை என்னிடமிருந்து நீ பெறலாம்" என்று குபேரன் சொன்னான்.

குபேரனின் விருப்பத்துக்கு இசைந்து துருவன் அவனிடம் வரம் கேட்டான். "எனக்கு, திருமாலிடம் மாறாத பக்தி இருப்பதைத் தாங்கள் வரமாகத் தந்தருள வேண்டும்" என்று சொன்னான்.

அந்த வரத்தைத் துருவனுக்கு அளித்துவிட்டு, அந்த இடத்திலேயே, குபேரன் மறைந்து போனான்.

துருவனும் தமது நகரம் திரும்பினான்.

அதன் பின்னர், கொடுக்க வேண்டிய அளவுக்குப் பூர்ணமாகத் தட்சிணைகள் கொடுத்து, அனேக வேள்விகளை இயற்றினான் துருவன்; பகவானை ஆராதனை செய்தான். எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிறான் என்னும் எண்ணத்துடன் வாழ்ந்தான். அதனால் மாந்தர்கள் அனைவரும், துருவனைத் தங்கள் தந்தையாகப் பாவித்தார்கள்.

இருபத்தாறாயிரம் ஆண்டுகள் துருவன் இந்த உலகத்தை ஆட்சி செய்தான். பிறகு தன் புதல்வனுக்குப் பட்டம் கட்டிவைத்துவிட்டு, பதரிகாசிரமத்துக்குச் சென்றான்.

அங்கே தூய நீரில் குளித்து, மூச்சை அடக்கித் தியானம் செய்து, புலன்களை அகத்தில் செலுத்தி, பகவானுடைய விராட் சொரூபத்தைத் தரிசித்தான்; அதனையே தியானம் செய்து செய்து, தன்னை மறந்து சமாதி நிலையை அடைந்தான். அந்த நிலையில் ஸ்தூல தியானத்தை விட்டு, 'நான்' என்ற எண்ணமும் அற்று, பகவானிடம் பக்தி செலுத்தினான்.

இது சமயம், அவனுடைய உடல் புளகாங்கிதம் அடைந்தது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது; உள்ளம் அன்பால் நிறைவுற்று இருந்தது.

அப்போது பொன்மயமான விமானம் ஒன்று ஆகாயத்திலிருந்து கீழே இறங்கி வந்தது. பத்துத் திக்குகளையும் ஒளிமயமாக்கிக்கொண்டு, முழு மதிபோலப் பிரகாசிக்கும் அந்த விமானத்தில் இரண்டு தேவர்கள் இருந்தார்கள்.

அவர்கள் இளம் வயதினர்; கருத்த மேனியர்; தாமரை மலர்போலச் சிவந்த கண்களைக் கொண்டவர்கள்; நான்கு கைகளை உடையவர்கள்; கதையை உடையவர்

கள்; தோள்வளையம், கிரீடம், குண்டலங்கள் ஆகிய வற்றை அந்தத் தேவர்கள் அணிந்து இருந்தார்கள்.

அவர்களைப் பார்த்ததும், பகவானுடைய ஊழியர்கள் என்பதை அறிந்து, தாம் செய்யும் பூசையையும் மறந்து, பரபரப்புடன் எழுந்து, அவர்கள் இருவரையும் கைகூப்பி வணங்கினான் துருவன்.

திருமாலிடம் பக்தியுள்ள துருவன் தம்மை வணங்கியதைப் பார்த்ததும், அந்தத் தேவர்கள்-சுநந்தர், நந்தர், இருவரும், "அரசனே! நலம் ஓங்குக! பகவானுடைய ஊழியர்களான நாங்கள் உம்மை அழைத்துப் போக வந்திருக்கிறோம். அடைய முடியாத விஷ்ணு பதத்தை நீர் அடையப் போகிறீர். சப்த ரிஷிகளும் அந்தப் பதத்தை அடைய இயலாமல் கீழே சஞ்சரிக்கிறார்கள். உம் முன்னோர்கள் யாரும் அடைய இயலாத மேலான பதவியை நீர் அடையப் போகிறீர்! பகவான் உமக்காக இந்தச் சிறந்த விமானத்தை அனுப்பி இருக்கிறார். தாங்கள் வந்து இதில் ஏறிக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார்கள்.

பகவானுடைய ஊழியர்கள் இவ்வாறு தெரிவித்ததும், துருவன் எழுந்து நீராடினான்; பிறகு ஆடை முதலியவற்றை அணிந்துகொண்டு மகரிஷிகளை வணங்கினான். அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, விமானத்தை வலம் செய்து பூசித்தான். ஊழியர்களையும் வணங்கிவிட்டு, விமானத்தில் ஏறிக்கொண்டான்.

அப்போது அவருடைய உடல் பொன்போல் பிரகாசித்தது. துந்துபி முதலிய வாத்தியங்கள் ஒலித்தன; பூமாரி பொழிந்தது; சிறந்த கந்தர்வர்கள் பாடினார்கள்.

விமானம் சொர்க்கத்தை நாடிப் புறப்பட்டது. இது சமயம் துருவன், "அன்னை சுநீதியை விட்டு வந்து விட்டோமே" என்று நினைத்தான்.

இதை அறிந்த பகவானுடைய ஊழியர்கள், அவனுடைய அன்னை சுநீதி, விமானத்தில் ஏறிக்கொண்டு மேல்உலகம் செல்வதை அவனுக்குக் காண்பித்தார்கள்.

இதன் பின்னர், மேல் உலகம் செல்லும் துருவன், கிரகங்களைக் கண்டான். பிறகு மூவுலகத்தையும் சப்த ரிஷி மண்டலங்களையும் கடந்து, துருவன் விஷ்ணு பதத்தை அடைந்தான்.

இவ்வாறு துருவனுடைய சரிதத்தை, மைத்ரேய முனிவர், விதுரருக்குச் சொல்லி முடித்தார்.

## பிருது சக்ரவர்த்தி கதை

துருவன் வைகுந்த பதவியைப் பெற்ற கதையைச் சொல்லி முடித்ததும், விதுரர், மைத்ரேய முனிவரிடம் "முனிவர் பிரானே! பிரசேதஸ்கள் என்பவர் யார்? யாருடைய பிள்ளைகள்? எந்த வமிசத்தில் பிறந்தவர்கள்? எங்கு சத்ர யாகத்தை நடத்தினர்? அந்த யாகம் நடந்த போது, நாரதர் சொன்ன பகவத் கதைகளை எல்லாம் கேட்க நான் பிரியப்படுகிறேன்" என்று சொன்னார்.

அதற்கு மைத்ரேயர், "துருவன் காட்டுக்குத் தவம் செய்யச் சென்ற பின்பு, அவனுடைய புதல்வன் உத்கலன் என்பவன் நாட்டின்மீதும் அதிகாரத்தின்மீதும் விருப்பம் இன்றி இருந்தான். மனவடக்கம் உடையவனும், சாந்தகுண முள்ளவனும், எல்லா உயிரிலும் இறைவன் இருக்கிறான் என்ற கருத்துடையவனும் இருந்ததால், உலக வாழ்க்கையில் பற்று இன்றி, அவன் வாழ்ந்து வந்தான். அவன் மனம் ஆத்ம ஞானத்தில் ஈடுபட்டு இருந்ததே யன்றி, கர்ம பந்தத்தில் ஈடுபடவில்லை. அதனால் அவனுடைய நடை, உடை, தோற்றம் முதலியன பித்தன் போலும் ஊமையன் போலும் இருந்தன. நீறுபூத்த நெருப்புபோல அவன் அடக்கமாய் இருந்தான்.

ஆகவே, இவனை விட்டுவிட்டு இவனுடைய தம்பியும்-பிரமி என்பவளின் - புதல்வனுமான வத்சரன் என்பவனை அரசன் ஆக்கினார்கள்.

இவன் சர்வவர்த்தினி என்பவளைத் திருமணம் செய்துகொண்டான். இவர்களுக்கு ஆறு ஆண் குழந்தைகள் பிறந்தார்கள்.

இவர்களில் புஷ்பார்ணன் என்பவன் ஒருவன். இவனுக்குத் தோஷா என்னும் மனைவி மூலம் வியுஷ்டி என்பவன் பிறந்தான்.

இந்த வியுஷ்டி என்பவனுக்கு, சர்வதேஜஸ் என்பவன் பிறந்தான். சர்வதேஜஸ், ஆகுதி என்னும் பெண்ணிடத்தில், சக்ஷுஸ் என்னும் மனுவை உண்டு பண்ணினான்.

இந்த மனுவுக்கு, நட்வலை என்பவள் பன்னிரண்டு புதல்வர்களைப் பெற்றாள். இவர்களில் உல்முகன் என்னும் புதல்வன், புஷ்கரணி என்பவளிடம் ஆறு புதல்வர்களை உண்டுபண்ணினான்.

இவர்களில் அங்கன் என்பவன் ஒருவன்; அவன் மனைவி பெயர் சுநீதை.

அங்கன் என்னும் இந்த மன்னன் யாகங்களில் சிறந்த அஸ்வமேத யாகம் ஒன்றும் செய்தான். வேதங்களை ஓதி உணர்ந்த ரித்விக்குகள் விதிப்படி மந்திரங்களைச் சொல்லி, தேவர்களை அழைத்தார்கள்.

முறைப்படி அழைத்தும், தேவர்கள் யாகத்துக்கு வராமல் இருப்பது குறித்து ரித்விக்குகள் ஆச்சரியம் அடைந்தார்கள்; ஆகவே, அவர்கள் யாகம் செய்யும் அங்க மன்னனை நோக்கி, "அரசே! மந்திரங்கள் உச்சரிக்கும் முறையிலும் குற்றம் இல்லை; ஹவிஸ் முதலிய திரவியங்களிலும் குற்றமில்லை; நியமம் தவறாத அந்தணர்கள் யாகத்தை நடத்துகின்றனர். அப்படி யிருந்த

தும், தேவர்கள் ஹவிஸைப் பெற வரவில்லை. குற்றம் குறைகள் இல்லாது நடைபெறும் இந்த யாகத்துக்குத் தேவர்கள் வராமல் இருப்பதற்கு, எங்களுக்கு எட்டிய மட்டில் காரணம் ஒன்றும் புலப்படவில்லை" என்று சொன்னார்கள்.

ரித்விக்குகள் இவ்வாறு சொன்னதும் அங்க மன்னன் பெரிதும் வருத்தமடைந்தான். மௌன விரதத்தை விட்டுவிட்டு. சபையோரை நோக்கி, "பெரியோர்களே! முறைப்படி அழைத்தும் தேவர்கள் யாகத்துக்கு வரவில்லை. நான் செய்த பிழை என்ன? அதைத் தாங்கள் எனக்குத் தெரிவிக்க வேண்டும்" என்று வேண்டினான்.

அதற்குச் சபையினர் அரசனை நோக்கி, "அரசே! இந்த ஜன்மத்தில் நீ எவ்வித பாவமும் செய்யவில்லை. முன் ஜன்மத்தில் நீ செய்த பாவத்தின் காரணமாகத் தான், இதுவரை உனக்குப் புத்திரப் பேறு கிடைக்கவில்லை. பிள்ளை வேண்டும் என்ற விருப்பத்துடன் நீ பகவானை ஆராதித்தால், அந்தப் பாக்கியத்தைப் பகவான் உமக்குக் கொடுப்பார். மக்கள் ஆராதிப்பதற்குத் தகுந்த பலனை அவசியம் இறைவன் கொடுப்பார்" என்று சொன்னார்கள்.

இவ்வாறு சொல்லிவிட்டு, அங்க ராஜனுக்குச் சந்ததி உண்டாகும் பொருட்டு, விஷ்ணுவை நினைந்து, புரோடாசம் என்னும் ஹவிஸை அக்கினியில் ஹோமம் செய்தார்கள்.

ஹோமம் செய்த அந்த அக்கினியிலிருந்து, பொற்கிண்ணத்தில் பாயசத்தை எடுத்துக்கொண்டு, அழகிய ஆண்மகன் ஒருவன் வெளிப்பட்டான்.

அந்தணர்களின் அனுமதி பெற்று, ஆண்மகன் கொணர்ந்த பாயசத்தைத் தம் கைகளில் வாங்கி, அதைத் தம் மனைவியிடம் கொடுத்தான் அங்க மன்னன்.

அவன் மனைவி சுநீதை அந்தப் பாயசத்தை அருந்திக் கருத்தரித்தாள். கருப்பம் பூர்த்தியாகி, ஆண்மகவு ஒன்றைச் சுநீதை பெற்றாள்.

இந்தக் குழந்தைக்கு வேனன் என்று பெயர் வைத்தார்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே குறும்புகள் செய்து, பிறருக்குத் தொந்திரவு கொடுத்தான் வேனன். தருமத்துக்குப் புறம்பான காரியங்களை எல்லாம் துணிந்து அவன்செய்தான். காட்டுக்குச் சென்று அமைதியான விலங்குகளை எல்லாம் அம்பால் அடித்து வேட்டையாடிக் கொன்றான். வேனன் வருவதைப் பார்த்ததுமே, "அதோ வருகிறான்! அதோ வருகிறான்!" என்று சொல்லி, பயந்து, மக்கள் பதுங்கிக்கொள்வார்கள். பூந்தோட்டத்துக்குச் சென்று அங்கு விளையாடிக்கொண்டிருக்கும் இளம் பருவத்துப் பிள்ளைகளைக் காரணம் இன்றி, வேனன் கொல்வான்.

கொடிய நடத்தைகளிலிருந்து தன் புதல்வன் வேனனை, அரசன் அங்கன் பலவாறு சொல்லித் திருத்த முயன்றான். எவ்வளவு முயன்றும், மன்னனால் தன் மைந்தனைத் திருத்த முடியவில்லை. அதனால் அங்க மன்னன் வருத்தமும் வெறுப்பும் அடைந்து, அனைத்தையும் துறந்து, மனைவியிடம்கூடச் சொல்லிக்கொள்ளாமல், காட்டுக்குப் போய்விட்டான்.

யாரிடமும் தெரிவியாமல் நள்ளிரவு நேரத்தில் அரசன் புறப்பட்டுப் போனபடியால், அவன் எங்கே போய் இருப்பான் என்பது யாருக்கும் தெரியவில்லை. தேடியலைந்து பார்த்தும், அரசன் இருக்கும் இடத்தை, குடிமக்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. பக்கத்தில் இருக்கும் பகவானைப் பக்குவமடையாத யோகிகள் தேடுவதைப் போல, அருகில் இருந்தும் குடிமக்களுக்கு, அரசன் இருப்பது தெரியவில்லை. ஆகவே, கண்ணீரை

உகுத்துக்கொண்டு கவலையோடு நகரம் திரும்பி, ரிஷி களிடம் விவரத்தைத் தெரிவித்தார்கள்.

பிருகு முதலிய ரிஷிகள் இதுபற்றி யோசித்தார்கள்; 'அரசன் இல்லாவிட்டால் மக்கள் விலங்குகள் ஆகிவிடு வார்கள்; நாடு பாழாகிவிடும்' என்று முடிவுக்கு வந்தார் கள். ஆகவே, சுநீதையின் விருப்பப்படி, வேனனுக்கு முடிசூட்டி வைத்தார்கள்.

கொடியவனுன வேனன் அரசன் ஆனதும், பாம் பைக் கண்ட எலிகள் போல நடுக்கமுற்று, திருடர்கள் மறைந்துவிட்டார்கள்.

அரசன் ஆனதும், வேனனுக்குக் கர்வம் மிகுந்து போயிற்று. தலைகால் புரியாமல் அவன் நடந்துகொள் ளத் தலைப்பட்டான்; தன்னைக் காட்டிலும் மேன்மை யானவன் யாரும் இல்லை என்று கருதத் தொடங்கினுன். பெரியோர்களை அவமதித்தான்; துன்புறுத்தினுன். "யாரும் தானம் செய்யக் கூடாது; தருமம் செய்யக் கூடாது. அந்தணர்கள் வேள்விகள் செய்யக் கூடாது" என்று பறையறைந்து கட்டளையிட்டான்.

வேனனின் கொடுமைகளையும் போக்கையும் அறிந்து ரிஷிகள் கலக்கமடைந்தார்கள். இருதலைக் கொள்ளி எறும்புபோல, திருடர்களாலும் அரசனுலும் குடி மக்கள் அவதிப்படுவதைக் கண்டு வருத்தமடைந் தார்கள். "அரசன் இல்லாவிட்டால் நாட்டின் நிலை மோசமாகக் கூடும் என்று நினைத்து, தகுதியற்ற இந்த வேனனை நாம் அரசன் ஆக்கினேம். அதன் பயன் என்ன? அரசனுலேயே மக்களுக்கு இப்பொழுது பயம் ஏற்பட்டு இருக்கிறது. பால் கொடுத்து வளர்த்தவனையே பாம்பு கடிப்பதுபோல, நன்மை செய்தவர்களுக்கே வேனன் தீங்கு செய்கிருன். இயல்பிலேயே கெட்ட புத்தியுள்ள இவனைத் திருத்துவது எளிதன்று. ஆயி

னும் நல் வார்த்தைகள் சொல்லி, அவனைத் திருத்த முயல வோம்" என்று ரிஷிகள் முடிவுக்கு வந்தார்கள்.

பிறகு, அவர்கள் வேனனை அணுகி, "மன்னனே! நாங்கள் சொல்வதை அனுசரித்து நீ நடப்பாயாயின், செல்வம், புகழ், பலம், ஆயுள் ஆகிய அனைத்தும் உனக்கு விருத்தியாகும். வாக்காலும் தேகத்தாலும் தருமம் செய்வது ஒருவனுக்கு மேலான சுகத்தைக் கொடுக்கும். பலனை எதிர்பாராது தருமம் செய்தால் அதுவும் மோட்சத்தைக் கொடுக்கும். அரசன் செய்யும் தருமம் குடிமக்களுக்கு நலத்தைக் கொடுக்கும்; தருமம் கெட்டுப் போனால் அரசனுடைய செல்வமும் கெட்டுப் போகும். அரச குலத்தில் பிறந்தவன் குடிமக்களைத் திருடர் பயம் முதலியவற்றிலிருந்து காப்பாற்றினால் அதுவே அவனுக்குத் தருமம்; அதனால் இம்மையிலும் மறுமையிலும் அவன் நலமடைவான். அந்தணர்கள் வேள்விகள் செய்வதன் மூலம் தேவர்களைத் திருப்தி செய்வார்களானால், அதனால் நாட்டுக்கே நன்மை உண்டு; உனக்கும் நன்மைஉண்டு. ஆகையால், வேள்வி முதலிய காரியங்களைத் தடைப்படுத்த வேண்டாம்" என்று புத்தி மதி சொன்னார்கள்.

ரிஷிகள் சொன்ன புத்திமதியை வேனன் அங்கீ கரிக்கவில்லை. அவன் அவர்களிடம், "நீங்கள் மூடர்கள்; அதருமத்தைத் தருமம் என்று நினைப்பவர்கள்; உங் களைக் காப்பாற்றும் அரசனை உபாசிக்காமல், பிறரை உபாசிக்க நீங்கள் விரும்புகிறீர்கள். கொண்ட கண வனைப் புறக்கணித்துவிட்டு, சோர நாயகனை ஒரு பெண் நாடுவதற்கு ஒப்பாகும் இது. எந்த மூடர்கள் அரசனை அலட்சியம் செய்கிறார்களோ, அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் நலம் அடைவது இல்லை. குடி மக்களைக் காப்பாற்றும் அரசன் உடம்பில் சகல தேவதைகளும்

வசிக்கிறார்கள். ஆகையால் அரசனிலும் மேலானவன் யாரும் இல்லை. என்னை நீங்கள் ஆராதியுங்கள்" என்று சொன்னான்.

தாங்கள் சொன்ன புத்திமதியை அங்கீகரியாமல், வேனன் அகந்தையுடன் பதில் சொன்னதைக் கேட்டு ரிஷிகள் ஆத்திரம் அடைந்தார்கள். "இயற்கையில் கெட்ட சுவாபம் படைத்த இந்த வேனன் இறந்து போகட்டும்" என்று சபித்தார்கள்.

பிறகு அங்கு இருக்கப் பிரியப்படாது தங்கள் ஆசிரமம் திரும்பினார்கள்.

வேனனுடைய உடலை, அவனுடைய தாய் சுநீதை, தனது வித்தியா பலத்தால் காப்பாற்றி வந்தாள்.

ஒரு நாள் விடியற் காலம் அந்த ரிஷிகள் சரஸ்வதி ஆற்றின் நீரில் நீராடிவிட்டு, தியானம், அக்கினி காரியம் முதலியவற்றை முடித்துக்கொண்டு, சரஸ்வதி ஆற்றங் கரையில் அமர்ந்து, நல்ல விஷயங்களைப்பற்றி அளவளாவிக்கொண் டிருந்தார்கள். அப்போது பயங்கரமான உத்பாதங்கள் உலகத்தில் உண்டாவதை அவர்கள் பார்த்தார்கள். "அரசன் இல்லாமல் இருந்தால் நாடு பாழாகிவிடுமே, திருடர்கள் பயம் அதிகரித்துவிடுமே!" என்று சிந்தித்தார்கள்.

இப்படி அவர்கள் சிந்தித்துக்கொண் டிருக்கும் போது, திருடர்கள் அலைவதால் அங்கும் இங்கும் தூசுகள் கிளம்புவதை அவர்கள் பார்த்தார்கள். உடனே "அந்தணர்கள் அனைத்தையும் பிரம்ம சொரூபமாய் பாவித்தபோதிலும், ஏழைகளைக் காப்பதில் அக்கறை காட்டாது இருந்தால், ஓட்டைக் குடத்தில் வைத்த தண்ணீர்போல, அவர்களுடைய தவமும் குறைந்து போகும். ஆகவே நாம் சும்மா இருத்தல் கூடாது. அங்கன்

சிறந்த அரசன்; அவனுடைய சந்ததி அற்றுப் போகாமல் காப்பது நமது கடமை" என்று நினைத்தார்கள்.

இந்த எண்ணத்துடன் மகரிஷிகள் வேனனுடைய தொடையைக் கடைந்தார்கள். அப்போது அந்தத் தொடையிலிருந்து பாகுகன் என்று ஒரு மனிதன் தோன்றினன்.

அவன் காக்கையைப்போல் கறுப்பாய் இருந்தான். குட்டையான தேகம்;குட்டையான கைகள்; குட்டையான கால்கள்; தலையிரும் கண்களும் சிவப்பு நிறத்தில் இருந்தன. இவன் ரிஷிகளைப் பார்த்துப் பணிவுடன் "நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

அவனுடைய தோற்றத்தையும் போக்கையும் கவனித்த ரிஷிகள் 'ராஜ்யத்தை ஆளும் திறமை இவனுக்குப் போதாது!' என்ற முடிவுக்கு வந்தார்கள்; ஆகவே அவனிடம் "நீ இங்கேயே உட்கார்?" என்று சொன்னார்கள்.

வேனனின் பாவம் எல்லாம் திரண்டு பிறந்த இவனை நிஷாதன் என்று ரிஷிகள் அழைத்தார்கள். இவனும் இவனுடைய சந்ததியாரும் காடுகளில் அலைந்து வேட்டையாடி வயிறு வளர்த்தார்கள்; ஆகவே, பட்டணத்துக்குள் போக வேண்டும் என்ற விருப்பம் இவர்களுக்கு ஏற்படவில்லை.

ஆகவே, முனிவர்கள் வேனனுடைய இரு கைகளையும் கடைந்தார்கள்; அப்போது ஒரு ஆணும் ஒரு பெண்ணும் தோன்றினார்கள். இந்த இருவரும் பகவானுடைய அம்சம் என்பதைத் தெரிந்துகொண்டு, முனிவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். "இவன் பிருது என்ற பெயரில் பிரசித்தமாய் விளங்குவான்; இந்தப் பெண் அர்ச்சிஸ் என்னும் பெயருடன் விளங்கி, பிருதுவை மணப்பாள். உல

கத்தைக் காக்கும் பொருட்டு, பகவான் பிருதுவாக அவ தரித்து இருக்கிறார்'' என்று சொன்னார்கள்.

இது சமயம், கந்தர்வர்களுள் சிறந்தவர்கள் கானம் செய்தார்கள்; சித்தர்கள் மலர்மாரி பொழிந்தார்கள். தேவ மடந்தையர் நடனம் ஆடினார்கள்; ஆகாயத்தில் சங்கம் முதலிய வாத்தியங்கள் முழங்கின. தேவ கணங் களும் பிதிரு கணங்களும் ரிஷி கணங்களும் அங்கு வந்தார்கள்.

இதன் பின்னர், பிருதுவை மன்னனாக்கி முடிசூட்ட அந்தணர்கள் ஏற்பாடு செய்தார்கள். குடி மக்கள் தேவையான சாமான்களைச் சேகரித்தார்கள். மலைகள், நதிகள், மரங்கள், விலங்குகள், பறவைகள் ஆகிய அனைத்தும் அரசனுக்குக் காணிக்கைகள் கொணர்ந்தன;

ஆடை அணிகலன்களால் தம்மை அலங்கரித்துக் கொண்டு, பிருதுவும் அவனுடைய மனைவி அர்ச்சிஸும் சோபையுடன் விளங்கினார்கள்.

இருவரையும் தங்க மயமான சிங்காதனத்தில் உட் கார வைத்து, அரசனைப் பிருதுவை அபிஷேகம் செய் தார்கள்.

இதன் பின்னர், தேவர்களும் தேவதைகளும் அர சன் பிருதுவுக்கு, வெகுமதிகள் அளித்தார்கள்.

இது சமயம், வந்திகளும் மாகதர்களும் வந்து, பிருது வைப் புகழ்ந்து பாடத் தொடங்கினார்கள்.

இதைக் கவனித்த பிருது அவர்களிடம், ''வந்திகளே! மாகதர்களே! மக்கள் கொண்டாடத்தக்க பெருமையான காரியம் எதையும் நான் செய்யவில்லை. அப்படி இருக் கும்போது, என்னை நீங்கள் துதிப்பதோ புகழ்வதோ எவ்வாறு பொருந்தும்? நீங்கள் என்னைப் புகழ்வது பொய்யாதல் கூடாது. சிறிது காலம் பொருத்து இருங்

கள். பின்னர் தாங்கள் என்னைத் துதிக்கலாம்" என்று சிரித்துக்கொண்டு கூறினார்.

ஆயினும் வந்திகளும் மாகதர்களும் மன்னனைத் துதிக்க விரும்பினார்கள். ஆகவே, முனிவர்களின் அனுமதி பெற்றுக்கொண்டு, பிருது மன்னனைப் பற்பல வாறு துதித்தார்கள்.

மன்னன் மகிழ்ச்சி அடைந்து, ஆடை முதலியவற்றை அவர்களுக்கு வெகுமதி அளித்தான்.

ரிஷிகளின் கட்டளைப்படி பிருது மன்னன் நாட்டைப் பரிபாலித்து வந்தான். அப்போது போதிய உணவு கிடைக்காது குடிமக்கள் பெரிதும் வருந்தினார்கள். அவர்கள் அரசனை நோக்கி, "அரசே! போதிய உணவு கிடைக்காது, நாங்கள் பசியால் நொந்து வாடுகிறோம். மரப் பொந்தை நெருப்பு எரிப்பதுபோல, எங்கள் வயிற்றைப் பசி எரிக்கிறது. மக்களைக் காப்பாற்றும் பொருட்டுத்தான், முனிவர்கள் உம்மை மன்னனாக அபிஷேகம் செய்தார்கள். எங்களைக் காப்பது உம் கடமை. ஆகவே, உணவு கிடைக்க ஏற்பாடு செய்யும்" என்று வேண்டினார்கள்.

உணவின் பொருட்டு, குடிமக்கள் புலம்புவதைக் கேட்டு, பிருது சக்கரவர்த்தி, இதற்குக் காரணம் யாதாய் இருக்கலாம் என்று நெடு நேரம் யோசித்தான். பூமிதான் காரணம் என்ற முடிவுக்கு வந்து, கோபத்துடன் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு, பூமிதேவிமீது தொடுப்பதற்குத் தயாரானான்.

இதைப் பார்த்ததும், பூமிதேவி பயந்துபோனாள். பசுவைப்போல் தன் உருவை மாற்றிக்கொண்டு, பெண் மானைப்போல, அவள் பீதியுற்று ஓடினாள்.

பிருது சக்ரவர்த்தி, கோபத்துடன் பூமாதேவியைத் துரத்தினான். ஓடும் இடங்களுக்கு எல்லாம் பிருது சக்ர

வர்த்தி தன்னைத் துரத்தி வருவதைக் கண்டு, பூமா தேவி வருத்தமடைந்தாள். தன்னை யாரும் காப்பாற்ற முன்வராததைக் கண்டு கலக்கமடைந்த அவள், பிருது சக்ரவர்த்தியையே தஞ்சம் அடைந்தாள் "அரசே! பிறரைக் காப்பாற்ற வேண்டிய நீர், குற்றமற்ற என்னை எதற்காகக் கொல்ல முயல்கிறீர்? அறங்களின் இயல்புகளை அறிந்த நீர், பெண்ணை வதம் செய்ய முற்படுவது முறையா? அறத்தின் இயல்புகளை அறியாதவர்கள் கூட, பெண்ணைக் கொல்லத் துணிய மாட்டார்களே? அப்படி யிருக்கும்போது நீர் ஏன் என்னைக் கொல்ல முயல்கிறீர்?" என்று கேட்டாள்.

அதற்குப் பிருது சக்ரவர்த்தி பூமாதேவியை நோக்கி, "பூமடந்தையே! யாகத்தில் ஹவிர்ப் பாகம் பெற்றுக் கொள்ளும் நீ, அதற்குத் தக்கபடி, தானியம் முதலியவற்றைக் கொடுக்காமல் இருக்கிறாய். நாள்தோறும் வயிறு நிரம்பத் தவறுது புல் தின்னும் மாடு, பால் கறக்காமல் இருந்தால் அது முறையாகுமா? அதைப் போலத்தான் உன் நடத்தையும் இருக்கிறது. முன்னைப் போல், மருந்து, தானியம் முதலியவற்றை இப்போது நீ கொடுப்பது இல்லை. நான் ஆட்சி செய்யும் இக்காலத்தில், இப்படி நீ நடப்பது, என்னை அவமதிப்பது ஆகும். இதை, என்னுல் பொறுக்க முடியாது. எனது பாணங்களால் உன்னைச் சிறு சிறு துண்டங்களாகப் பிளந்து, ஜனங்களிடம் கொடுத்து, அவர்களை நான் காப்பாற்ற விரும்புகிறேன்" என்று சொன்னுர்.

பிருது சக்ரவர்த்தி இவ்வாறு சொன்னதும், பூமா தேவி நடுநடுங்கிப் போனுள். அவனைக் கை கூப்பி வணங்கி, பலவாறு துதித்தாள். பிறகு அவனை நோக்கி, "அரசே! கோபத்தை அடக்கிக்கொண்டு தயவுசெய்து நான் சொல்வதைக் கேளும். மலரில் இருக்கும் தேனை

வண்டு எடுப்பது போல, அறிவுள்ளவன் சாரத்தை அடைவதில் கவனம் செலுத்த வேண்டும். இம்மை மறுமை இரண்டிலும் மாந்தர்கள் நலமடைய மகரிஷிகள் வழி வகுத்துக் கொடுத்து இருக்கிறார்கள். வேள்வி செய்வதால் மறுமை நலமும், விவசாயம் செய்வதால் இம்மை நலமும் கிட்டும் என்று சொல்லி இருக்கிறார்கள். அரசே! தீயவர்களும் திருடர்களும் இப்போது மலிந்து விட்டார்கள். யாகத்துக்குப் பயன்படும் மருந்துகளைத் தீயவர்களும் திருடர்களும் பயன்படுத்திக்கொள்வதைக் கண்டு மனமுடைந்து அவற்றை நான் என்னுள் அடக்கிக்கொண்டேன். பன்னெடும் காலம் ஆகிவிட்டபடியால், என்னுள்ளேயே அவை ஜீரணமாகிவிட்டன. ஏதாவது உபாயத்தின் மூலம் அவற்றை வெளிக் கொணர வேண்டும். நான் இப்பொழுது பசு வடிவில் இருப்பதால், எதைக் கொண்டு பயன் அடையலாம் என்பதைத் தெரிந்து கொள். கன்று, பாத்திரம், பால் கறப்பவன், இந்த மூன்றையும் கொண்டு, என்னிடமிருந்து, தேவையானவற்றை எடுத்துக்கொள்ள ஏற்பாடு செய். கன்றின்மீது எனக்கு இருக்கும் பிரியத்தின் காரணமாக நான் பாலைக் கறப்பேன். மேடு பள்ளம் இல்லாமல் என்னைச் சமப் படுத்து" என்று சொன்னாள்.

பூமாதேவி சொன்னபடி பிருது சக்ரவர்த்தி செய்தான். தேவர், கந்தர்வர், பித்ருக்கள், மானுடர், விலங்கு, பறவை, தத்தமக்குத் தேவையான பாலை, பூமாதேவி என்னும் பசுவிலிருந்து கறந்து கொண்டார்கள். இதனால் களிப்புற்ற பிருது சக்ரவர்த்தி, பூமாதேவியைத் தன் பெண்ணாகப் பாவித்தான்.

இதன் பின்னர், அந்தச் சக்ரவர்த்தி தனது வில்லின் நுனியால் மலைச் சிகரங்களைப் பொடியாக்கி, பூமியைச்

சமப்படுத்தினான். நகரம், கிராமம், ஊர் முதலியவற்றை உண்டுபண்ணினான்.

பிருது சக்ரவர்த்திக்கு முன்னர், ஊர், கிராமம் முதலிய ஏற்பாடுகள் இருந்தது இல்லை. பிருது சக்ரவர்த்திதான் முதன் முதலாக இந்த ஏற்பாடுகளை உண்டு பண்ணினான்; இதன் பயனாய், மக்கள் சுகமாக வாசம் செய்யத் தொடங்கினார்கள்.

சரஸ்வதி நதி கிழக்கு முகமாக ஓடுகிற இடத்துக்கு பிரம்ம வர்த்தம் என்று பெயர். அந்த இடத்தில் நூறு அசுவமேத யாகங்களைச் செய்து முடிப்பது எனச் சங்கல்பம் செய்துகொண்டான் பிருது சக்ரவர்த்தி. அதன்படி யாகத்தை அவன் நடத்தி வந்தான்.

அந்த யாகங்களுக்கு, தேவர்கள், சித்தர்கள், முனிவர்கள், கந்தர்வர்கள், மகாவிஷ்ணு, பரமசிவன், பிரம்மதேவர் முதலியோர் நேரில் தரிசனம் தந்து பெருமைப் படுத்தினார்கள்.

நூறு அசுவமேத யாகங்களை நிறைவேற்றி முடித்து விட்டால், தமது இந்திர பதவிக்கு ஆபத்து உண்டாகும் என, இந்திரன் பயந்தான்; ஆகவே, கடைசி யாகம் நிறைவேறாது தடுக்க முயன்றான் அவன்.

கடைசி யாகம் நடந்த சமயம், போலி வேடம் புனைந்து வந்து யாகக் குதிரையை இந்திரன் அபகரித்துக் கொண்டு போய்விட்டான்.

இப்படி இந்திரன் அபகரித்துச் செல்வதை அத்ரி முனிவர் பார்த்துவிட்டார்.

இது விவரத்தைப் பிருது சக்ரவர்த்தியிடம் அவர் தெரிவித்தார்.

விவரம் தெரிய வந்ததும், பிருதுவின் மகன் கோபங் கொண்டு, "நில்! நில்!" என்று சொல்லிக்கொண்டு, இந்திரனைப் பின்தொடர்ந்தான்.

அப்போது இந்திரன் தவக் கோலத்தில் தோற்ற மளித்தபடியால் அவனை ஒன்றும் செய்யாது, பிருதுவின் புதல்வன் திரும்பினான்

இதைக் கவனித்த அத்ரி முனிவர், "வேள்விக்கு இடையூறு செய்யும் அதமனான இந்திரனைக் கொல்" என்று தூண்டினார்.

மீண்டும் பிருதுவின் புதல்வன் இந்திரனைத் துரத் திக்கொண்டு புறப்பட்டான்.

இதைக் கவனித்த இந்திரன், குதிரையை விட்டு விட்டு மறைந்துகொண்டான்.

பிருதுவின் புதல்வன் குதிரையைப் பிடித்துக் கொண்டு, யாகசாலை திரும்பினான்.

இதனால் அக மகிழ்ந்த ரிஷிகள், விஜிதாச்வன் என்று சொல்லி, பிருதுவின் புதல்வனைக் கொண்டாடி னார்கள்.

இதன் பின்னர், தமது மாயையினால் இருளை உண் டாக்கி, இந்திரன் யாகக் குதிரையை மீண்டும் பிடித்துப் போய்விட்டான்.

இது சமயமும் விவரத்தைத் தெரிந்து கொண்டு, அத்ரி முனிவர் விஜிதாச்வனுக்குக் காட்டினார்

மீண்டும் விஜிதாச்வன் பிடிக்கப் போனபோது, குதிரையை விட்டுவிட்டு இந்திரன் மறைந்துகொண் டான்.

இதனால் கோபமடைந்து, பிருது சக்ரவர்த்தி, வில்லை யும் அம்புகளையும் கையில் எடுத்துக்கொண்டு, இந் திரனை வதம் செய்ய ஆயத்தமானார்.

இதைக் கவனித்த ரித்விக்குகள் பிருது சக்ரவர்த்தி யிடம், "அரசே! யாகத்துக்கு எனத் தீட்சை செய்து கொண்டிருப்பவர்கள், யாகப் பசுவைத் தவிர்த்து, வேறு எந்த வதமும் செய்தல் கூடாது. ஆகவே, மந்திரங்களைச்

சொல்லி இந்திரனை அழைத்து, அவனை நாங்கள் அக்கினி குண்டத்தில் ஹோமம் செய்கிறோம்" என்று சொன்னார்கள்.

அதன்படி, ஸ்ருக் என்னும் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு ஹோமம் செய்யத் தொடங்கினார்கள்.

அந்தணர்கள் இவ்வாறு ஹோமம் செய்யத் தொடங்கியதும், பிரம்ம தேவர் அங்கு எழுந்தருளினார். அவர் யாகம் செய்யும் அந்தணர்களை நோக்கி, "அந்தணர்களே! வேள்வி மூலம் ஆராதிக்கப்படும் தேவர்கள் இந்திர சொரூபம். ஆகையால் இந்திரனைக் கொல்ல நீங்கள் முற்படுவது உசிதம் அன்று. இந்த யாகத்தைக் கெடுக்க விரும்பிய இந்திரன், தரும மார்க்கத்துக்கு விரோதமான பாஷண்ட மார்க்கங்களை உண்டுபண்ணிவிட்டான். அத்தகைய ஆற்றல்பெற்ற இந்திரனைப் பகைத்துக் கொள்ள வேண்டாம் பிருது சக்ரவர்த்தி, தொண்ணூற்று ஒன்பது யாகங்களுடன் தாம் யாகம் செய்வதை நிறுத்திக்கொள்ளட்டும். நூறாவது யாகம் பூர்த்தியடையாவிட்டாலும், இந்திரனைக் காட்டிலும் பிருது சக்ரவர்த்தி கீர்த்தியுள்ளவர்" என்று சொன்னார்.

பிறகு, பிருது சக்ரவர்த்தியைப் பார்த்து "யாகத்துக்கு இடையூறு நேர்ந்தது குறித்து நீ கவலைகொள்ள வேண்டாம். நீயும் இந்திரனும் திருமாலின் அம்சம். ஆகையால், இந்த யாகத்தை இத்துடன் நிறுத்திக்கொள்; பாஷண்ட மார்க்கங்களில் உலகம் ஈடுபட இடம் கொடுக்க வேண்டாம்" என்று கூறினார்.

பிரம்ம தேவர் இவ்வாறு சொன்னதும், இந்திரனோடு கொண்டுள்ள பகைமையை மறந்து, பிருது சக்ரவர்த்தி நட்புக்கொண்டார். பிறகு யாகத்தை நிறுத்திவிட்டு அபவிருத ஸ்நானம் செய்தார்.

தேவர்கள் அவருக்கு வரம் கொடுத்தார்கள்; சக்ரவர்த்தி செய்த சன்மானங்களைப் பெற்றுக்கொண்டு, அந்தணர்கள் ஆசி செய்தார்கள்.

இந்திரனுடன் இந்த யாகத்துக்கு வந்திருந்த திருமாலை அவர்கள் ஆராதித்தார்கள். அப்போது பகவான் பிருது சக்ரவர்த்தியைப் பார்த்து, "வேந்தே! உனது யாகத்துக்கு இடையூறு செய்த இந்த இந்திரனை நீ மன்னிக்க வேண்டும். சான்றோராய் இருப்போர் பிறருக்குத் தீங்கு நினைக்க மாட்டார்கள். சரீரத்தை ஆத்மா என்று நினைத்து மதிமயக்கம் அடைதல் கூடாது. அப்படி அடைந்தால், பெரியோருடன் உனக்கு ஏற்பட்டுள்ள தொடர்பு, வீணாகிவிடும். தேகம் வேறு; ஆத்மா வேறு. தேகத்துக்கு ஏற்பட்டதை ஆத்மாவுக்கு ஏற்பட்டதாக எண்ணிக் கலக்கமடைதல் கூடாது; தேவர், மானுடர், விலங்கு, பறவை என்று பேதம் பாராட்டாமல், உலகத்தைப் பேணிக் காப்பாயாக! குடி மக்களைப் பாதுகாப்பதே அரசனுக்கு உரிய தருமம். குடிமக்களை நல்வழியில் செலுத்தி அரசன் ஆட்சி செய்து வந்தால், குடிமக்கள் செய்யும் புண்ணியத்தில் ஆறில் ஒரு பங்கு அரசனைச் சாரும். அரசே! நீ விரும்பும் வரத்தைக் கேள். இன்னும் கொஞ்ச காலத்தில் உன்னிடம் சித்தர்கள் வருவார்கள்" என்று சொன்னார்.

இப்படிப் பகவான் கூறியதைப் பிருது சக்ரவர்த்தி பணிவுடன் ஏற்றுக்கொண்டார்.

இது சமயம், தான் செய்த தவறை மறந்து, தன்னை மன்னிக்குமாறு, பிருது சக்ரவர்த்தியின் பாதங்களில் வீழ்ந்து இந்திரன் வணங்கினான்.

உடனே பிருது சக்ரவர்த்தி தமது பகைமையை மறந்து, இந்திரனை வாரி எடுத்துத் தழுவிக் கொண்டார்.

பிறகு, ஆனந்தக் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டே

பகவானை நோக்கி, "வீடுபேற்றைக் கொடுக்கவல்ல பிரபுவே! சம்சார சாகரத்தில் உழன்று தவிப்பர்கள்தான் வரத்தை விரும்புவார்களே யன்றி, பண்டிதர்கள் வரத்தை விரும்புவது இல்லை. உமது அமிர்தமயமான சரிதத்தைக் கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டுமானால், மோட்சத்தைக்கூட நான் விரும்ப மாட்டேன். ஆகவே, உமது பாதார விந்தத்தை நினைப்பதைத் தவிர வேறு எந்தப் பயனையும் நான் விரும்பவில்லை" என்று வேண்டினான்.

இவ்வாறு பிருது சக்ரவர்த்தி சொன்னதும் திருமால் அக மகிழ்ந்தார். "வேந்தே! நீ கேட்டுக்கொண்டபடி என்பால் உனக்குப் பக்தி உண்டாகட்டும். இந்திரனிடத்தில் கொண்டிருந்த கோபத்தை நீ விட்டுவிட்டபடியால், நான் மகிழ்ச்சி அடைந்தேன். கோபத்தை அடக்குவது எளிதான காரியம் அன்று. ஆயினும், கோபத்தை அடக்கி நீ வெற்றி பெற்றாய். அது என்பால் பக்தி செலுத்தியதற்கு நிகராம்" என்று சொல்லி, பகவான் அவருக்கு அருள்பாலித்தார்.

இதன் பின்னர், யாகத்துக்கு வந்திருந்த அனைவரையும் அரசர் முறைப்படி பூசித்தார்.

பிறகு ஒவ்வொருவரும் தத்தம் இருக்கை திரும்பினர். திருமாலும் தமது உலகம் திரும்பினார்.

பிருது சக்ரவர்த்தியும் திருமாலுக்கு வணக்கம் செலுத்திவிட்டு, தமது நகரம் திரும்பினார்.

பிருது சக்ரவர்த்தி நகருக்குத் திரும்புகிறார் என்பது தெரிய வந்ததும், மாந்தர்கள் நகரை வெகு விமரிசையாக அலங்கரித்தார்கள். மலர்கள், முத்துகள், தோரணங்கள், மாலைகள், மாவிலை, பாக்கு மரம், வாழை மரம் ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்டு நகரம் வெகு சோபிதமாய்த் திகழ்ந்தது.

நீரில் நனைந்துகொண்டு தவம் புரிந்தார். புலனடக்கத்துடன் பகவானை நினைந்து கடும் தவம் புரிந்து வந்தார். இறைவனைத் தவிர்த்து வேறு சிந்தனைக்கு இடம் இன்றி நான் எனது என்னும் ஆணவங்களை ஒழித்து, தியானத்தில் ஆழ்ந்து பக்தி செலுத்தினார். உரிய காலம் வந்ததும், பிரம்ம சொரூபத்தை அடைந்தார்.

தன் கணவன் உயிர்நீத்த பின்னர், அர்ச்சிஸ் என்பவள், மலையடிவாரத்தில் சிதையை அடுக்கி, தீ மூட்டி, தனது உடலை அந்த நெருப்பில் தகனம் செய்துகொண்டாள். உடன்கட்டை ஏறிய அவளை அனைவரும் புகழ்ந்தார்கள்.

தேவ மடந்தையர் பலவாறு அர்ச்சிஸைப் புகழ்ந்துகொண்டிருக்கும்போது, தன் கணவன் பிருது சக்ரவர்த்தி சென்ற உலகுக்கு அர்ச்சிஸும் சென்றாள்.

இவ்வாறு பிருது சக்ரவர்த்தியின் கதையை, மைத்ரேயர் விதுரருக்குச் சொல்லி முடித்தார்.

## புரஞ்சனன் கதை

பிருது சக்ரவர்த்திக்குப் பின்னர், அவருடைய புதல்வன் கீர்த்தியுள்ள விஜிதாசுவன் பூமண்டலத்தை ஆண்டு வந்தான். தம் தம்பியருக்கு நாட்டைப் பிரித்துக் கொடுத்து, ஆட்சி செலுத்த ஏற்பாடு செய்தான்.

சிகண்டினி என்னும் பெண் மூலம் விஜிதாசுவனுக்கு மூன்று ஆண் குழந்தைகள் பிறந்தார்கள். நபஸ்வதி என்னும் பெண்ணிடத்தில் அவிர்த்தானன் என்னும் புதல்வனைப் பெற்றான்.

இந்த அவிர்த்தானருக்கு, அவிர்த்தானி என்பவள் மூலம், ஆறு புதல்வர்கள் பிறந்தனர். அவர்களில் பர்ஹிஷத் என்பவன் ஒருவன்.

இவன் யாகங்கள் புரிவதிலும் யோக மார்க்கத்திலும் சிறந்து விளங்கினான். இந்த மன்னன் யாகங்கள் செய்வதிலே அதிக விருப்பமுள்ளவனாய் இருந்தான். இதனால் இவனுக்கு, பிராசீனபர்ஹிஸ் என்னும் பெயர் உண்டாயிற்று.

இவன் சமுத்திர ராஜனுடைய புதல்வி, சதத்ருதி என்பவளைத் திருமணம் செய்துகொண்டான். இவள் மிகுந்த பேரழகி. இவளுக்குப் பத்து ஆண் குழந்தைகள் பிறந்தார்கள்.

இந்தப் பத்து ஆண் குழந்தைகளும் ஒரே பெயரை— பிரசேதஸ் என்னும் பெயரைப்-பெற்றிருந்தார்கள்; இவர்களின் நடையுடை பாவனைகளும் ஒரே மாதிரியாய் இருந்தன.

இந்தப் பத்துப் பேரும் காட்டுக்குச் சென்று பதினாயிரம் ஆண்டுகள் தவம்புரிந்தார்கள். காட்டுக்கு இவர்கள் தவம் செய்யப் போகும்பொழுது, ருத்திரன் வழியில் வந்து, ஒரு மந்திரத்தை உபதேசம் செய்தான். அதை ஜபித்து, ஜபித்து, பகவானைத் தியானித்து ஊக்கத்துடன் அவர்கள் தவம் புரிந்து வந்தார்கள். சிவபெருமான் தங்களுக்குச் சொல்லித் தந்த பகவத் தோத்திரத்தைச் சொல்லித் தவம் செய்தார்கள்.

இவர்கள் இப்படித் தவம் செய்துகொண்டிருந்த போது, இவர்களின் தந்தை பிராசீனபர்ஹிஸ், யாகம் முதலிய கர்மங்களைச் செய்வதில் ஊக்கத்துடன் இருந்து வந்தான்.

இரக்கமுள்ள நாரத முனிவர், உபதேசம் செய்து பிராசீனபர்ஹிஸைத் திருத்த எண்ணினார். ஆகவே, ஒரு நாள் அவர் அவனிடம் வந்து, "அரசே! யாகம் முதலிய கர்மங்களைச் செய்வதில் நீ முழு மூச்சுடன் ஈடுபட்டு இருக்கிறாய். எந்த உத்தேசத்துடன் நீ இவ்வாறு செய்து

வருகிறாய் என்பது எனக்குப் புரியவில்லை. துக்கத்தைப் போக்கிக்கொள்ள விரும்பினாலும் சரி, அல்லது சுகத்தைத் தேடிக்கொள்ள நினைத்தாலும் சரி, கர்மத்தினால் மட்டுமே, இந்த இரண்டில் எதையும் சாதித்துக்கொள்ள முடியாது. துக்கத்தைப் போக்கி, சுகத்தைக் கொடுக்கும் மோட்ச நிலை, கர்மத்தால் கிட்டாது'' என்று சொன்னார்.

இப்படி நாரதர் சொன்னதும் பிராசீனபார்ஹிஸ் அவரைநோக்கி, ''முனிவர் பிரானே! கர்மத்திலேயே எனது மனம் ஈடுபட்டு இருப்பதால், வேறெந்த மார்க்கமும் எனக்குத்தெரியாது. மனைவி மக்கள், பணம்காசு, இவற்றையே இலட்சியமாகக் கொண்டு, சம்சார பந்தத்தில் உழன்று கிடப்பவனுக்கு, மோட்சத்தைப்பற்றிய நினைப்பு எப்படி உண்டாக முடியும்? கர்ம மார்க்கத்திலிருந்து விடுபடுவதற்குரிய ஞான மார்க்கத்தைத் தாங்கள் எனக்கு உபதேசிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

உடனே நாரதர் அந்த மன்னனை நோக்கி, ''அரசே! யாகம் செய்யும் காலத்தில் இரக்கமின்றி எத்தனையோ பசுக்களை நீ வதம் செய்து இருக்கிறாய். அந்தப் பிராணிகள் எல்லாம் பதிலுக்கு உன்னைத் துன்பப்படுத்த உன்னை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றன. மரணமடைந்து நீ மறு உலகம் சென்றதும், இரும்பு போன்ற தமது கொம்புகளால், கோபத்துடன் குத்தி உன்னை அவை துன்புறுத்தப் போகின்றன. இது சம்பந்தமாக உனக்கு ஒருகதை கூறுகிறேன் கேள்'' என்று சொல்லி, அடியில் வரும் கதையை, பிராசீனபர்ஹிஸுக்கு நாரத முனிவர் சொன்னார்.

முன்பு ஒரு காலத்தில், புரஞ்சனன் என்று புகழ்பெற்ற அரசன் ஒருவன் இருந்தான். இவனுக்கு அவிக்

ஞாதன் என்று ஒரு நண்பன் இருந்தான். இந்த நண்ப னுடைய சரிதம் யாருக்கும் தெரியாது.

இந்த அரசன் ஒரு முறை, தான் வசிப்பதற்கு ஏற்ற ஒரு நகரத்தைத் தேடிக்கொண்டு பூமி முழுவதும் அலைந் தான். ஏற்ற நகரம் ஒன்றும் அகப்படவில்லை.

பிறகு, ஒரு முறை இமய மலையின் தென் சாரலுக்கு அவன் போனபோது, ஒன்பது வாயில்களும் மற்றும் சகல லட்சணங்களும் பொருந்திய நகரம் ஒன்று இருப் பதை அவன் கண்டான். அந்த நகரத்தில் கோட்டை களும் தோட்டங்களும், மாட மாளிகைகளும், கூட கோபு ரங்களும் நிறைந்து இருந்தன. போகவதி நகரம்போல் அந்த நகரம் பொலிவுற்று விளங்கிற்று.

இந்த நகரில் இருக்கும் ஒரு பூஞ்சோலையில் புரஞ் சனன் உலவிக்கொண் டிருந்தபோதுதான் எதிர்பாராத நிலையில் உத்தமமான பெண் ஒருத்தி அங்கு வருவதைப் புரஞ்சன மன்னன் பார்த்தான்.

அவளைச் சூழ்ந்துகொண்டு, பத்து வேலைக்காரர்கள் கூட வந்தார்கள்; ஒவ்வொரு வேலைக்காரனுக்கும் நூறு மனைவியர் இருந்தனர். ஐந்து தலைப் பாம்பு ஒன்று அவளைக் காத்துக்கொண்டு வந்தது.

பார்த்ததும் புரஞ்சன மன்னன் அவளிடம் "பெண்ணே! நீ யார்? எந்தக் கோத்திரத்தில் பிறந் தவள்? எந்த ஊர்? இப்பொழுது எதற்காக இங்கே வந் திருக்கிறாய்?" என்று கேட்டான்.

அதற்கு அந்தப் பெண், "வீர ஆண்மகனே! எனது குலம் கோத்திரங்களைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரி யாது. நான் வசிக்கும் இந்த நகரத்தை உண்டுபண் ணினவர் யார் என்பதையும் நான் அறியேன். தெய்வா தீனமாக உம்மை நான் சந்திக்க நேர்ந்திருக்கிறது. நாம் இருவரும் திருமணம் செய்துகொண்டு, சுகமாக இந்த

நகரில் வசிக்கலாம். இல்லற தருமத்தின் பெருமைகளைத் துறவிகள் அறிய மாட்டார்கள். தேவர்கள், மகரிஷிகள், மானுடர்கள், மற்ற உயிர்கள் ஆகிய அனைத்தையும் தாங்குவது இல்லறம் என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள். ஆகவே, இல்லற தருமத்தை மேற்கொண்டு, நாம் இருவரும் இந்த நகரில் சுகமாக வசிக்கலாம்'' என்று சொன்னாள்.

ஆகவே, இருவரும் அந்த நகருக்குள் நுழைந்து, மகிழ்ச்சியுடன் வசித்தார்கள். பல ஆண்டுகள் உருண்டு ஓடின. வேறு எதிலும் நாட்டம் இன்றி, தன் மனைவியுடன் இருப்பதையே புரஞ்சனன் பெரிதும் விரும்பினான். மனைவி சொன்ன சொன்னபடி நடந்து, காலத்தையும் பொழுதையும் அவன் கழித்தான். அவள் சிரித்தால் அவன் சிரித்தான்; அழுதால் அழுதான்;ஓடினால் இவனும் ஓடினான். அவள் உட்கார்ந்து இருந்தால், இவனும் உட்கார்ந்தான்; இப்படி அவள் செய்வதையே தானும் செய்து கொண்டு, புரஞ்சன மன்னன் பொழுதைப் போக்கினான்.

ஒரு நாள் இந்த அரசன், தேரில் ஏறிக்கொண்டு வேட்டைக்குக் கிளம்பினான். தன் மனைவியை அழைத்துப் போகாமல் தான் மட்டும் தனியே சென்று, ஆர்வத்தோடும் ஊக்கத்தோடும் வேட்டையாடத் தொடங்கினான். ஈவிரக்கமின்றி, எல்லா விலங்குகளையும் அம்பால் அடித்துக் கொன்றான். கொல்லத்தக்க விலங்குகளையும் கொல்லத்தகாத விலங்குகளையும் வேட்டையாடிக் கொன்று, புரஞ்சனன் களைப்படைந்து சோர்ந்து போனான்.

ஆகவே, ஊர் திரும்பி, அந்தப்புரம் சென்று நீராடினான்; சுவையான உணவு உண்டு படுக்கையில் படுத்து, களைப்பைப் போக்கிக்கொண்டான். பிறகு சந்தனம் பூசி, மலர்மாலை அணிந்து, தன்னை அலங்கரித்

துக்கொண்டான். அப்போது தன் மனைவியைப் பார்க்க வேண்டும் என்னும் விருப்பம் புரஞ்சனனுக்கு உண்டாயிற்று. எனவே, மனைவி இருக்கும் இடத்துக்குப் போனான். அவளை அங்கே காண முடியவில்லை. மன்மத பாணத்தால் பீடிக்கப்பட்டு இருந்தபடியால், தன் மனைவியைப் பல இடங்களிலும் தேடிப் பார்த்தான். அவள் இருக்கும் இடம் தெரியவில்லை. ஆகவே, அந்தப் புரத்தில் இருக்கும் பெண்களை நோக்கி, "பெண்களே! நீங்கள் சுகமாய் இருக்கிறீர்களா? தாயோ அல்லது கற்புள்ள மனைவியோ இல்லாத இல்லம் சோபிப்பது இல்லை. சக்கரம் இல்லாத தேர் பயன்படாதது போல, மனைவி இல்லாத இல்லமும் பயன்படுவது இல்லை. மனைவி இல்லாத வீட்டில் அறிவுள்ள எந்த ஆண் மகனாவது வசிக்கப் பிரியப்படுவான்? துயரத்தில் மூழ்கி நான் நலிந்து இருக்கும் போதெல்லாம் ஆறுதல் சொல்லி அடிக்கடி என்னை என் மனைவி தேற்றுவாளே? இப்பொழுது அவள் எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டான்.

"அரசே! தங்கள் மனைவி தரையில் படுத்துக்கொண்டிருக்கிறாள். என்ன எண்ணத்துடன் படுத்து இருக்கிறாள் என்பதற்குரிய காரணம் எங்களுக்குத் தெரியவில்லை" என்று அவர்கள் பதில் சொன்னார்கள்.

விவரம் தெரிய வந்ததும் மனக் கலக்கம் அடைந்து, புரஞ்சன மன்னன் தன் மனைவி படுத்து இருக்கும் இடத்துக்குப் போனான். அன்பான வார்த்தைகள் கூறி, அவளைச் சமாதானப்படுத்தினான். அவளைத் தம் மடி மீது தூக்கி வைத்துக்கொண்டு கால்களைப் பிடித்தான். அவளிடம், "அழகிய பற்களைக் கொண்டவளே! நீ ஏன் கவலையோடு படுத்து இருக்கிறாய்? உன் மனம் நோக நடந்துகொண்டவர்களை நான் தக்கபடி தண்டிக்கிறேன். இதற்கு முன் நீ இவ்வாறு ஒருபோதும் இருந்தது இல்லை

உன் முகம் பெரிதும் வாட்டமுற்று இருக்கிறது. நெற்றியில் நீ பொட்டிட்டுக்கொள்ளாமல் இருக்கிறாய்; முகம் அழுக்கடைந்து போய் இருக்கிறது. கொவ்வைப் பழம் போன்ற உனது உதடுகளில், வெற்றிலைச் சிவப்பைக் காணோம். உன்னை விட்டுவிட்டு நான் தனியே வேட்டைக்குச் சென்றதனால் கோபமடைந்து இருக்கிறாய் போலத் தோன்றுகிறது. நான் செய்த குற்றத்தை, என் மனைவியான நீ பொறுத்துக்கொள். மன்மத தாபத்தால் வருந்தும் கணவனை ஆதரித்து அன்பு காட்டாமல் உத்தமமான மனைவி இருப்பாளா?" என்று உரிமையோடும் அன்போடும் கேட்டான்.

தன் கணவன் புரஞ்சனனை, புரஞ்சனி இவ்வாறு வசப்படுத்திக்கொண்டாள். பிறகு எழுந்து சென்று நீராடி, ஆடை அணிகலன்களால் தன்னை அலங்கரித்துக்கொண்டாள். உயர்தரமான சாப்பாட்டை முடித்துக்கொண்டு, மகிழ்ச்சியுடன், தன் கணவன் அருகே வந்தாள்.

அரசனும் அவளை அன்போடு தழுவி, அனுபவித்து மகிழ்ந்தான். தமது ஆயுள் வீணே கழிவதைப் பொருட்படுத்தாது அல்லும் பகலும் அவள் அருகே இருந்தான். அவளைத் தவிர்த்து வேறு எதுவும் இந்த உலகத்தில் இருப்பதாக அவன் எண்ணவில்லை. அவளுடைய பேச்சிலும் நடையுடை பாவனைகளிலும் அவன் மதிமயங்கிக் கிடந்தான். தமது இளமைப் பருவம் முழுவதையும் ஒரு நொடிப் பொழுது போல, பெண்மை மோகத்தில் செலவிட்டான் அரசன்.

புரஞ்சனனுக்கு, புரஞ்சனி இடத்தில் நூற்றுப் பதினொரு ஆண் மக்கள் பிறந்தனர். அப்பொழுது அவனுடைய வாழ்நாளில் பாதி கழிந்துவிட்டது.

இதன் பின்னர், உதார குணமும் பெற்றோருக்குப் பெருமையும் புகழும், தரக் கூடிய நூற்றுப் பத்து பெண் மக்கள் பிறந்தனர்.

பாஞ்சால தேசத்து மன்னனான புரஞ்சனன், தன் புதல்வர்களுக்குத் தகுந்த மனைவியரையும், புதல்வியருக்குத் தகுந்த கணவன்மாரையும் பார்த்துத் திருமணம் செய்து வைத்தான்.

ஒவ்வொரு புதல்வனுக்கும் நூறு நூறு குழந்தைகள் பிறந்தார்கள். பாஞ்சால நாட்டில் புரஞ்சனனுடைய வமிசத்தவர்கள் எங்கும் பரவி இருந்தார்கள்; தன் புதல்வர்களையும் பேரன்மார்களையும் பார்த்துக் களிப்பில் மூழ்கி புரஞ்சன மன்னன் வாழ்க்கையை அனுபவித்தான். யாகங்கள் பல செய்து பிதுருக்களையும் தேவதைகளையும் அவன் பூசித்தான். இப்படி அவன் வாழ்ந்து வந்தபோது, பெண்கள்பால் பிரியமுள்ளவர்களுக்கு ஏது கூடாதோ, அந்தக் கிழத்தனத்தால், புரஞ்சனன் பிடிக்கப்பட்டான்.

புரஞ்சனன் முதுமையால் பிடிக்கப்பட்ட சமயம், சண்டவேகன் என்று ஒரு கந்தர்வ ராஜன் இருந்தான். அவனிடம் முந்நூற்று அறுபது வேலைக்காரர்கள் இருந்தார்கள்; கறுப்பு நிறத்திலும் வெண்மை நிறத்திலும் முந்நூற்று அறுபது வேலைக்காரிகள் இருந்தார்கள்.

சண்டவேகனுடைய வேலைக்காரர்கள், புரஞ்சனனுடைய நகரத்தைக் கைப்பற்றிக்கொள்ள முயன்றார்கள். அப்போது அந்த நகரத்துத் தலைவன் பிரஜாகரன் என்பவன் தனி ஒருவனாக நின்று, அந்தக் கந்தர்வர்களை எதிர்த்தான். எழுநூற்று இருபது கந்தர்வர்களோடு நீண்ட நாள் தொடர்ந்து போர் செய்து, பிரஜாகரன் தளர்வுற்றுச் சோர்ந்து போனான். என்ன நேருமோ

முடிவு எப்படியாகுமோ என்று அவன் கவலையோடு இருந்தான்.

புரஞ்சன மன்னனோ நாட்டில் நடப்பது ஒன்றும் அறியாது, காமக் களி மயக்கல் மூழ்கி, உண்பதும் குடிபதும் உறங்குவதுமாக இருந்தான். பயம் என்பதையே அறியாது, கப்பம் வாங்குவது, சாப்பிடுவது இந்த இரண்டிலும் பொழுதைக் கழித்தான்.

இது சமயம் காலன் என்பவனுக்குத் துர்ப்பகை என்று ஒரு பெண் இருந்தாள். தனக்குத் தகுந்த கணவனைத் தேடிக்கொண்டு மூன்று உலகங்களிலும் அவள் அலைந்து திரிந்தாள். ஒருவரும் அவளைக் கலியாணம் செய்துகொள்ள முன்வரவில்லை.

இப்படி அவள் அலைந்து கொண்டிருந்த சமயம், நான் (நாரத முனிவர்) சத்ய லோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்துகொண்டிருந்தேன். என்னைத் துர்ப்பகை பார்த்துவிட்டாள். ஆகவே, என்னை அணுகி "முனிவரே! என்னைத் திருமணம் செய்துகொள்ளும்" என்று வேண்டினாள்.

நான் சம்மதிக்காதபடியால், "ஒரு இடத்திலும் நிலைத்துத் தங்காமல் எப்பொழுதும் நீர் அலைந்து திரிக!" என்று என்னைத் துர்ப்பகை சபித்தாள்.

இப்படிச் சபித்த அந்தப் பெண்ணை நோக்கி, "பெண்ணே! பயன் என்று பெயருள்ள ஒருவன் யவனர்களுக்கு அதிபதியாய் இருக்கிறான். அவனை நீ திருமணம் செய்துகொள்" என்று சொன்னேன்.

அதன்படி துர்ப்பகை, பயன் என்பவனை அணுகி, தன்னைக் கலியாணம் செய்துகொள்ளுமாறு வேண்டினாள்.

அதற்கு அந்த யவன அரசன், "பெண்ணே! உனது போக்கை அறிந்துதான் உன்னை ஒருவரும் திருமணம்

செய்துகொள்ள முன்வரவில்லை. ஆயினும் உனக்குத் தகுந்த கணவன் ஒருவன் இருக்கிறான். இந்த உலகம் முழுவதையுமே உனது கணவனாகப் பாவித்துக்கொள். கர்மத்தால் பீடிக்கப்பட்டு இருக்கும் இந்த உலகத்தை உன் விருப்பம்போல் அனுபவி என்னுடைய யவனப் படையையும் அழைத்துக்கொண்டு போ. அங்கு வசிப்பவர்களை எல்லாம் நாசம் செய். இதோ இருக்கிறானே, இவன் பெயர் பிரஜாவரன்; என் உடன் பிறந்தவன்; நான் உன்னை என் உடன் பிறந்தவளாகப் பாவிக்கிறேன்'' என்று சொன்னான்.

கால கன்னிகையான துர்ப்பகையும், பிரஜாரவனும், பயன் என்பவனுடைய படையை அழைத்துக்கொண்டு, உலக முழுதும் சஞ்சரித்தார்கள்.

அப்போது ஒரு நாள், அவர்கள் புரஞ்சனனுடைய நகருக்கு வந்து, அதை முற்றுகை யிட்டார்கள். பலாத்காரமாக உள்ளே புகுந்து, துர்ப்பகை அந்த நகரத்தை அனுபவித்து வந்தாள். யவனர்கள் உள்ளே புகுந்து, குடிமக்களைப் பெரிதும் துன்புறுத்தினார்கள். புரஞ்சனனையும் அவர்கள் துன்புறுத்தினார்கள் பதவியிலிருந்தும் அவனைத் தள்ளிவிட்டார்கள்; மனைவி, மக்கள், மந்திரிமார்கள் இவர்களால் அவமதிக்கப்பட்டு, மதியிழந்து போய், செய்வது ஒன்றும் அறியாது புரஞ்சனன் பெரிதும் திண்டாடினான். நகரத்தைவிட்டு வெளியேற எண்ணினான். ஆயினும் அவனுக்கு உண்மையில் மனம் வரவில்லை.

இது சமயம் தன் சகோதரனுக்கு விருப்பம் செய்ய விரும்பி, பயன் என்பவனுடைய தம்பி பிரஜாவரன், புரஞ்சனனுடைய பட்டணத்தைத் தீயிட்டுக் கொளுத்தினான்.

பட்டணம் பற்றி எரியும்பொழுது, தன் மனைவி மக்கள், பட்டணத்து ஜனங்கள் ஆகியவர்களை நினைந்து

புரஞ்சனன் பெரிதும் வருந்தினுன். துயரம் தாங்காது நகரத்தைவிட்டு வெளியேற முயன்ருன். கை கால்களை முறித்து, பலம் குன்றிய புரஞ்சனனை யவனர்கள் பிடித்துக்கொண்டார்கள்.

புரஞ்சனன் வாய்விட்டு அழுதான். மனைவி மக்கள் உற்ருர் உறவினர்கள் இவர்களைப் பிரிய நேர்ந்து இருப்பது குறித்துப் புலம்பி அழுதான். "நான் பரலோகம் சென்ற பின், துக்கத்தில் ஆழ்ந்துகிடக்கும் என் மனைவி மக்களை யார் காப்பாற்றுவார்கள்? நான் சாப்பிடுவதற்கு முன் என் மனைவி சாப்பிட மாட்டாள். எனக்குக் கோபம் வந்தால் அவள் பயப்படுவாள்; நான் அதட்டினுல் மௌனமாக இருப்பாள்; தக்க சமயத்தில் எனக்கு ஆலோசனை கூற அவள் தயங்க மாட்டாள்; நான் வெளியூர் சென்றிருந்தால், ஆற்ருது துயரப்படுவாள்; என் புதல்வியரும், புதல்வர்களும், என்னைப் பிரிந்த பின் கடலில் தத்தளிப்பதைப் போலத் தத்தளிப்பார்கள்; என் செய்வது?" என்று பலவாறு யோசித்தான்.

இப்படி வருந்தும் புரஞ்சனனை, பயன் என்பவன் வந்து, பசுவைக் கட்டுவதுபோல் கட்டி, அவனைத் தன் வீட்டுக்கு இழுத்துப் போனுன். புரஞ்சனனுடைய வேலைக்காரர்கள் அழுதுகொண்டு அவனைப் பின் தொடர்ந்தார்கள். அந்தப் பட்டணத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்த பாம்பும் அவர்களுடன் போய்விட்டதால், அந்த நகரம் முழுதும் நாசமடைந்துவிட்டது.

பலாத்காரமாகப் புரஞ்சனனை யவனர்கள் இழுத்துக் கொண்டு போனதால், தோழர்கள் யாரும் புரஞ்சனனைப் பின்தொடர முடியவில்லை யவனர்கள் நகரத்தை அடைந்ததும், முன்பு புரஞ்சனனுல் யாகத்தில் கொல்லப் பட்ட பசுக்கள், மிகுந்த கோபத்துடன் வந்து, புரஞ்சனனைக் கோடரிகளால் பிளந்தன. பல ஆண்டுகள் நரகத்

தில் கிடந்து புரஞ்சனன் உழன்றான்; அப்போதும்கூட தன் மனைவியைப் பற்றியே புரஞ்சனன் நினைத்துக் கொண்டிருந்ததால், மறு ஜன்மத்தில், விதர்ப்ப நாட்டு மன்னனுக்கு மகளாகப் பிறந்தான் அவன்.

விதர்ப்ப ராஜனுடைய மகளை, மலையத்துவஜ பாண்டியன் மணம் செய்துகொண்டான். இவர்களுக்கு, ஒரு பெண்ணும் ஏழு ஆண் மக்களும் பிறந்தார்கள். இந்த ஏழு ஆண் மக்களும் திராவிட தேசத்துக்கு அதிபதிகள் ஆயினர். இவர்களுக்குக் கோடிக் கணக்கில் பிள்ளைகள் பிறந்தார்கள்.

மலையத்துவஜ பாண்டியனுடைய பெண்ணை அகத்திய முனிவர் திருமணம் செய்துகொண்டார்.

அதன் பின்னர், மலையத்துவஜ பாண்டியன், இந்தப் பூமியைத் தன் புதல்வர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, காட்டுக்குத் தவம் செய்யப் போய்விட்டான்.

விதர்ப்ப ராஜனுடைய மகளும், தன் கணவன் மலையத்துவஜனைப் பின்தொடர்ந்து காட்டுக்குப் போனாள்.

தவம் செய்து செய்து, மலையத்துவஜ பாண்டியன் நீக்கமற நிறைந்து இருக்கும் இறைவனுடன் இரண்டறக் கலந்தான்.

விதர்ப்ப ராஜன் மகள் தன் கணவன் உயிர் நீத்ததை அறிந்து, கண்ணீர் உகுத்துப் புலம்பி அழுதாள். சிதையை அடுக்கி, தன் கணவனைத் தகனம் செய்து, அந்தத் தீயிலேயே தன் உயிரையும் விட, விதர்ப்ப ராஜன் மகள் முனைந்தாள்.

இது சமயம், நீண்ட நாள் நண்பனாக இருக்கும் அவிக்ஞாதன் என்னும் பிராமணன் அவள் முன்னர்த் தோன்றி, இனிமையான வார்த்தைகளால் விதர்ப்ப ராஜன் மகளுடன் பேசலானார்:

"பெண்ணே! நீ யார்? யாருடைய மகள்? இதோ படுத்து இருக்கும் ஆண்மகன் யார்? எதற்காக நீ அழு கிறாய்? என்னை யார் என்று உனக்குத் தெரிகிறதா? உன்னோடு நீண்ட நாட்கள் பழக்கமுள்ள நண்பன் நான்; என்னால் பல வித இன்பங்களை நீ அனுபவித்து இருக் கிறாய் ஆயினும் என்னை யாரென்று நீ அறிய மாட்டாய். அவிக்ஞாதன் என்று உனக்கு ஒரு தோழன் இருந்தது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? முன் ஜன்மத்தில் நீயும் நானும் மானசரோவரில், அன்னங்களாக வசித்தோம். பிறகு என்னை விட்டு நீ பிரிந்து போய்விட்டாய்" என்று சொன்னார்.

ஆத்ம உபதேசம் செய்ய விரும்பிய நாரதர், ஆத்ம ஞானக் கருத்துக்களை ஒரு கதையாகப் புனைந்து, பிரா சீன பர்ஹிஸுக்குச் சொன்னார்.

இந்தக் கதையின் உட்கருத்து தனக்கு விளங்க வில்லை என்றும், ஆகவே அதைத் தனக்கு விளக்கிச் சொல்லுமாறும் நாரத முனிவரை, பிராசீனபர்ஹிஸ் கேட்டுக்கொண்டான்.

அதன்படி கதையில் பொதிந்திருக்கும் தத்துவத்தை நாரத முனிவர் அவனுக்கு விளக்கிச் சொன்னார். பிறகு அவனிடம் விடை பெற்றுக்கொண்டு நாரதர் போய் விட்டார்.

இதன் பின்னர் அரசன் பிராசீனபர்ஹிஸ், நாட் டைத் தன் புதல்வர்களிடம் ஒப்படைத்துவிட்டு, கபில ருடைய ஆசிரமத்துக்குத் தவம் செய்யப் போய்விட்டான்.

பிராசீனபர்ஹிஸின் கதையையும் அவனுடைய புதல்வர்கள் பிரசேதஸர்களின் கதையையும் விதுரருக்கு, மைத்ரேய முனிவர் சொல்லி முடித்தார்.

இந்தக் கதைகளைக் கேட்டு ஆனந்தமடைந்த விதுரர், மைத்ரேயரிடம் விடைபெற்றுக்கொண்டு, தம் உறவினர் களைப் பார்க்கும் பொருட்டு, அத்தினபுரம் திரும்பினார்.

# ஸ்ரீமத் பாகவதம்

## ஐந்தாம் ஸ்கந்தம்

---

### பிரிய விரதனுடைய வமிசம்

சுகர் சொல்லுகிறார்:

சுவாயம்புவ மனுவின் புதல்வர்களில், பிரியவிரதன் என்பவன் ஒருவன். அவன் திருமாலிடம் மாறாத பக்தி பூண்டு வாழ்க்கை நடத்தினான். அவன் தந்தை சுவாயம்புவ மனு, ராஜ்ய பரிபாலனம் செய்யும்படி பிரியவிரதனிடம் சொன்னார்.

தந்தையின் சொல்லைத் தட்டக் கூடாது என்பதை அறிந்தவராய் இருந்தும், பகவானிடத்தில் தமக்கு இருக்கும் பக்தி காரணமாக, ராஜ்யபாரம் செய்வதைப் பிரியம் விரதன் விரும்பவில்லை.

இதை அறிந்த பிரம்ம தேவர், மரீசி முதலியவர்களை அழைத்துக்கொண்டு தம்முடைய உலகத்திலிருந்து, பிரியவிரதன் இருக்கும் இடத்துக்கு வந்தார்.

கந்தமாதன பர்வதத்துக்கு, பிரம்மதேவர் வந்தபோது அங்கே, நாரத முனிவர் பிரியவிரதனுடன் இருந்தார்.

தம் தந்தை பிரம்ம தேவர் அன்னப் பறவைமீது வருவதைப் பார்த்ததும், நாரத முனிவர் பிரியவிரதனுடன் சேர்ந்து எழுந்து, கைகூப்பி வணங்கி முறைப்படி, பிரம்ம தேவரைப் பூசித்தார்.

பிறகு பிரம்ம தேவர், பிரியவிரதனை நோக்கி, முகத்தில் புன்சிரிப்புத் தோன்ற, "குழந்தாய்! தெய்வத்தின் திருவுளப்படிதான் உலகம் நடைபெறுகிறது. தவம், தானம், கல்வி, யோகம், புத்தி, பொருள், பிறர் உதவி, தன் பலம், இவற்ருல் எதைக் கொண்டும், இறைவன் செய்துவரும் காரியங்களுக்கு யாரும் ஊனம் செய்ய முடியாது. தெய்வத்தின் கட்டளையால்தான் தேகம் என்பது ஒவ்வொரு உயிருக்கும் ஏற்படுகிறது. பிறப்பு, இறப்பு, கவலை, ஆசை, பயம், இன்பம், துன்பம் அனைத்தையும் இந்தத் தேகம் அடைவதோடு, கர்மங்களிலும் அது ஈடுபடுகிறது. மூக்கணும் கயிறு போட்ட மாடு, கள், மனிதர்களுக்கு வயப்பட்டு நடப்பது போல, நாம், தெய்வத்தின் திருவுளத்துக்கு வசப்பட்டு நடக்க வேண்டியவர்களாய் இருக்கிறோம். புலன் அடக்கம் இல்லாதவன் காட்டுக்குப் போனாலும், சம்சார பந்தம் அவனை விடுகிறது இல்லை. இல்லறத்தில் இருந்துகொண்டே, ஆறு பகைவர்களை வென்று பகவானை ஆராதிப்பதே சிறந்த முறையாகும். ஆகவே, ராஜ்ய பாரம் செய்துகொண்டே நீ பகவானை அடைய முயல்க! அதுவே நன்மை பயக்கும்" என்று சொன்னார்.

பிரம்மதேவர் இவ்வாறு சொன்னதும், தலைதாழ்த்தி வணங்கி, அவருடைய அபிப்பிராயத்தைப் பிரியவிரதன் அங்கீகரித்துக்கொண்டான்.

பிறகு பிரம்ம தேவர் தமது உலகம் திரும்பினார்.

பிரியவிரதன், ராஜ்ய பாரத்தை ஏற்று, பரிபாலிக்கத் தொடங்கினான். ஆயினும் சம்சார பந்தத்தில் ஈடுபட்டு உழலாமல், ராஜ்ய பாரம் செய்து வந்தான்.

விசுவ கர்மாவின் பெண், பர்ஹிஷ்மதி என்பவளைத் திருமணம் செய்துகொண்டு, பிரியவிரதன் வாழ்க்கை நடத்தினான்.

இவர்களுக்குப் பத்து ஆண் மக்களும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தார்கள். ஊர்ஜஸ்வதீ என்னும் அந்தப் பெண் யாவரிலும் இளையவள்.

ஆண் மக்களில் மூவர், ஆத்ம ஞானத்தில் ஈடுபட்டு, சித்தி அடைந்தார்கள்.

பிரியவிரதனுக்கு மற்றொரு மனைவியிடம் மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள்.

பிரியவிரதன் பதினொரு கோடி ஆண்டுகள் தன் புயவலிமையால் இந்த உலகத்தை ஆண்டான். தன் மனைவி பர்ஹிஷ்மதியுடன் காம இன்பம் துய்த்து, ஆத்ம சொரூபத்தை அறியாதவன் போல வாழ்க்கை நடத்தினான்.

ஒரு முறை சூரியனுடைய தேருக்குச் சமமானதையான ஒரு தேரில் ஏறிக்கொண்டு இந்தப் பூமண்டலம் முழுவதையும் பிரியவிரதன் சுற்றினான். மேரு மலையை ஏழு முறைகள் அவன் சுற்றிவந்தபோது, அவனுடைய தேரின் சக்கரங்கள் அழுந்தி, ஏழு இடங்களில் ஏழு பள்ளங்களை உண்டாக்கின. அவையே ஏழு சமுத்திரங்கள். இந்தச் சமுத்திரங்களுக்கு இடையே ஏழு தீவங்கள் உண்டாயின.

இந்த ஏழு தீவங்களுக்கும் தனித் தனியே பெயர் உண்டு. ஜம்புத் தீவம், பிலட்சத் தீவம், சால்மலித் தீவம், குசத் தீவம், கிரௌஞ்சத் தீவம், சாவகத் தீவம் புஷ்கரத் தீவம் என்பன.

இந்தத் தீவங்கள் ஒன்றைவிட ஒன்று இரு மடங்கு பெரியவை.

தன் புதல்வர்களில் துறவறத்தை மேற்கொண்டவர்களைத் தவிர்த்து, மற்ற எழுவருக்கும் ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு தீவத்தைப் பிரியவிரதன் கொடுத்தான்.

தன் புதல்வி ஊர்ஜஸ்வதீ என்பவளை, சுக்ராச்சாரியருக்குத் திருமணம் செய்து கொடுத்தான். இவர்களுக்குத் தேவயானி என்று ஒரு பெண் பிறந்தாள்.

இவ்வாறு ராஜ்யத்தை ஆண்டு சுகபோகங்களை எல்லாம் அனுபவித்து வந்த பிரியவிரதன், தான் சம்சார சாகரத்தில் உழன்று தவிப்பதை நினைந்து வருந்தினன். ஆகவே, அதிலிருந்து விடுபட எண்ணி, தம் புதல்வர்களுக்கு நாட்டைப் பிரித்துக் கொடுத்து விட்டு, திரும்பவும் பகவானுடைய தியானத்தில் ஈடுபடத் தொடங்கினன். சொர்க்கம், பாதாளம், பூலோகம் இந்த மூன்றையும், அவற்றிலுள்ள பொருள்களையும் நரகம்போல் வெறுத்தான்; தியான மார்க்கத்தில் ஈடுபட்டு வீடுபேற்றை அடைந்தான்.

தன் தந்தை பிரியவிரதனின் கட்டளைப்படி, ஜம்புத்தீவத்தை ஆக்னீத்ரன் என்பவன் ஆண்டு வந்தான். அங்கு இருக்கும் குடிமக்களைத் தன் சொந்தக் குழந்தைகள் போல் பேணிப் பாதுகாத்தான்.

இப்படி ஆட்சி செய்து வரும்போது, இல்லற தருமத்தை மேற்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் ஆக்னீத்ரனுக்கு உண்டாயிற்று. ஆகவே, தனக்கு மனைவி ஒருத்தி வேண்டும் என்ற எண்ணத்துடன், தேவ மடந்தையர் விளையாடும் மந்தர மலைக்கு அருகே சென்று, ஒரு குகையிலிருந்து, பிரம்ம தேவரை ஆக்னீத்ரன் தியானித்தான்.

பிரம்ம தேவர் இதை அறிந்து, தமது சபையின் பாடகியான பூர்வசித்தி என்னும் அப்சரசை மந்தர மலைக்கு அனுப்பினுர்.

அவள் ஆக்னீதரன் தவம் செய்யும் ஆசிரமத்துக்கு அருகே இருக்கும் பூந்தோட்டத்துக்கு வந்தாள். அவளுடைய பாதத்தில் அணிந்து இருக்கும் சிலம்பொலியைக் கேட்டு, தியானத்தில் இருக்கும் ஆக்னீத்ரன் கண்களைத் திறந்து பார்த்தான்.

அப்போது தனக்கு முன்னே தேவ மடந்தை ஒருத்தி வருவதை அக்னீத்ரன் கண்டான். அவளுடைய நடை, பேச்சு, தோற்றம் முதலியவற்றில் மயங்கி, அருகே சென்றான். அவளை நோக்கி, "பெண்ணே! நீ யார்? மகரிஷிகள் தவம் செய்யும் இந்த மலைக்கு நீ எதற்காக வந்தாய்? உனது சாயலும் தோற்றமும் நடையுடை பாவனைகளும் இந்த ஆசிரமத்துக்கு ஒரு சோபையை உண்டுபண்ணுகின்றன; நீ வந்தவுடன் இந்த ஆசிரமம் நறுமணத்தால் கமழ்கிறது. உன்னை நான் நேசிக்கிறேன். என்னிடம் பிரம்மதேவர் உன்னை அனுப்பி இருப்பதால், உன்னை நான் விட மாட்டேன். எனது மனமும் கண்ணும் உன்மீதே படிந்துவிட்டன. உன் தோழியர்களையும் அழைத்துக்கொண்டு வா. போகலாம்" என்று பிரியத்துடன் சொன்னான்.

ஆக்னீத்ரனுடைய விருப்பத்துக்கு இசைந்து, பூலோகத்தில் ஜம்புத் தீவத்தில் தங்கி, அந்தத் தேவ மடந்தை போக போக்கியங்களை அனுபவித்தாள்.

இவர்களுக்கு ஒன்பது புதல்வர்கள் பிறந்தார்கள்; இந்த ஒன்பது பிள்ளைகளையும் ஆண்டுக்கு ஒரு பிள்ளை வீதம் ஒன்பது ஆண்டுகளில் பூர்வசித்தி பெற்றாள். அந்தப் பிள்ளைகளை ஆக்னீதரனிடம் விட்டுவிட்டு, அந்தத் தேவமடந்தை பிரம்ம லோகம் திரும்பினாள்.

தாயாரின் கண்காணிப்பில் வளர்ந்த அந்தக் குழந்தைகள் ஒன்பதின்மரும் பலத்திலும் உறுதிப்பாட்டிலும் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் ஒன்பது பேர்களுக்கும் ஜம்புத் தீவத்தை, ஒன்பது கண்டங்களாக ஆக்னீத்ரன் பிரித்துக் கொடுத்தான். தத்தம் பெயர்களை வைத்து ஒவ்வொரு கண்டத்தையும் ஒவ்வொருவரும் பரிபாலித்து வந்தார்கள்.

ஆக்னீத்ரன் அந்த அப்சரஸிடம் அளவற்ற பிரியம்

வைத்திருந்தான்; ஆகவே, அவள் வசிக்கும் உலகத்துக்கு அவனும் போய்விட்டான்.

ஆக்னீத்ரனின் புதல்வர்கள் ஒன்பது பேரும், மேருவின் புதல்வியர் ஒன்பதின்மரைத் திருமணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்தினார்கள்.

## ரிஷப தேவர்

ஆக்னீத்ரருடைய புதல்வர்களில், நாபி என்பவன் அனைவரிலும் மூத்தவன். இவன் மனைவி பெயர் மேரு

இவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை. ஆகவே, அதன் பொருட்டு, நாபி, பெரிய வேள்வி ஒன்றை நடத்தினார். அடியார்களின் விருப்பத்துக்கு அருள்பாலிக்கும் நாராயணன், நாபிக்குத் தரிசனம் தந்தார்.

நாராயணனுடைய திவ்ய தரிசனம் கிடைத்ததும், தரித்திரனுக்குப் பணக் குவியல் கிடைத்தது போல மகிழ்ச்சி அடைந்து, ரித்விக்குகளும் சபையினரும், நாபியும் எழுந்து நின்று நாராயணப் பெருமானை வணங்கினார்கள்: முறைப்படி பூசனை செய்து அவரைத் துதித்தார்கள், "பெருமானே! நாங்கள் நடத்தும் பூசனையாலும் யாகத்தாலும் உமக்கு எவ்வித பலனும் இல்லை என்பதை நாங்கள் அறிவோம். ஆயினும் எங்கள் விருப்பங்கள் நிறைவேறும் பொருட்டே பூசனை, யாகம் முதலியவற்றை உமக்கு நாங்கள் செய்கிறோம். நாங்கள் மெய்ம் மறந்து இருப்பினும், உன் நாமங்களை எப்பொழுதும் சொல்லும் பேற்றினை எங்களுக்கு நீர் நல்க வேண்டும். இந்த அரசன் தனக்கு ஒரு பிள்ளை வேண்டும் என்றும், அதிலும் உம்மைப்போல ஒரு பிள்ளை வேண்டும் என்றும் ஆசைப்படுகிறான். குபேரனை அணுகிய ஒருவன் அரிசி

னொய் வேண்டும் என்று இரப்பதுபோல, குழந்தைச் செல்வத்தையே, இந்த மன்னன் புருஷார்த்தமாகக் கருது கிறான். இது உமது மாயையே யன்றி வேறு இல்லை. இந்த ஒரு சிறு விருப்பத்துக்காக உம்மை நாங்கள் அழைத்தது, உம்மை அவமதித்ததற்குச் சமம் ஆகும். அதற்காகத் தாங்கள் எங்களைப் பொறுத்தருள வேண்டும்'' என்று சொன்னார்கள்.

பொருள் செறிவுடைய இந்தத் தோத்திரத்தைக் கேட்டதும், நாராயண மூர்த்தி, கருணையுடன் அவர்களை நோக்கிப் பதில் சொல்லத் தொடங்கினார்.

''ரிஷிகளே! உங்கள் விருப்பம் பொய்க்கலாகாது. என்னைப் போல ஒரு பிள்ளை வேண்டும் என்று நீங்கள் விரும்பியபடியால் நானே வந்து, இந்த மன்னனுக்குக் குழந்தையாய்ப் பிறக்கிறேன்'' என்று அருள் செய்து விட்டு, மறைந்துவிட்டார்.

பிறகு மேரு தேவியின் கருப்பத்தின் மூலம் அவர், அவர்களுக்குக் குழந்தையாக அவதரித்தார்.

* * *

சகல இலட்சணங்களும் பொருந்திய இந்தக் குழந்தை, அறிவிலும் குணங்களிலும் நடையுடை பாவனைகளிலும் சிறந்து விளங்கி வளர்ச்சியடைந்து வந்தது.

அந்தணர்களும் அமைச்சர்களும் குடிமக்களும், தங்களுக்குத் தகுந்த அரசன் கிடைத்துவிட்டான் என்று மகிழ்ச்சி அடைந்தார்கள்; இந்தக் குழந்தை தங்களுக்கு அரசன் ஆவதை விரும்பினார்கள்.

இந்தக் குழந்தைக்கு ரிஷபன் என்று நாபி பெயர் சூட்டினார்.

ரிஷபன் நாட்டை ஆண்டு வந்த சமயம், இந்திரனின் பொறாமை காரணமாக, நாட்டில் மழை பெய்யவில்லை.

இதை அறிந்த ரிஷபன், தனக்கு இருக்கும் விசித்திர சக்தியைக் கொண்டு, தன் நாட்டில் மழை பொழியும்படி செய்தான்.

நாபி மன்னனும் மேரு தேவியும் நாட்டைத் தங்கள் புதல்வர் ரிஷபனிடம் ஒப்படைத்துவிட்டு, காடு சென்று தவ வாழ்வை மேற்கொண்டு, இறைவனிடம் பக்தி செலுத்தி, முக்தி அடைந்தார்கள்.

தன் தந்தை தவ வாழ்வை மேற்கொண்ட பின், ரிஷபன் நாட்டைப் பரிபாலித்து வந்தான். இந்திரன் தனக்குத் தந்த ஜயந்தி என்னும் பெண்ணிடம் நூறு பிள்ளைகளைப் பெற்றான்.

அவர்களில் மூத்த பிள்ளையின் பெயர் பரதன் என்பது. அவன் புகழத் தகுந்த குணங்கள் படைத்தவன். அநாப வர்ஷம் என்று வழங்கப் பெற்ற கண்டம், இவன் காலத்திலிருந்து பாரத வர்ஷம் என்று வழங்கலாயிற்று.

ரிஷப தேவர் ராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டிருக்கையில் ஒரு முறை பிரம்மாவர்த்தம் என்னும் க்ஷேத்திரத்துக்குச் சென்றார். அங்கே பிரம்ம ரிஷிகள் பலர் இருந்தார்கள்; குடிமக்களும், ரிஷப தேவருடைய புதல்வர்களும் இருந்தார்கள். அந்தச் சபையில் தம் புத்திரர்களுக்கு, மோட்ச தருமம் என்பதுபற்றி ரிஷப தேவர் உபதேசம் செய்தார் :

"தனது உடலை வளர்க்கும் பொருட்டு, பன்றி மலத்தைத் தின்னுகிறது. தேகம் இருப்பதால்தான் இன்பம் என்பதும் துன்பம் என்பதும் ஏற்படுகின்றன. ஆகவே, கர்மத்தை விட்டொழித்து, சம்சார பந்தத்தைத் துறந்து, ஆனந்தத்தை விளைவிக்கக் கூடிய தவநெறியில் ஈடுபட வேண்டும். சான்றோரை அடுத்து வாழ்ந்தால் அது மோட்சத்துக்கு வழியைக் காட்டும் என்றும், மாதர்களை அடுத்து வாழ்ந்தால், அது சம்சார பந்தத்தில் அழுத்தும்

என்றும் சொல்லுகிறார்கள் ஜீவன் வேறு; தேகம் வேறு. ஜீவனையே தேகமாக மதித்து மதிமயக்கம் அடைதல் கூடாது. முந்தின ஜன்மத்தில், அனுபவித்த புலன் நுகர்ச்சியின் பயனால் தான், ஒருவனுக்கு மீண்டும் ஜன்மம் ஏற்படுகிறது. கர்மம் செய்யச் செய்ய, மீண்டும் மீண்டும் ஜன்மம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். கர்ம பந்தத்திலிருந்து விடுபடுவதற்குப் பக்தி மார்க்கமே சிறந்த வழி'' என்று உபதேசம் செய்தார்.

இதன் பின்னர், தன் புதல்வன் பரதனிடம் நாட்டை ஒப்படைத்து அவனை அரசன் ஆக்கிவிட்டு, ரிஷப தேவர் புறப்பட்டுப் போய்விட்டார்.

உலக பந்தத்தில் ஈடுபடாமல் பைத்தியன் போலும் ஊமையன் போலும் நாடு முழுவதும் அவர் சஞ்சரித்தார். மக்கள் அவரை மதித்துப் போற்றுமல் அலட்சியமாய் நடந்துகொண்டார்கள்.

ரிஷப தேவர் இவற்றை எல்லாம் பொருட்படுத் தாமல் அலைந்து திரிந்தார். அப்போது தென் பகுதியில் இருக்கும் குடகு மலைச்சாரலுக்கு வந்தார். பித்தன்போல், காட்டில் சஞ்சரித்தபோது, மூங்கில் புதரில் ஏற்பட்ட தீயில் சிக்குண்டு, ரிஷப தேவர் தனது தேகத்தைத் துறந்தார்.

இந்தப் பூமியில் ஏழு சமுத்திரங்களும் ஏழு தீவங் களும் உண்டு. அவற்றில் ஜம்புத் தீவம் என்பது சிறப்புடையது. ஜம்புத் தீவத்தில் ஒன்பது கண்டங்கள் உண்டு. கண்டங்களை வர்ஷம் என்றும் சொல்லு வார்கள். வர்ஷங்களில் பாரத வர்ஷம் மிகவும் மேன்மை யானது.

## ஜட பரதர் சரிதம்

தம் தந்தையின் கட்டளைப்படி, பரதன் நாட்டைப் பரிபாலித்து வந்தார். விசுவரூபனுடைய புதல்வி பஞ்சஜனி என்பவளைத் திருமணம் செய்துகொண்டார்.

இவர்களுக்கு ஐந்து புதல்வர்கள் பிறந்தார்கள். அஜநாபம் என்னும் பெயருடன் விளங்கிய இந்த நாடு, பரதர் ஆளத் தொடங்கிய பின்னர், பாரத வர்ஷம் என்னும் பெயரைப் பெற்றது.

தம் தந்தையைப் போலவும் பாட்டனைப் போலவும், இந்த நாட்டைப் பரதர் அன்போடு பரிபாலித்துப் பாதுகாத்தார்; யாகம் முதலியவற்றைச் செய்து, பகவானை ஆராதித்தார்; இறைவனிடம் இடையறாத அன்பு செலுத்தினார்.

அனேக ஆயிரம் ஆண்டுகள் இவ்வாறு ஆட்சி செய்த பின்னர், தன் புதல்வர்களிடம் நாட்டை ஒப்படைத்துவிட்டு, தவம் செய்யும் பொருட்டு, புலகருடைய ஆசிரமத்துக்குப் பரதர் புறப்பட்டுப் போனார்.

அங்கே சக்ர நதிக்குப் பக்கத்திலே ஒரு ஆசிரமத்தில் தங்கி, கனி, மலர், தளிர், துளசி, நீர் இவற்றைக்கொண்டு இறைவனை உள்ளன்போடு வழிபட்டு வந்தார். பரிசுத்தமான ஆகாரத்தை உண்டு, புலன் அடக்கத்தோடு பகவானிடம் பக்தி செலுத்தினார்.

இப்படி பக்தி யோகத்தில் ஈடுபட்டு, பரத மன்னன் காலத்தைக் கழித்து வந்தார். அப்போது ஒரு நாள் பூசை முதலியவற்றை முடித்துவிட்டு, பிரணவத்தை ஜபித்துக்கொண்டு நதிக் கரையில் பரத மன்னன் உட்கார்ந்து இருந்தார்.

இது சமயம் பெண் மான் ஒன்று, சக்ர நதிக்கு வந்து, தண்ணீர் குடித்துக்கொண்டிருந்தது. அப்

போது காடு எல்லாம் எதிரொலிக்கும்படி சிங்கம் ஒன்று செய்த கர்ஜனையைக் கேட்டு, அந்தப் பெண்மான் பயந்து போயிற்று. இயல்பாகவே பயந்த சுவாபமுள்ள அந்தப் பெண்மான் நான்கு பக்கமும் மருண்டு விழித்தது; தண்ணீரைக் குடிக்காமலே, நடுக்கமுற்று, நதியின் மறு கரைக்கு அந்தப் பெண்மான் தாவிற்று. பயந்து நடுங்கித் தாவிய காரணத்தால், வேகம தாங்காது, அதன் வயிற்றில் இருந்த கர்ப்பம் நழுவி, ஆற்றின் கரையில் விழுந்தது.

அப்படி விழுந்த மான் குட்டியை, ஆற்றின் நீர் இழுத்துக்கொண்டு போயிற்று.

ஓடிய தாய் மானே, ஆற்றின் மறு கரையில் இருக்கும் ஒரு குகைக்குள் புகுந்து இறந்து போயிற்று.

மான் ஈன்ற குட்டியை, ஆற்றின் வெள்ளம் இழுத்துப் போவதைக் கவனித்த பரதர், அதன்மீது பரிவு கொண்டார். உற்றார் உறவினரை நேசிப்பதுபோல், நேசித்து, அந்த மான்குட்டியை, தமது ஆசிரத்துக்குப் பரதர் எடுத்து வந்தார்.

அந்த மான் குட்டியை அன்போடு பேணி வளர்த்தார்; அல்லும் பகலும் அதன் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும் அதன் அருகே இருப்பதிலும் பெரும் பொழுதைக் கழித்தார்.

இதனால் பகவானை வழிபடுவதும், அதற்குரிய நியம நிஷ்டைகளும் அவரிடம் நாளுக்கு நாள் குறைந்து போயின. "கால வசத்தினால் இந்த மான்குட்டி தன் இனத்தையும் உற்றார் உறவினரையும் விட்டு, என்பால் வந்திருக்கிறது. தாயாகவும் தந்தையாகவும் அண்ணனாகவும் தம்பியாகவும் உற்றார் உறவினராகவும் சுற்றத்தாராகவும் கருதி, ஒன்றையும் அறியாது. என்னிடம் இருந்து வருகிறது. தஞ்சம் அடைந்து என்னைப் பெரி

தும் நேசிக்கிறது. சான்றோர்கள் தஞ்சம் அடைந்தவனைப் புறக்கணித்துத் தள்ள மாட்டார்கள்; சொந்தக் காரியத்தைக்கூடக் கவனியாமல், தஞ்சம் அடைந்த எளியவர்களைக் காப்பார்கள்'' என்று சொன்னார்

இந்த எண்ணத்தின் பயனாய், இருக்கும்போதும் படுக்கும்போதும், நடக்கும்போதும், குளிக்கும்போதும், அந்த மான் குட்டியைப் பரதர் தன் அருகிலே வைத்துக் கொண்டார். எப்பொழுது பார்த்தாலும் அதன் நினைவாக இருந்தார். மலர், கனி, கிழங்கு, தர்ப்பை முதலியவற்றைக் கொணரும் பொருட்டு வெளியே செல்லும் போது, கொடிய விலங்குகள் தின்றுவிடும் என்று பயந்து, மான் குட்டியை உடன் தூக்கிச் சென்றார். ஆசிரமத்தில் இருக்கும்போது, மான்குட்டியை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சி விளையாடுவார். காலையில் எழுந்ததும் அந்த மானைப் பார்த்து, ''உனக்கு நலம் உண்டாகட்டும்''என்று அந்த மான் குட்டியைப் பிரியத்துடன் வாழ்த்துவார். சிறிது நேரம் காணாவிட்டால், வருத்தம் அடைவார். ''தாயை இழந்த இந்த மான் குட்டி எங்கே போயிருக்கிறது? புல் மேயப் போயிருக்கும் இந்த மான் குட்டி பிரியத்துடன் என்பால் திரும்பி வருமா? தனியே போயிருக்கும் இந்த மான் குட்டியை, செந்நாய் முதலியன கடித்துக் தின்றுவிட்டால் என் செய்வது? சூரியன் அஸ்தமித்துவிட்டது. இன்னும் அது திரும்பி வரவில்லையே! திரும்பி வந்து ஆடிக் குதித்து என்னை அது மகிழ்விக்குமா?'' என்று எப்பொழுது பார்த்தாலும் மான் குட்டியையே பரதர் நினைத்துக்கொண்டிருந்தார்.

அதனால் யோகம் செய்வதையும் பகவானிடம் பக்தி செலுத்துவதையும் பரதர் விட்டுவிட்டார். மோட்சத்துக்கு விரோதமானது என்று கருதி மனைவி மக்களை

விட்டு, காட்டுக்கு வந்த இவர், மான்குட்டிமீது பிரியம் கொள்ளக் காரணம் என்ன? பிராரப்த கர்மம்.

பரத முனிவர் மான் குட்டியிடம் பிரியம் காட்டி, அதன் நினைவாக இருந்து வந்த காலத்தில், எலி வளையைப் பாம்பு அணுகுவது போல, மரணம் அவரை அணுகிற்று; ஆகையால் தான் அன்புகொண்டிருந்த மான் குட்டியையும், தமது தேகத்தையும், இந்த உலகத்தையும் விட்டு, பரதர் உயிர் துறந்தார்.

மான் குட்டி நினைவாகவே இருந்து உயிர் துறந்த காரணத்தால், மறு ஜன்மத்தில் அவர் ஒரு மான்குட்டியாகப் பிறந்தார். முன் ஜன்மத்தில் அவர் யோகம் செய்திருந்தவராதலால், தாம் ஏன் மான் சரீரம் எடுக்க நேர்ந்தது என்பது பற்றிய நினைப்பு அவருக்கு இருந்தது. அதனால் மான் சரீரம் எடுத்து இருக்கும் பரத முனிவர் மிகவும் பச்சாதாபப்பட்டு வருந்தினார். "பகவானிடம் மனத்தைச் செலுத்தி யோகம் முதலியவற்றைச் செய்து வந்த நான், மான் குட்டியிடம் பிரியம் செலுத்தத் தொடங்கினேனே ஏன்? என்னே மடமை", என்று தன்னைத் தானே பரத முனிவர் கடிந்துகொண்டார்.

பிறகு தன்னைப் பெற்றெடுத்த தாய் மானை விட்டு விட்டு, சான்றோர்கள் வாழும் ஒரு ஆசிரமத்து அருகே சென்று வசிக்கத் தொடங்கினார். சருகு, புல், இலை, கொடி முதலியவற்றை உண்டு, தனது முடிவு காலத்தை எதிர்நோக்கிக் காத்து இருந்தார். பிறகு ஒரு முறை நீரின் நடுவே சென்றபோது, தனது மான் சரீரத்தை அவர் விட்டுவிட்டார்.

மான் ஜன்மத்தை விட்ட இந்தப் பரத முனிவர், மறு ஜன்மத்தில், அங்கீரஸ கோத்திரத்தைச் சேர்ந்த தவ சீலரான ஒரு அந்தணர்க்கு, அவருடைய இரண்டாம் மனைவி வயிற்றில் மகனாய்ப் பிறந்தார்.

இவருக்குப் பூர்வ ஜன்ம ஞானம் இருந்தபடியால், உற்றார் உறவினரின் பந்தத்தை வளர்த்துக்கொண்டால் தீமை நேரும் என்று பயந்து விலகி இருந்தார்; எதைச் செய்யினும் பகவானுடைய பாதாரவிந்தங்களை நினைத்துக்கொண்டே செய்தார். தன்னைப் பித்தன் எனவும், மூடன் எனவும், குருடன் எனவும், செவிடன் எனவும் பிறர் நினைக்கும்படி நடந்துகொண்டார்.

தன் புதல்வன் பித்தன்போல் இருப்பதை அறிந்த அந்த அந்தணர், புத்திர வாஞ்சையின் காரணமாக செய்ய வேண்டிய சமஸ்காரங்களைச் செய்தார்; கற்பிக்க வேண்டியவற்றைக் கற்பித்தார். மூடன்போல் இருக்கும் தன் புதல்வனைத் திருத்த முயன்றார். முடியாது போகவே, கவலை மேலிட்டு அவர் இறந்து போனார்.

பரதனுடைய தாய், மூத்தாளிடம் தன் பிள்ளை பரதனையும் புதல்வியையும் ஒப்படைத்துவிட்டு, தன் கணவனுடன் உடன்கட்டை ஏறி உயிர் துறந்தாள்.

மூத்தாளின் பிள்ளைகள் தங்கள் சகோதரன் பரதனை, பித்தன் என்றும் மூடன் என்றும் நினைத்து அவனை அலட்சியமாக நடத்தினார்கள்.

பரதனும் தன் மன நிலையைக் காட்டிக்கொள்ளாமல் பித்தனைப் போலவே நடந்துகொண்டார். வேலை செய்ய அவசிய நிலை தனக்கு இல்லாதிருப்பினும், பிறர் தரும் கூலியைப் பெற்றுக்கொண்டு கூலிக்காரன்போல வேலை செய்தார். கூலி மூலம் கிடைத்த உணவையும் யாசித்துக் கிடைத்த உணவையும் தெய்வாதீனமாகக் கிடைத்த உணவையும் உண்டு காலத்தைக் கழித்தார். அதிகமாகக் கிடைத்தாலும் சொற்பமாகக் கிடைத்தாலும், வெகு ருசியாய் இருந்தாலும், ருசியற்று இருந்தாலும், தேகத்தைப் பராமரிப்பதற்கு எவ்வளவு தேவையோ அந்த அளவுக்கு மட்டும் உணவை உண்டார். தேகத்

த்தைப் பேணிக் காப்பதில் அவர் கவனம் செலுத்தவில்லை; ஆடை முதலியன அணிந்துகொள்ளாமல் அழுக்கடைந்த கந்தையை உடுத்து, அரை அம்மணமாக இருந்தார்; மழை யென்றும் பாராமல் வெய்யில் என்றும் பாராமல் அலைந்து திரிந்தார்; குளிக்காமல் இருந்ததால் மேனியில் அழுக்குப் படிந்து இருந்தது. அவர் அணிந்திருந்த பூநூலும் கந்தையும் அழுக்கேறி இருந்தன.

இவருடைய பெருமையை அறியாத மூடர்கள், கேவலமான பிராமணன் என்றும் தீய நடத்தையுள்ள பிராமணன் என்றும் பரதரை நிந்தித்தார்கள். பிறரைப் போல, பரதனுடைய சகோதரர்களும் கூலி முதலியன கொடுத்து, பரதனிடம் வேலை வாங்கினார்கள். உயர்வு, தாழ்வு என்ற மனப்பான்மை இன்றி, அவர்கள் பணித்த வேலைகளை எல்லாம் பரதன் செய்தார். நொய், பிண்ணாக்கு, தவிடு, கொள்ளு முதலியவற்றை அவர்கள் கொடுத்தால் அவற்றை அமிர்தமாகப் பாவித்துப் பரதர் புசிப்பார்.

இப்படிப் பரதர் வாழ்ந்து வந்த காலத்தில், தலையாய திருடன் ஒருவன் அந்தப் பிரதேசத்தில் வசித்தான். தனக்குப் பிள்ளை பிறந்தால் பத்ரகாளிக்குப் நரபலி கொடுப்பது என அவன் வேண்டுதல் செய்துகொண்டிருந்தான்.

அவனுக்குப் பிள்ளை பிறந்தது. எனவே நரபலி கொடுப்பதற்கு, ஒரு ஆளை, அகப்பட்ட இடத்திலிருந்து பிடித்து வரும்படி திருடர் தலைவன் தம் பணியாளர்களை ஏவினான்.

அவனுடைய கட்டளைப்படி, வேலைக்காரர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். நள்ளிரவு நேரம். ஜட பரதர், மான், பன்றி முதலியன கெடுத்துவிடாதபடி வயல்களைக் காத்துக்கொண்டிருந்தார். எங்கு தேடியும் ஆள்

அகப்படாது போகவே, திருடனுடைய வேலைக்காரர்கள், ஜட பரதர் இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். பரண் மீது அமர்ந்து காவல் புரிந்துகொண் டிருக்கும் ஜட பரதரைப் பிடித்துக்கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் காளி கோயிலுக்கு போனார்கள்.

பிறகு முறைப்படி ஜட பரதரைக் குளிப்பாட்டி, புத் தாடை அணிவித்து, ஆபரணம், சந்தனம், பூமாலை, திலகம் முதலியவற்றால் அலங்காரம் செய்து, உணவு கொடுத்து, தூப தீபம் காட்டி, பாட்டு முதலியன பாடி, வாத்தியங்களை வாசித்து, நர பசுவை, பத்திரகாளி சந் நிதியில் உட்கார வைத்தார்கள்.

பூசாரி, கூர்மையான நுனியுள்ள ஒரு பயங்கர மான ஒரு கத்தியை எடுத்துக்கொண்டான். இழிந்த மனப்போக்குடைய அந்தப் பூசாரி, சம நோக்குடைய ஜட பரதரை வெட்டப் போவதைப் பார்த்ததும், தாங்க முடியாமல், பத்திர காளி அவர்களுக்குத் தரிசனம் தந்தாள்.

கோபாவேசத்துடன் வந்த அவள் பூசாரி கையில் இருக்கும் கத்தியைப் பிடுங்கி, பூசாரியின் தலையையும் பலி கொடுக்கும் பொருட்டு வந்திருந்தவர்களின் தலை களையும் துண்டித்து, தன் கூட்டத்தாருடன் சேர்ந்து, அவர்களின் குருதியைக் குடித்து, அட்டகாசம் செய்து கூத்தாடினாள்.

ஜட பரதரோ எதுவும் நேராதது போல் அங்கிருந்தது ஆச்சரியம் அன்று.

* * *

இதற்குப் பின்னர் ஒரு நாள் சிந்து நாட்டு அரசன் ரஹூகணன் என்பவன், கபில முனிவரிடம் தத்துவ உபதேசம் பெற விரும்பி, பல்லக்கில் போய்க்கொண்

டிருந்தான். பல்லக்குத் தூக்குவோருக்குத் தலைவன் தற்செயலாக ஜட பரதனைப் பார்த்தான். "இவன் திட காத்திரனாய் இருக்கிறான். கழுதை போலவும், எருது போலவும் சுமை தூக்குவதற்கு இவன் ஏற்றவன்" என்று கருதினான். ஆகவே ஜட பரதரையும் பலாத்காரமாய்த் தூக்கிப் போய், பல்லக்குச் சுமக்கும்படி செய்தான்.

பல்லக்குச் சுமப்பது தமது நிலைக்கு ஏற்றதல்ல; ஆயினும் ஜட பரதர் பல்லக்கைச் சுமந்து சென்றார். ஜீவ ஜந்துக்களை மிதித்துவிடக் கூடாது என்ற எண்ணத்தினால், ஜட பரதர், தாவித் தாவிச் சென்றபடியால் பல்லக்கு சம நிலையில் செல்லவில்லை. ஆகவே ரஹூகணன் பல்லக்குச் சுமப்போரிடம் "பல்லக்கை நிதானமாகத் தூக்கிச் செல்லுங்கள்; கோணலுமாணலுமாக நடக்க வேண்டாம்" என்று எச்சரித்தான்.

அப்போது பல்லக்குச் சுமப்போர், "அரசே! நாங்கள் நிதானமாய்த்தான் தூக்குகிறோம். புதிதாகத் தூக்குபவன், சரியாக நடக்கவில்லை. எங்கள்மீது தவறு இல்லை" என்று சொன்னார்கள்.

இதைக் கேட்டதும் அந்த மன்னன் நீறுபூத்த நெருப்புப் போல் இருக்கும் ஜட பரதனை நோக்கி, கிண்டலும் கேலியும் கலந்த தொனியில் பேசி, சரியாகப் பல்லக்கைச் சுமக்கும்படி சொன்னான்.

மன்னன் சொன்னதைத் தம் காதில் ஜட பரதர் வாங்கிக்கொள்ளாமல், முன் போலவே பல்லக்கைச் சுமந்து சென்றார்.

இதைப் பார்த்ததும் அரசன் ரஹூகணன் ஆத்திரமடைந்தான். அவன் ஜட பரதரை நோக்கி, "உயிர் இருந்தும் உணர்ச்சியற்ற பிணம்போல் நீ இருக்கிறாய்; எனது கட்டளையை மீறி நடக்கிறாய். யமன் உயிர்களைத்

தண்டித்துத் திருத்துவதுபோல், உன்னை நான் திருத்தப் போகிறேன்" என்று சொன்னான்.

இவ்வாறு அரசன் சொன்னதும், ஜட பரதர் கோபமின்றி, சிரித்த முகத்துடன் அந்த அரசனுக்குப் பதில் சொன்னார்: "அரசே! நீ சொன்னது அனைத்தும், உலக ரீதியில் பொருந்துமாயினும், என்னைப் பொருத்தவரை பொருந்தாது. சுமக்கிறவனுக்கு இருக்கும் பாரம் எனக்கு இல்லை. நான் சுமக்கவில்லை. நடக்க வேண்டியவனுக்கு, போய்ச் சேர வேண்டிய இடம் ஒன்று உண்டாயின் அது எனக்கு இல்லை; நான் நடக்கவும் இல்லை. பருத்திருப்பது, இளைத்து இருப்பது, பசி, தாகம், கோபம், ஆசை, மூப்பு, கவலை, தூக்கம் முதலியன இவை எல்லாம் தேகம் சம்பந்தப்பட்டனவே யன்றி, என் சம்பந்தம் உடையன அல்ல. தேகம்தான் பிறப்பு இறப்பு முதலியவற்றுக்கு உட்படுகிறதே யன்றி, ஆத்மாவுக்கு அவை நேருவது இல்லை. வேலைக்காரனாய் இருப்பதும் எஜமானனாய் இருப்பதும் நம் வசம் இல்லை. பிரம்மானந்தத்தில் திளைத்து இருக்கும் என்னை உன்னால் தண்டிக்கவும் முடியாது; சன்மானிக்கவும் முடியாது. அகந்தை உள்ளவன் என்ற கருத்துடன் என்னை நீ தண்டித்தாலும், அதனாலும் நீ எதிர்பார்க்கும் பலன் கிட்டாது" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு முன்போலவே ஜட பரதர் பல்லக்கைச் சுமந்து சென்றார்.

ஜட பரதரின் பேச்சையும் நடத்தையும் கவனித்த அரசன், பல்லக்கிலிருந்து இறங்கிக்கொண்டு, ஜட பரதரின் பாதங்களில் விழுந்து வணங்கினான். அரசன் என்ற கர்வத்தை விட்டொழித்து, அவரை நோக்கி அடியில் வருமாறு கேட்டான்:

"அந்தண சீலரே! தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும். தாங்கள் யார்? தங்களுடைய பிரம்ம தேஜஸைக் காட்டிக்கொள்ளாமல் தாங்கள் இருப்பதன் நோக்கம் யாது? உமது தோற்றமும் நடையுடை பாவனைகளும் பிறர் எள்ளி நகையாடும் நிலையில் இருக்கின்றன. நீர் யாருடைய புதல்வர்? யாருடைய சீடர்? தாங்கள் இருப்பது எங்கே? எதற்காக இங்கே வந்தீர்கள்? தாங்கள் கபில முனிவரா? தத்துவ உபதேசம் பெறும் பொருட்டு, திருமாலின் அம்சமான கபிலரிடம் நான் செல்லுகிறேன். தாங்கள் அனைத்தையும் மாயை என்று கூறுகிறீர்கள். அதன் பொருளை என்னால் அறிய முடியவில்லை. அரசன் என்ற முறையில் தண்டிப்பதும் பாதுகாப்பதும் எனது கடமையாகிறது. அது எப்படி மாயை யாகும்? தயவு செய்து, தாங்கள் அவற்றைப் பற்றி, எனக்கு உபதேசம் செய்யுங்கள்" என்று வேண்டினான்.

"அரசே! ஆத்மா, பரமாத்மா இவற்றைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது; ஆயினும் தெரிந்தவன் போல நீ பேசுகிறாய். ஆகவே சிறந்த அறிஞர் கூட்டத்தில் நீ சேர முடியாது. உயர்வு தாழ்வு என்னும் பேத புத்தியை, தத்துவ விசாரம் அறிந்தவர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். சுகம், துக்கம், பருமன், இளைப்பு என்பது எல்லாம் தேக சம்பந்தமானவையேயன்றி, ஆத்மா சம்பந்தப்பட்டவை யன்று. மனமே சம்சார பந்தத்துக்குக் காரணம் என்றும், சுகம், துக்கம், ஆசை, அன்பு, பகைமை எல்லாம் மனத்தாலேயே நேருகின்றன என்றும் அறிந்து, அந்த மனத்தை இறைவனுடைய பாதார விந்தங்களில் வைத்துவிட்டால் எல்லாப் பேத புத்தியும் வேற்றுமைக் குணங்களும் ஒழிந்து போகும்" என்று ஜட பரதர் பதில் சொன்னார்.

உடனே ரஹூகணன் அவரை நோக்கி, "பிராமணோத் தமரே! உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டு நீர் சஞ் சரிக்கிறீர்! உம்மை நான் வணங்குகிறேன்; நோயுற்று வருந்துபவனுக்கு மருந்தைப் போலவும், வெய்யிலால் நொந்தவனுக்கு குளிர்ந்த நீரைப் போலவும், தேகாபி மானம் உள்ள எனக்கு, நீர் கூறும் வார்த்தைகள் அமிர் தத்துக்கு ஒப்பாய் இருக்கின்றன. எனக்கு இருக்கும் சந்தேகங்களைப்பற்றி, பின்னர், நான் கேட்டுக்கொள் கிறேன். இட்பொழுது ஆத்ம சம்பந்தமாகத் தாங்கள் உபதேசித்ததை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதை எனக்கு விளக்கிச் சொல்ல வேண்டும். கருமமும் கருமத்தினால் விளையும் பலனும் மாயை என்று தாங்கள் கூறுகிறீர்கள். கண்கூடாகக் காணும் ஒன்றை நாம் எப்படி மாயை என்று நினைக்க முடியும்?" என்று கேட் டார்.

அதற்குப் பரதர், "அரசே! பூமியின் விகார ரூபமே மனிதனுகச் சஞ்சரிக்கிறது என்பதைத் தெரிந்துகொள்; பூமியின் விகாரத்தால் ஏற்பட்ட மானுட தேகம்; இரண்டு கால்கள், அவற்றுக்கு மேலே கணைக்கால்கள், தொடை, இடுப்பு, மார்பு, கழுத்து, தோள் முதலிய உறுப் புக்கள் ஒன்றின் மேல் ஒன்ருக இருக்கின்றன. அந்தத் தோள்மீது பல்லக்கு இருக்கிறது; அந்தப் பல்லக்கில் தான் என்னும் அகந்தையுள்ள சிந்து நாட்டு அரசன் இருக்கிருன். அவனும் பூமியின் மற்ருெரு விகார ரூபமே யன்றி வேறு இல்லை. பூமியின் விகாரமான இந்த ரூபங்கள் வெறும் மாயையே யன்றி வேறு இல்லை. அப்படி யிருக்கும்போது ஏழை எளிய மக்களைப் பல்லக் கைத் தூக்கச் செய்து துன்புறுத்துகிருய்; ஆனால் அவர் களை நீ காப்பதாக அகந்தையுடன் பேசுகிருய். மக் களைக் கொடுமைப்படுத்துவதால் நீ தீயவன்; கொடிய

வன்; உனது நடத்தையைச் சான்றோர் அங்கீகரிக்க மாட்டார்கள். அசையும் பொருள் அசையாப் பொருள் அனைத்தும் பூமியிலிருந்து உண்டாகிறது; பூமியிலேயே நசித்தும் போகிறது. ஆகவே, பூமிதான், விகாரத்தின் பொருட்டாய், வெவ்வேறு வடிவத்தையும் வெவ்வேறு பெயரையும் ஏற்கிறது. இந்த வேறுபாடுகள் எல்லாம் தெளிவற்ற புத்தியின் கற்பனைகளே யன்றி வேறு இல்லை. நித்தியமானது எது என்றால், அனைத்தையும் கடந்து நிற்கும் ஞான சொரூபமான பகவானே யாகும். அதனையே அவர்கள் வாசுதேவன் என்று சொல்லுகிறார் கள். அத்தகைய பகவானைப்பற்றிய ஞானத்தை ஒருவன் அடைய வேண்டுமாயின், அது தவத்தாலும், யாகத் தாலும் சாத்தியப்படாது; இல்லறத்திலிருந்து பரோப காரம் செய்தாலும் முடியாது; வேதங்களை அத்தியயனம் செய்தாலும் சாத்தியப்படாது; சான்றோரை அடுத்துத் தொண்டு செய்வதாலே ஒருவன் பிரம்ம ஞானத்தை அடையலாம். பகவானுடைய கதைகளைக் கேட்பதைத் தவிர்த்து, மற்றெதிலும் ஆசைப்படாமல் இருந்தால் ஞானம் உண்டாகும். அந்த ஞானத்தின் உதவி கொண்டு, சம்சார மார்க்கத்தைக் கடந்துவிட்டால், எவனும் மோட்சத்தை அடையலாம்" என்று சொல்லி, தான் யார் என்பதையும், தனது முற்பிறப்பு முதலியவற் றையும், பரதர் அவனுக்குச் சொன்னார்.

இவ்வாறு ரஹூகணனுக்குப் பரதர் ஆத்ம தத்துவத்தை உபதேசித்தார். சம்சார பந்தம் என்பது கொடுமையானது என்பதையும் அவனுக்கு விளக்கினார்.

## நாவலம் தீவு

பரதருடைய சரிதத்தைக் கேட்ட பின்னர், பரீட் சித்து மன்னன், சுகரை நோக்கி, "முனிவர் பிரானே!

பிரியவிரதனுடைய தேர் சென்றதன் பயனாய் ஏழு கடல்கள் உண்டாயின என்றும், அதனால் பூமியில் ஏழு தீவுகள் ஏற்பட்டன என்றும் தாங்கள் கூறினீர்கள். இந்த உலகம் அனைத்தும் பகவானுடைய ஸ்தூல சொரூபம் என்றும், இந்த சொரூபத்தில் மனத்தைச் செலுத்தினால் பிறகு பகவானுடைய சூட்சும சொரூபத்தை மனம் எளிதில் பற்றிக்கொள்ள முடியும் என்றும் சொன்னீர்கள். ஆகவே, பகவானின் ஸ்தூல சொரூபமான இந்தப் பிரபஞ்சத்தை எனக்கு விளக்கிக் கூற வேண்டும்'' என்று சொன்னார்.

அதற்குச் சுகர், ''அரசே! தமது மாயையினால் இறைவன் உண்டாக்கி இருக்கும் இந்தப் பிரபஞ்ச முழுவதையும் பற்றிக் கேட்டுத் தெரிந்துகொள்வதற்கு, நீடித்த ஆயுளுள்ள தேவர்களுக்குக்கூட முடியாது. ஆகவே, இந்தப் பிரபஞ்சத்தின் முக்கியமான சில பகுதிகளையும் அவற்றின் பெயர்களையும் விஸ்தாரத்தையும் உனக்கு நான் கூறுகிறேன்.

''இந்தப் பூமண்டலமானது, தாமரை மலரைப் போன்ற வடிவில் அமைந்திருக்கிறது. இதில் இருக்கும் ஏழு தீவங்களில், நடுவே இருப்பது ஜம்புத் தீவம் எனப்படும். இந்தத் தீவம் இலட்சம் யோசனை பரப்பை உடையது.

இந்த ஜம்புத் தீவம், எண்பதாயிரம் யோசனைப் பரப்புள்ள ஒன்பது வர்ஷங்களும், இமயம் முதலிய எட்டு மலைகளை எல்லைகளாகக் கொண்டு பிரிக்கப்பட்டுள்ளது.

இந்த ஒன்பது வர்ஷங்களுக்கு நடுவிலே இலாவிரதம் என்னும் வர்ஷம் இருக்கிறது.

இலா விருதம் என்னும் வர்ஷத்தின் நடுவிலே, குல பருவதங்களுள் சிறந்த மேரு என்னும் தங்க மலை இருக்கிறது.

இலாவிருத வர்ஷத்தின், தென் பாகத்தில் நிஷதம், ஹேமகூடம், ஹிமாலயம் என்று மூன்று மலைகள் இருக்கின்றன. இவை கிழக்குத் திக்கில் நீண்டு, ஹரிவர்ஷம், கிம்புரு வர்ஷம், பாரத வர்ஷம், ஆகிய நிலப் பகுதிகளுக்கு முறையே எல்லைகளாக இருக்கின்றன.

ஜம்புத் தீவத்தில், அதாவது நாவலம் தீவில்—மொத்தம் ஒன்பது வர்ஷங்கள்—அதாவது நாடுகள்—இருக்கின்றன அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| (1) குரு வர்ஷம் | — | மங்கோலியா. |
| (2) ஹிரண்மய வர்ஷம் | — | மஞ்சூரியா. |
| (3) ரம்யக வர்ஷம் | — | ருஷ்யா சைபீரியா. |
| (4) இலா விருத வர்ஷம் | — | இமயம்—திபேத். |
| (5) பத்ராச்வம் | — | சீனம். |
| (6) ஹரி வர்ஷம் | — | அரேபியா. |
| (7) கேது மாலம் | — | பாரசீகம், துருக்கி. |
| (8) கிம்புருஷம் | — | இமயத் தாழ்வரை. |
| (9) பாரத வர்ஷம் | — | இந்தியா. |

இந்த ஒன்பது வர்ஷங்களில், பாரத வர்ஷத்துக்குக் கர்ம பூமி என்று பெயர்; மற்ற எட்டு வர்ஷங்களும் புண்ணியம் செய்தவர்கள், தாங்கள் செய்த புண்ணியத்தை அனுபவிப்பதற்குரிய ஸ்தலங்கள் ஆகும். ஆகவே, அந்த நாடுகளைப் பூலோக சொர்க்கம் என்று சொல்லுகிறார்கள்.

இந்த வர்ஷங்களில் வசிப்பவர்களுக்கு ஆயுள் மிக அதிகம். தேவர்களுக்கு ஒப்பானவர்கள்; பதினாயிரம் யானைப் பலமுள்ளவர்கள்; வயிரம் போன்று உறுதியான உடலைப் பெற்றவர்கள்; மிக்க மகிழ்ச்சியுடன் இருப்பவர்கள்; திரேதா யுக மக்கள் சுகமாக இருப்பதைப்போல, மகிழ்ச்சியுடன் காலத்தைக் கழிப்பவர்கள்; செழிப்புமிக்க பிரதேசங்களில், தேவ மாதரை நிகர்த்த பெண்களுடன்

அவர்கள் ஆனந்தமாகப் புனலாடி, ஆனந்த மயமாய்ப் பொழுது போக்குகிறார்கள்.

இலா விருதத்தில், சிவபெருமான் ஒருவரே ஆடவர்; அங்கு வாழும் மற்ற அனைவரும் பெண்களே ஆவர். அங்கே வரும் ஆடவர்கள் பெண்ணாகிவிடுவார்கள். இப்படி அவர்கள் பெண்ணாக மாறுவதற்குப் பவானியின் சாபம் காரணம் ஆகும்.

இந்தச் சாபத்தைப் பற்றிய கதை பின்னர் சொல்லப் படும்.

இதன் பின்னர், ஒவ்வொரு வர்ஷத்தையும் பற்றி, சுகர் விவரித்துச் சொன்னார். கடைசியாக பாரத வர்ஷத்தைப் பற்றிக் கூறினார்.

பாரத நாட்டில் இருக்கும் ஆறுகள், மலைகள், மாந்தர்கள் ஆகியோரைப் பற்றிக் கூறினார்.

பாரத வர்ஷத்தின் பெருமைகளைத் தேவர்களே கொண்டாடுகிறார்கள்.

பாரத நாட்டில மனிதராகப் பிறந்தவர்கள் மிகுந்த புண்ணியம் செய்தவர்கள். அவர்களிடம் திருமால் தாமே மனமுவந்து அருள்பாலிக்கிறார். மானிட தேகம் பெற்றவர்களால் பகவானுக்குத் தொண்டு செய்ய முடியும். ஆகவே, பாரத வர்ஷத்தில் பிறப்பதை நாங்கள் விரும்புகிறோம். தவம், தானம், விரதம் முதலியவற்றால் கிடைக்கும் துச்சமான சொர்க்க சுகத்தால் யாது பயன்? சுக போகத்தில் மூழ்கிக் கிடப்பதால், சொர்க்க வாசிகளுக்கு, பகவான் நாராயணனின் பாதாரவிந்தத்தைப் பணிவதற்கு வாய்ப்பு இருப்பது இல்லை. கற்ப கோடி காலம் வாழ்ந்து, மீண்டும் பிறப்பதைக் காட்டிலும் அற்ப ஆயுள் இருப்பினும், பாரத நாட்டில் பிறப்பதே மேலானது; ஏனெனில் கர்ம பூமியில் பிறந்தவர்கள் மோட்சம் அடைவதற்கான மார்க்கத்தைக்

கடைப்பிடிக்க வாய்ப்புகள் உண்டு. எந்த இடத்தில் பகவான் நாராயணனுடைய கதையைக் கேட்கும் வாய்ப்புக் கிடையாதோ, எந்த இடத்தில் பகவானை ஆராதனை செய்யும் சாதுக்கள் இல்லையோ, அந்த இடம் சொர்க்கமாயினும் அதை நாம் போற்றக் கூடாது" என்று சொன்னார்.

*　　*　　*

ஜம்புத் தீவத்தை வருணித்த பின்னர், பிலட்சம் முதலிய மற்ற ஆறு தீவங்களையும் சுகர் வருணித்துச் சொன்னார். ஒவ்வொரு தீவத்தின் விஸ்தாரத்தையும் அதில் இருக்கும் மலை, ஆறு, உயிர்கள் முதலியவற்றையும் விவரித்துச் சொன்னார்; ஒவ்வொரு தீவத்தையும் சூழ்ந்து இருக்கும் சமுத்திரத்தைப் பற்றியும் கூறினார்.

இதன் பின்னர், சூரிய மண்டலம், சந்திர மண்டலம், துருவ மண்டலம், அதலப் முதலிய லோகங்கள் இவற்றைப் பற்றி எல்லாம் சுகர் விவரித்துச் சொன்னார்.

இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் பகவானுடைய ஸ்தூல சொரூபம் ஆகும். தமது மாயையினால், இவற்றைப் பகவான் உண்டுபண்ணி இருக்கிறார்.

## அஜாமீளன் கதை

தீவங்கள், வர்ஷங்கள், சூரிய மண்டலம், சந்திர மண்டலம், பாதாள உலகம், நரகம் முதலியவற்றைப் பற்றி, சுகர் சொல்லி முடித்தார்.

அதன் பின்னர் பரீட்சித்து மன்னன் அவரை நோக்கி, "முனிவர் பிரானே! பிரவிருத்தி மார்க்கத்தில் ஈடுபட்டால் அடிக்கடி பிறவி நேரும் என்றும், அதனால் சொர்க்க சுகம் கிட்டுமே யன்றி, மோட்சம் கிட்டாது என்றும் சொன்னீர்கள். மோட்சம் அடைய விரும்புகிறவன் நிவர்த்தி மார்க்கத்தில் ஈடுபட வேண்டும் என்

றும் கூறினீர்கள். நரகத்தை அடைந்த மனிதன் எதைச் செய்தால், துன்பங்களை அனுபவியாமல் தப்ப முடியும்? அதைப்பற்றி எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று வேண்டினன்.

அதற்குச் சுக முனிவர், ''அரசே! மனம், வாக்கு காயங்களினல் செய்த பாவங்களுக்கு, அவற்றின் மூலம் பிராயச்சித்தம் செய்துகொள்ளாவிடில் நரக வேதனை களிலிருந்து யாரும் தப்ப முடியாது. நோயின் காரணத்தை அறிந்து, அதற்குத் தகுந்த மருந்தை மருத்துவன் கொடுப்பது போல், தான் செய்த பாவங்களுக்குத் தகுந்த பிராயச்சித்தத்தை இறப்பதற்கு முன்னர் ஒருவன் செய்துகொள்ள வேண்டும்'' என்று பதில் சொன்னர்.

இப்படி சுக முனிவர் சொன்னதும் பரீட்சித்து மன்னன் அவரிடம், ''முனிவர் பிரானே! பாவம் செய்வது தீமை பயக்கும்; அரச தண்டனைக்கு உட்படுத்தும்; நரக வேதனையைத் தரும் என்பது தெரிந்து இருந்தும், திரும்பத் திரும்ப மனிதன் பாவம் செய்வதை நாம் பார்க்கிறோம். தெரிந்து இருந்தும், வேண்டும் என்றே பாவம் செய்பவன், பிராயச்சித்தம் செய்வதன் மூலம் பாவ நிவர்த்திகொள்வது சாத்தியமா? குளித்த பின்னர், யானை, தானே மண்ணை வாரித் தமது உடம்பில் போட்டுக்கொள்வதைப் போலவே, பிராயச் சித்தம் செய்வதும் பயனற்ற வேலையாகாதா?'' என்று கேட்டான்.

பிராயச் சித்தம் செய்வதன் மூலம் பாவங்கள் அனைத்தையும் போக்கிவிட முடியாது. கல்வி யறிவு இல்லாதவர்களுக்குத்தான் பிராயச் சித்தம் ஏற்பட்டு இருக்கிறதே யொழிய, படித்த ஞானிகளுக்குப் பிராயச் சித்தம் தேவை இல்லை. ஞானத்தின் மூலம்தான், கர்ம பந்தத்தை நாசம் செய்ய முடியும்; ஆரோக்கியமான

உணவை உண்பவன் ஆரோக்கியமான தேகத்தைப் பெறுவதுபோல, நியமம் முதலியவற்றைக் கடைப் பிடித்து வாழும் மனிதன் தத்துவ ஞானத்தை அடைகிறான். நெருப்பு, மூங்கில் புதரை எரிப்பதுபோல, தவம், பிரமச்சரியம், அடக்கம், தியாகம், சத்தியம், ஆசாரம் முதலியவற்றால், பாவங்களை அவர்கள் எரித்துவிடுகிறார்கள்; சூரியன் பனியைப் போக்குவதுபோல, பகவானிடம் செலுத்தும் பக்தியினால் சிலர் பாவங்களைப் போக்கிக் கொள்கிறார்கள். ஆயினும், சகல பாவங்களையும் போக்கிக்கொள்வதற்கு, பகவானிடம் பக்தி செலுத்துவதைக் காட்டிலும் சிறந்த மார்க்கம் வேறு கிடையாது. பகவானுடைய பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே யம பயம் விலகிப் போகும் என்பதை விளக்க ஒரு கதை கூறுகிறேன் கேள்" என்று சொல்லி, அடியில் வரும் கதையை, பரீட்சித்து மன்னனுக்கு, சுகர் சொன்னார் :

கன்யா குப்ஜம் என்னும் நாட்டில் அஜாமீளன் என்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் ஒழுக்கம் கெட்டவன்; சூத்திரப் பெண் ஒருத்தியுடன் தொடர்பு கொண்டு, அந்தப் பிராமணன் வாழ்க்கை நடத்தி வந்தான். சூதாட்டம், வஞ்சகம், சூழ்ச்சி போன்றவற்றில் ஈடுபாடு கொண்டு, கீழ்த்தரமான துறைகளில் சென்று, தன் மனைவி மக்களை அந்தப் பிராமணன் காப்பாற்றி வந்தான். பிற உயிர்களை வாட்டி வதைத்து, சான்றோர் பழிக்கும் துறைகளில் கவனம் செலுத்தி, காலத்தையும் பொழுதையும் அவன் கழித்து வந்தான். வயது எண்பத்தெட்டு நடைபெற்றுக்கொண் டிருந்தது. வயது முதிர்ந்த இந்தப் பிராமணனுக்குப் பத்துப் புதல்வர்கள் பிறந்தார்கள்; அவர்களில் கடைசியில் பிறந்த மகனுக்கு, அவன் நாராயணன் என்று பெயர் வைத்து இருந்தான்.

தன் இளைய புதல்வன் நாராயணனை அஜாமீளன்

அபாரமாக நேசித்தான் ; நாராயணன் பேசும் இனிய மொழிகளைக் கேட்டு அக மகிழ்ந்தான். தான் சாப்பிடு வதையும் பருகுவதையும், தன் புதல்வன் நாராயணனுக் குப் பிரியத்தோடு அவன் கொடுப்பான்; நாராயணன் விளையாடுவதைப் பார்த்துப் பார்த்து, புளகாங்கிதம் அடைவான். தன் புதல்வன் நாராயணனைப் பேணி வளர்ப்பதில் அவனுடைய கவனம் முழுதும் சென்றதே யல்லாமல். தனக்கு மரண காலம் சமீபித்துவிட்டதை அந்தப் பிராமணன் அறிந்தான் இல்லை.

இப்படி இருக்கும்போது. மூன்று யம தூதர்கள் பாசக் கயிற்றுடன் வந்தார்கள். அவர்களுடைய முகம் கோணலாய் இருந்தது; மேனியில் மயிர்கள் குத்திட்டு மேல் நோக்கி நின்றன. தோற்றம் வெகு பயங்கரமாய் இருந்தது.

தன் உயிரைக் கவர இவர்கள் வந்திருக்கிறார்கள் என்பது தெரிந்து, அஜாமிளன் மனம் கலங்கினன், தன் புதல்வன் நினைப்பு வந்தது. விளையாடிக்கொண்டிருக் கும் தன் புதல்வனை, "நாராயணா!" என்று கூவி அழைத்தான்.

இறக்கும் தருணத்தில் இருக்கும் அஜாமிளன் பக வான் பெயரைச் சொல்லி, இவ்வாறு அழைத்ததும், பகவானுடைய ஊழியர்கள் அஜாமிளனிடம் விரைந்து வந்தனர். தமது சக்தியினால் யம தூதர்களைத் தடுத்து, அஜாமிளனை அவர்கள் காப்பாற்றினர்.

தங்களைத் தடுத்த திருமாலின் ஊதியர்களை நோக்கி, "நீங்கள் யார்? எதற்காக யமனுடைய கட்டளையை நிறைவேற்ற விடாது எங்களை நீங்கள் தடுக்கிறீர்கள்? நீங்கள் எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் தேவர் களா? உப தேவர்களா? அல்லது சித்தர்களா? உங்கள் கண்கள் தாமரை மலரைப்போல் இருக்கின்றன. மேனி

வெகு பிரகாசமாய் இருக்கிறது; உடம்பில் பட்டுப் பீதாம் பரம் அணிந்து இருக்கிறீர்கள்; உங்களுக்கு நான்கு கைகள் இருக்கின்றன; கத்தி, கதை, சங்கு, சக்கரம் முதலியவற்றை வைத்துக்கொண்டு இருக்கிறீர்கள்; கிரீடமும் குண்டலங்களும் அணிந்து மிகுந்த சோபையுடன் திகழும் தாங்கள் யார்? யம தூதர்களான எங்களை, எதன் பொருட்டு நீங்கள் தடுக்கிறீர்கள்?'' என்று யம தூதர்கள் கேட்டார்கள்.

யம தூதர்கள் இவ்வாறு கேட்டதும் திருமாலின் ஊழியர்கள் சிரித்தனர். பிறகு, அவர்களை நோக்கி, ''நீங்கள் யமனுடைய தூதர்கள் என்பது உண்மை யாயின், எது தர்மம் எது அதர்மம் என்பது உங்களுக் குத் தெரிந்து இருக்க வேண்டும்; தண்டனை என்பது யாது? யாரைத் தண்டிக்க வேண்டும்? யாரைத் தண்டிக் கக் கூடாது? மனிதர்கள் அனைவரும் தண்டிக்கத் தகுந் தவர்களா? அல்லது சிலருக்கு மட்டும்தான் தண்டனை என்பது உண்டா?'' என்று கேட்டார்கள்.

இவ்வாறு அவர்கள் கேட்டதும் யம தூதர்கள் அவர் களிடம், ''வேதம் எதைத் தர்மம் என்று கூறுகிறதோ அது தர்மம்; எதை வேதம் விலக்குகிறதோ அது அதர் மம். வேதம் என்பது யாராலும் செய்யப்பட்டதன்று; வேதம் சுயமாகத் தோன்றியது; ஆகவே, பகவான் நாராயண மூர்த்தியும் வேதமும் ஒன்றே. தேகத்தை உடையவர்கள், கர்மம் செய்யாமல் இருக்க முடியாது. கர்மத்தில் தர்மமான கர்மமும் உண்டு; அதர்மமான கர்ம மும் உண்டு; அதர்மம் செய்கிறவன், தான் செய்த பாவங் களுக்கு ஏற்பத் தண்டனை அடைகிறான். சாத்விகம், ராஜஸம், தாமஸம் என்னும் குணங்களுக்குத் தக்கபடி, சுகம் அனுபவிப்போர், துக்கம் அனுபவிப்போர், மூடர் கள் என மாந்தர்கள் மூன்று வகையினராக இருப்பதைப்

போலவே, மறு பிறவியிலும், இந்த மூன்று நிலைகளும் நிச்சயம் இருக்கும் என ஊகிக்க இடம் உண்டு. வசந்த காலத்தில் மரத்தில் இருக்கும் மலர்கள், சென்ற காலம், நிகழ் காலம், வரும் காலம் மூன்றையும் அறிவிப்பதைப் போல, இந்தப் பிறவியைக் கொண்டு, முற்பிறவியையும் வரும் பிறவியையும், அவன் செய்த தர்மம் அதர்மம் இரண்டையும் நிதானித்து அறியலாம்.

"இதைப் போலவே ஒரு ஜீவன், முன் ஜன்மத்தில் தான் செய்த தர்மம் அதர்மம் ஆகியவற்றுக்குத் தக்க படி, மறு ஜன்மத்திலும் தர்மத்தையும் அதர்மத்தையும் செய்கிறான்.

"சம்சார பந்தத்தில் கிடந்து உழலும் ஒரு ஜீவன், அதிலிருந்து விடுபட வேண்டுமாயின், இறைவன்பால் பக்தி செலுத்த வேண்டும்.

"அஜாமிளன் என்னும் இந்தப்பிராமணன் மறைகளை ஓதினவன்; நல்ல குணங்களுள்ளவன்; நல்ல ஒழுக்க முள்ளவன்; அமைதியானவன்; அன்பானவன்; உண்மையே பேசுபவன்; குரு, அக்கினி, விருந்தினர், பெரி யோர் ஆகியோரை மனமுவந்து ஆராதிப்பவன்; எல்லா ரையும் நேசிப்பவன்; தாய் தந்தையருக்குக் கட்டுப்பட்டு நடப்பவன்.

"இத்தகைய நல்ல சுபாவங்கள் படைத்த இந்த அஜாமிளன், ஒரு நாள், தன் தந்தை கட்டளை இட்டதற்கு இணங்க, பழம், மலர், தருப்பை, சமித்து முதலியன சேகரித்து வரும் பொருட்டுக் காட்டுக்குச் சென்றான். அங்கே போதிய அளவு பழம் முதலியவற்றைச் சேகரித் துக்கொண்டு ஊருக்குத் திரும்பிக்கொண்டிருந்தான்.

அப்போது வழியில், மது அருந்திவிட்டு, இழிகுலத் தான் ஒருவன் தாசி ஒருத்தியுடன் வெட்கம்

சல்லாபித்துக்கொண் டிருப்பதை அஜாமீளன் பார்த்தான்.

இருவரும் கள்ளைக் குடித்துவிட்டு, மதிமயக்க முற்று ஆடிப் பாடிச் சிரித்துக்கொண்டும், ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக்கொண்டும், கோலாகலமாக இருப்பதை அவன் கண்டான்.

இந்தக் காட்சியைப் பார்த்ததும், அஜாமீளன் மன்மத பாணத்துக்கு இரையானுன். தான் கற்ற கல்வியறிவின் பலத்தைக் கொண்டு, எவ்வளவோ முயன்றும், அவனுல் ஆசையைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அந்தத் தாசியை நினைந்து நினைந்து, ஆசை அதிகமாகி, அந்தண தர்மத்தைவிட்டு, அந்தத் தாசியுடன் கூடி வாழ்க்கை நடத்தத் தொடங்கினுன் அஜாமீளன்.

தன் தந்தை தேடி வைத்திருந்த பணம் அனைத்தையும், அந்தத் தாசியின் மனத்தை மகிழ்விப்பதற்காக அவன் செலவிட்டான்; அவளுடைய கடைக்கண் பார்வைக்கு மயங்கி, நல்ல குலத்தில் பிறந்த தன் சொந்த மனைவியையும் அஜாமீளன் மறந்தான். அந்தத் தாசியின் மனத்தை மகிழ்விக்கும் பொருட்டு, நியாய முறையிலும் அநியாய முறையிலும் பொருள் ஈட்டத் தொடங்கினுன். நீதி நெறிக்குப் புறம்பாகவும், பெரியோர்களால் நிந்திக்கத் தக்க வழியிலும் வாழ்க்கை நடத்தி வந்தபடியால், அஜாமீளன் பாவி ஆனுன். அவன் அசுத்தமான உணவை உண்டு, அசுத்தமாகக் காலத்தைக் கழித்தான். பாவியான இவன் தாம் செய்த பாவங்களுக்கு உரிய பிராயச்சித்தம் எதையும் இதுவரை செய்யவில்லை. ஆகவே, அதற்குத் தக்கபடி இவனைத் தண்டிக்க, யம தர்மராஜரிடம் நாங்கள் இவனை அழைத்துப் போகிறேம்'' என்று சொன்னுர்கள்.

யம தூதர்கள் சொன்ன இந்தப் பதிலைக் கேட்டு, நியாயம் அறிந்த திருமாலின் ஊழியர்கள் அடியில் வரும் பதிலை அவர்களுக்குச் சொன்னார்கள்: "தர்மத்தைப் பரிபாலிப்பதற்கு என ஏற்பட்ட சபையில், அதர்மம் தலைதூக்க ஆரம்பித்திருப்பது வருந்தத்தக்க நிலையாகும். பாவம் செய்பவர்களைத் தண்டிக்கவும், செய்யாதவர்களைப் பாதுகாப்பதற்கும் ஏற்பட்ட நீங்களே, தண்டிக்கத் தகாதவர்களைத் தண்டிக்க முற்பட்டால், பிறகு குற்றம் செய்யாதவர்கள் யாரைச் சரண் அடைவார்கள்? நீங்களே நீதிக்குப் புறம்பாக நடப்பது முறையா? கோடி ஜன்மங்களில் செய்த பாவங்கள் அனைத்தும், ஒரு முறை ஹரியின் நாமத்தைச் சொன்னால் விலகிப் போகும் என்பது உங்களுக்குத் தெரியாதா? இந்த அஜாமிளன், 'நாராயணா!' என்று திருமாலின் நாமத்தைக் கூறி, தான் இதுவரை செய்த பாவங்கள் அனைத்துக்கும் பிராயச்சித்தம் செய்துகொண்டுவிட்டான்.

"தங்கத்தைத் திருடினவன், கள் குடித்தவன், நண்பனுக்குத் துரோகம் செய்தவன், பிராமணனைக் கொன்றவன், குருவின் மனைவியைப் புணர்ந்தவன், பசு, பெண், அரசன், தந்தை, ஆகியோரைக் கொன்றவன், இத்தகைய கொடிய பாவிகளும் திருமாலின் நாமத்தைச் சொல்வார்களாயின், அவர்களைக் காக்கத் திருமால் திருவுளம் பற்றுவார். பகவானை நினைக்க நினைக்க ஒருவன் செய்த பாவங்கள் நசித்துப் போகின்றன. மற்ற பிராயச்சித்தம் இதற்கு ஈடாகாது. ஆகவே, இறக்கும் தறுவாயில் பகவானின் திருநாமத்தை அஜாமிளன் உச்சரித்ததால், தான் செய்த பாவங்கள் அனைத்துக்கும் இவன் பிராயச்சித்தம் செய்துவிட்டான். ஆகவே, இவன் உயிரை நீங்கள் கவர்ந்து செல்ல வேண்டாம். "நாராயணா!" என்று தன் மைந்தனை இந்த அஜாமிளன் அழைத்தானே

யன்றி, பகவானை இவன் நினைக்கவில்லை என்ற கருத்து உங்களுக்கு வேண்டாம். நெருப்பு என்பதை அறிந்து தொட்டாலும் அல்லது அறியாமல் தொட்டாலும், தப்பாது அது சுடச் செய்யும். அதைப்போல, இறைவனுடைய திருநாமத்தைத் தெரிந்து சொன்னாலும், அல்லது தெரியாமல் சொன்னாலும் பகவானுடைய பெயரைச் சொன்னதற்கு உரிய பலன் கிட்டியே தீரும். பாவம் செய்த ஒருவன் மனு முதலியவர்கள் விதித்த பிராயச்சித்தம் செய்வானாயின், அதனால் அவன் செய்த பாவம் நிவர்த்தியாகுமே யன்றி, அதர்மத்தில் நாட்டமுள்ள மனதை அது சுத்தப்படுத்தாது. அப்படியின்றி, பகவானுடைய நாமத்தை அவன் உச்சரிப்பானாயின், அதனால் அவனுடைய பாவம் நிவர்த்தியாவதோடு அவனுடைய மனமும் பரிசுத்தம் அடைகிறது. அறிந்து சாப்பிட்டாலும் சரி, அறியாமல் சாப்பிட்டாலும் சரி, நோயாளியை மருந்து குணப்படுத்துவது போல, அறிந்து சொன்னாலும் சரி, அறியாமல் சொன்னாலும் சரி, பகவானுடைய நாமத்தைச் சொல்லுவது ஒருவன் செய்த பாவம் அனைத்தையும் போக்கிவிடுகிறது. யம தூதர்களே! இதுபற்றி உங்களுக்கு ஐயம் இன்னும் இருக்குமாயின், யமதர்மனிடம் சென்று, விவரத்தைக் கூறி உங்களுக்கு இருக்கும் ஐயத்தைப் போக்கிக்கொள்ளுங்கள்" என்று சொன்னார்கள்.

இவ்வாறு திருமாலின் ஊழியர்கள் கூறியதும், அஜாமீளனின் உயிரைக் கவருவதை விட்டுவிட்டு யமலோகம் திரும்பி, நடந்த விவரத்தை, யமதர்ம ராஜனிடம் அவர்கள் தெரிவித்தார்கள்.

யம பாசத்திலிருந்து, அஜாமீளன் இவ்வாறு விடுபட்டான். பயம் நீங்கி, திருமாலின் ஊழியர்களைத் தலை தாழ்த்தி அவன் வணங்கினான். தங்களிடம் எதையோ

கேட்க அந்த அந்தணன், யத்தனிப்பதைப் பார்த்ததும், திருமாலின் ஊழியர்கள் ஒன்றும் சொல்லாது, அந்த இடத்திலேயே மறைந்துவிட்டார்கள்.

அஜாமீளனே, ஊழியர்கள் உரையாடினதைச் செவிமடுத்ததனுல், பக்தி மார்க்கமே நலம் பயக்கும் என்பது தெரிந்து, பகவானிடம் பக்தி செலுத்தத் தொடங்கினுன். தான் இதுவரை செய்த பாவத்தை நினைந்து, பரிதபித்தான். "சான்ருேர் நிந்திக்கும் தீய வழிகளில் சென்று எனது வாழ்க்கையை முற்றும் நான் பாழாக்கிக்கொண்டு விட்டேன்; என்னை நெருப்பிலிட்டுச் சுடினும் நான் செய்த பாவம் தீராது. குலத்தைக் கெடுத்த பாபியான நான் படு நரகக் குழியில் கிடந்து பரிதபிப்பேன் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. நான் இப்பொழுது கண்டது கனவா? நனவா? என்று ஆச்சரியமடைந்தான். நான் முட்டாள்; பாவி; கொடியவன். அதனுல்தான் நற்கருமங்களைச் செய்வதை விட்டுவிட்டு, காம சுகத்தில் அழுந்திக் கடையவன் ஆனேன். ஆயினும், ஏதோ ஒரு புண்ணிய வயத்தால்தான், மரணத் தருவாயில், 'நாராயணு!' என்னும் திவ்விய நாமத்தை உச்சரிக்கும் பேறு எனக்குக் கிட்டியது. இனி, சம்சார சாகரத்தில் அழுந்தி, மோசம் போகாமல், அதிலிருந்து விடுதலை பெற வேண்டும். பகவானிடத்திலும் மற்ற உயிர்களிடத்திலும் அன்பு செலுத்தி, வாழ்க்கை நடத்த வேண்டும்" என்று தீர்மானத்துக்கு வந்தான்.

சான்ருேரின் தொடர்பு சிறிது நேரம் ஏற்பட்டதன் விளைவாய், மனம் திருந்தி, பற்றுக்களை விட்டொழித்து, தவம் செய்யும் பொருட்டு, அஜாமீளன் அரித்துவாரத்துக்குப் போனுன். எல்லாம் வல்ல திருமாலை அல்லும் பகலும் நினைந்து அவரிடம் பக்தி செலுத்தினுன். இதன் பயனுய்,

முன்பு தான் தரிசித்த திருமாலின் ஊழியர்களே, அஜாமீளன் மீண்டும் தரிசிக்கும் பேறு பெற்றான்.

அவர்கள் அஜாமீளனைத் தங்கமயமான விமானத்தில் ஏற்றிக்கொண்டு, வைகுண்டம் போனார்கள்; அஜாமீளன் தமது முந்திய தேகத்தைத் துறந்து, வேறு ஒரு மங்களகரமான புதிய தேகத்தை அடைந்து, விமானத்தில் ஏறிக்கொண்டு வைகுண்டம் சென்றான்.

திருமாலின் தூதர்களால் தடை செய்யப்பட்ட யம தூதர்கள், நேரே யம லோகம் திரும்பி யம தர்மராஜனைச் சந்தித்து, விவரத்தைக் கூறினார்கள் : "பெருமானே! புண்ணியம் செய்வோருக்கும், பாவம் செய்வோருக்கும், இரண்டையும் கலந்து செய்வோருக்கும், உரிய பலன்களை வழங்கும் அதிகாரிகள் உலகில் எத்தனை பேர் இருக்கிறார்கள்? தண்டிப்போர் பலர் இருந்தால், அபிப்பிராய பேதம் உண்டாகி, தண்டனை நிறைவேறுவது சாத்தியமில்லாது போகுமே? உயிர்கள் அனைத்துக்கும் தாங்களே அதிபர். அவரவர் செய்த பாவ புண்ணியங்களுக்குத் தக்கபடி, ஜீவன்களைத் தண்டிப்பவரும் திருத்துபவரும் நீரே! உமது கட்டளை எதுவும் இதுவரை பூலோகத்தில் தடைப்பட்டது இல்லை. ஆனால், இப்பொழுதோ நான்கு சித்தர்கள், உமது கட்டளையைத் தடுத்துவிட்டார்கள். பாவி ஒருவனை நாங்கள் நரகத்துக்கு இழுத்துப் போக முயன்றபோது, அவ்விதம் செய்ய வொட்டாது, பலாத்காரமாக எங்களை அந்தச் சித்தர்கள் நால்வரும் தடுத்து விட்டனர். பாசக் கட்டுகளிலிருந்துப் அவனை விடுவித்தார்கள். "நாராயணா!" என்று அந்தப் பாவி கூறியதும், "பயப்படாதே!" என்று சொல்லிக்கொண்டு அவனிடம் விரைந்து ஓடிவந்து, அவனைக் காப்பாற்றினார்கள். அவர்கள் யார் என்பதை நாங்கள் அறிய விரும்பு

கிறோம். தயவு செய்து அவர்களைப்பற்றி எங்களுக்குத் தாங்கள் கூற வேண்டும்'' என்று விண்ணப்பித்துக் கொண்டனர்.

தூதர்கள் இவ்வாறு வேண்டிக்கொண்டதும், யமன் அவர்களிடம், ''என்னிலும் மேம்பட்ட ஒருவர் இருக்கிறார். இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் துணியில் இருக்கும் ஊடும் பாவும்போல் கோக்கப்பட்டு உள்ளது. ஆக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் அவர் திருவுளப்படியே நடக்கின்றன. மூக்கில் கயிறு கோக்கப்பட்ட காளை மனிதனுக்கு வசப்பட்டு நடப்பது போல, இந்தப் பிரபஞ்சம் இறைவனுக்கு வசப்பட்டு நடக்கிறது. தருமம் என்பது, பகவானே நேரில் அமைத்த ஒரு ஏற்பாடு. அதன் சூட்சுமத்தை யாராலும் அறிய முடியாது; பிருகு முதலிய ரிஷிகளும் அறிய மாட்டார்கள். தேவர்களும் அறிய மாட்டார்கள்; சித்தர்களில் முக்கியமானவர்களும் அறிய மாட்டார்கள். அப்படி இருக்கும்போது, மனிதர்களும், அசுரர்களும் அதை எப்படி அறியப் போகின்றனர். பிரம்மா, நாரதர், சிவன் சனத்குமாரர், கபிலர், மனு, பிரகலாதன், ஜனகர், பீஷ்மர், பலி, சுகர், நாம், (யமன்) ஆகிய பன்னிருவரும்தான் தருமத்தை அறிவோம். எதை அறிந்தால், ஒருவன் சாகா நிலையை அடைய முடியுமோ, அந்தத் தருமம், மிகவும் பரிசுத்தமானது. அதை யாராலும் எளிதில் அறிய முடியாது. பகவானிடம் செலுத்தும் பக்தியே, மானுடர்களுக்கு மேலான தருமம். பகவானுடைய திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்தில், அஜாமிளனுக்கு மேலான கதி கிட்டி இருப்பதை நினைத்துப் பாருங்கள். தம் பக்தர்களை, பகவான் தமது கதாயுதத்தால் பாதுகாக்கிறார். அத்தகைய பகவத் பக்தர்களை நீங்கள் இனிமேல் அணுக வேண்டாம்'' என்று யமன் பதில் சொன்னான்.

அஜாமீளன் கதையைப் பரீட்சித்து மன்னனுக்குச சுக முனிவர் இவ்வாறு கூறினார். "அரசே! பகவானுடைய நாமத்தை யார் சொன்னாலும், அவர்களை அணுக, யம கிங்கிரர்கள் பயப்படுவார்கள். இந்த உண்மையை நீ தெரிந்துகொள். மலய பருவதத்தில் பகவானைப் பூசித்துக்கொண்டே அகத்திய மகரிஷி, அஜாமீளன் கதையை எனக்குச் சொன்னார்" என்று அஜாமீளன் கதையைச் சொல்லி முடித்தார் சுகர்.

## தக்ஷருடைய வம்சம்

பரீட்சித்து மன்னருக்கு, சுக முனிவர், அஜாமீளன் சரிதத்தைக் கூறி முடித்ததும், அந்த மன்னன் சுகரை நோக்கி, "முனிவர் பிரானே! சுவாயம்புவ மனுவின் காலத்தில் நடந்த சிருஷ்டியைப் பற்றிச் சுருக்கமாகச் சொன்னீர்கள். இந்த உலகத்தை, இறைவன் எதைக் கொண்டு சிருஷ்டித்தார்? எப்படிச் சிருஷ்டித்தார்? என்பதைச் சற்று விரிவாக எனக்குக் கூற வேண்டுகிறேன்" என்று வேண்டினான்.

அவனுடைய விருப்பத்துக்கு இசைந்து. அடியில் வருமாறு சுகர் சொன்னார் :

பிராசீனபர்ஹிஸின் புதல்வர்கள் பத்துப் பேர். அவர்களுக்குப் பிரசேதஸஸுக்கள் என்று பெயர். அவர்கள் ஒரு முறை சமுத்திரத்தின் நடுவிலிருந்து, தரைக்கு வந்தார்கள். வந்தவர்கள் தரையில் மரங்கள் அடர்த்தியாக இருப்பதைக் கண்டு கோபம்கொண்டார்கள். ஆகவே, தங்கள் முகங்களிலிருந்து நெருப்பையும் காற்றையும் உண்டுபண்ணி, மரங்களை எல்லாம் அவர்கள் எரித்தார்கள்.

இதைக் கவனித்த சந்திரன் அவர்களுக்குள்ள கோபத்தைத் தணிக்கும் பொருட்டு, சில வார்த்தைகள் சொன்னார்: "பாக்கியசாலிகளே! உலகத்தை விருத்தி செய்ய வேண்டிய பிரஜாபதிகளான நீங்கள் கோபம் கொண்டு மரங்களை எரிப்பது கூடாது. விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் மானுடர்களுக்கும் உணவாகும் மரங்களையும் மருந்துகளையும் தானியங்கள் தரும் பயிர் வகைகளையும் முன்பு திருமால் படைத்தார். உயிர் இனங்களுக்கு உணவு தரும் மரங்களை அளிக்கலாகாது; ஆகவே, கோபத்தை அடக்கிக்கொள்ளுங்கள். சகல உயிர்களிடத்திலும் பகவான் அந்தர்யாமியாய் இருக்கிறார்; அனைத்தையும் பகவானுடைய சரீரமாகப் பாவித்து நடப்பீர்களாயின், உங்கள்மீது பகவான் பிரியம்கொள்வார். ஆகவே, கோபத்தை அடக்கிக் கொள்ளுங்கள்; மரங்களின் பெண்ணாகிய மாரீஷையை நீங்கள் மணம் செய்துகொள்ளுங்கள்" என்று சொன்னார்.

பிறகு அந்தப் பெண்ணை பிரசேதஸஸுக்களிடம் கொடுத்துவிட்டு, சந்திரன் திரும்பிவிட்டார்.

பிரசேதஸஸுகள் அவளைத் திருமணம் செய்து கொண்டார்கள். அவர்களுக்கு, மாரீஷையிடத்தில் தக்ஷர் பிறந்தார்.

அந்தத் தக்ஷர், தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், ஆகாயம், பூமி, ஜலம் இவற்றில் வாழும் உயிர்கள் அனைத்தையும், தமது மனத்தால் சங்கல்பம் செய்து படைத்தார்.

தாம் எதிர்பார்த்தபடி ஜீவராசிகள் விருத்தியடையாமல் இருப்பதைக் கண்டு, தக்ஷர் விந்திய மலைக்குச் சென்று தவம் செய்யத் தொடங்கினார்.

விந்திய மலைச் சாரலில் ஹம்ஸ குகம் என்னும் புண்ணிய தீர்த்தம் ஒன்று இருக்கிறது. அதில் மூன்று காலங்களிலும் நீராடி, தக்ஷர் இறைவனைத் தியானித்தார். ஹம்ஸ குகம் என்னும் தோத்திரத்தைச் சொல்லி, பகவானை அவர் துதித்தார்.

அந்தத் தோத்திரத்தைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த பகவான் தக்ஷருக்குத் தரிசனம் தந்தார்.

பகவானுடைய திவ்விய மங்கள ரூபத்தை தரிசித்ததும் தக்ஷர் ஆனந்த பரவசமடைந்தார். அவரால் பேச முடியவில்லை.

பகவான் தக்ஷரை நோக்கி "பிரசேதஸஸுகளின் குலத்தில் பிறந்த பாக்கியவானே! நீ செய்யும் தவத்தால் அக மகிழ்ந்தேன். ஆரம்பத்தில் என்னிடமிருந்து மாயையும், அதனிடமிருந்து பிரமாண்டமும், அதன் பின்னர் பிரம்ம தேவரும் உண்டானார்கள். உலகத்தைச் சிருஷ்டிக்கும் முயற்சியில் பிரம்ம தேவன் ஆர்வத்துடன் ஈடுபட்டார்; ஆயினும் அதற்குப் போதிய திறமை தமக்கு இல்லை என்ற எண்ணம் பிரம்மாவுக்கு இருந்தது. ஆகவே, கடும் தவம் செய்யும்படி பிரம்மாவுக்கு நான் கட்டளையிட்டேன். அதன்படி தவம் செய்து, பிரஜாபதிகளான உங்களைப் பிரம்மா முதலில் சிருஷ்டி செய்தார். பஞ்சஜனன் என்னும் பிரஜாபதிக்கு, அஸிக்நீ என்று ஒரு புதல்வி இருக்கிறாள். அவளைத் திருமணம் செய்து கொண்டு, பிரஜைகளை நீர் உண்டாக்க வேண்டும். உமக்குப் பின்னர், மாந்தர்கள் மகளிருடன் சேர்ந்து பிரஜைகளை உண்டுபண்ணுவார்கள்" என்று சொல்லிவிட்டு, தக்ஷர் பார்த்துக்கொண்டு இருக்கும்போதே அந்த இடத்திலிருந்து பகவான் மறைந்தார்.

தக்ஷர், அஸிக்நீ என்னும் அந்தப் பெண்ணிடத்தில், பதினாயிரம் புதல்வர்களைப் பெற்றார். அவர்களுக்கு ஹர்யச்வர் என்று பெயர்.

பிரஜைகளை உற்பத்தி செய்யும்படி இவர்களுக்கு, இவர்கள் தந்தை கட்டளை யிட்டார். அதற்காக ஹர்யச்வர்கள் தவம் செய்தபோது, நாரத முனிவர் தோன்றி, ஞான மார்க்கத்தை உபதேசித்து, பிரஜா உற்பத்தியில் ஈடுபடாதபடி அவர்களைச் செய்துவிட்டார்.

ஞான மார்க்கத்தைக் கடைப்பிடித்து, ஹர்யச்வர்கள் மோட்சத்தை அடைந்தார்கள்.

இந்த விவரம் தெரியவந்து தக்ஷர் பெரிதும் வருந்தினார். இதன் பின்னர், பிரம்ம தேவர் சொன்னதன் பேரில் சமாதானம் அடைந்து, மீண்டும் தன் மனைவி அஸிக்நீ என்பவளிடம் ஆயிரம் புதல்வர்களை உண்டு பண்ணினார். அவர்களுக்கு சபளாச்வர் என்று பெயர்.

சபளாச்வர்களும், நாரதரின் பேச்சைக் கேட்டு ஞான மார்க்கத்தில் புத்தியைச் செலுத்தி முக்தி அடைந்தார்கள்.

இப்பொழுதும் விவரம் தெரிய வந்து தக்ஷர் பெரிதும் வருந்தினார். அது சமயம் நாரதரைத் தற்செயலாகச் சந்தித்து, தக்ஷர் அவர்மீது கோபம்கொண்டார்; கடிந்து உரைத்து, நாரதரைத் தக்ஷர் சபிக்கவும் செய்தார் :

"நாரதரே! நீர் சாதுபோல் வேடம் பூண்டு நடிக்கிறீர். என் புதல்வர்களின் மனத்தைக் கலைத்து அவர்களைத் துறவற மார்க்கத்தை மேற்கொள்ளச் செய்து விட்டீர். போதனை மூலம் ஏற்படும் விரக்தியைக் காட்டிலும், சுய அனுபவத்தின் மூலம் ஏற்படும் விரக்தியே சிறப்புடையது. இல்லறத்தை மேற்கொண்டு ஒழுகும் எங்களுக்கு நீர் செய்த அபராதம் பொறுக்க முடியாது.

ஆயினும் எனக்கு வந்த கோபத்தை நான் பொறுத்துக்கொண்டேன். இகத்திலும் பரத்திலும் என் புதல்வர்களுக்கு நலம் கிட்டாதபடி நீர் செய்துவிட்டீர். ஆகவே, எப்பொழுதும் நிலையான ஓர் இடம் இன்றி, நீர் அலைந்து திரியக் கடவீர்!" என்று சபித்தார்.

தக்ஷரின் இந்தச் சாபத்தை நாரதர் அங்கீகரித்துக் கொண்டார். பதில் சாபம் கொடுப்பது சான்றாண்மை ஆகாது என்று கருதி, நாரதர் பொறுமையுடன் இருந்தார்.

இதன் பின்னர், பிரம்ம தேவர் தக்ஷப் பிரஜாபதிக்கு மீண்டும் ஆறுதல் சொன்னார். தக்ஷர் ஆறுதல் அடைந்து இப்பொழுது தன் மனைவியிடம் அறுபது புதல்வியர்களை உண்டுபண்ணினார்.

இந்தப் பெண்கள் தங்கள் தந்தை தக்ஷரிடம் பிரியத்தோடு நடந்துகொண்டார்கள். தம் புதல்வியரில் பதின்மரைத் தருமனுக்கும், பதின்மூன்று பெண்களைக் கசியபப் பிரஜாபதிக்கும், இருபத்தேழு பெண்களைச் சந்திரனுக்கும், ருத்ரனுக்கு இரண்டு, அங்கிரஸுக்கு இரண்டு, கிருசாச்வருக்கு இரண்டு பெண்களையும், பாக்கியுள்ள பெண்களைத் தார்க்ஷ்ன் எனப்படும் கசியபருக்கே திருமணம் செய்து கொடுத்தார்.

இவர்கள் இந்தப் பெண்களிடம் பிரஜைகளை உண்டாக்கினார்கள்; மூன்று உலகங்களும் பிரஜைகளால் நிரம்பின.

கசியபப் பிரஜாபதி மூலம்தான் உலகங்களில் உயிரினங்கள் பலுகிப் பெருகின; அவர் தம் மனைவியர் பதின்மூன்று பேர்களிடத்தில் எந்த எந்த உயிர் வர்க்கத்தை உண்டுபண்ணினார் என்பதைப் பார்க்கலாம்:

திமி என்பவள் நீரில் வாழும் உயிர் இனங்களைப் பெற்றாள்.

சரமை என்பவள் நாய், புலி, பூனை முதலியவற்றைப் பெற்றாள்.

சுரபி என்பவள் இரு குளம்புகளும் நான்கு கால்களையும் கொண்ட கிடாக்கள், பசுக்கள் போன்ற விலங்குகளைப் பெற்றாள்.

தாம்ரை என்பவள் கழுகு, பருந்து முதலிய பறவை இனங்களைப் பெற்றுக் கொடுத்தாள்.

முனி என்பவள் அப்சர மடந்தையரைப் பெற்றுக் கொடுத்தாள்.

குரோதவசை என்பவள் பாம்பு இனங்களைப் பெற்றுக் கொடுத்தாள்.

இளை என்பவள் மரம், செடி, கொடி முதலியவற்றைப் பெற்றுக் கொடுத்தாள்.

சுரசை என்பவளிடத்தில் யாதுதானர் ' என்னும் இனத்தினர் பிறந்தார்கள்.

அரிஷ்டை என்பவளிடத்தில் கந்தர்வர்கள் பிறந்தார்கள்.

காஷ்டை என்பவளிடத்தில் ஒற்றைக் குளம்புடைய, குதிரை போன்ற நாற்கால் விலங்குகள் உண்டாயின.

தனு என்பவள் அறுபத்தொரு ஆண்மக்களைப் பெற்றாள்; அவர்களில் பதினெட்டுப் பேர் முக்கியமானவர்கள்.

அதிதி என்பவள் பன்னிரு புதல்வர்களைப் பெற்றாள்; இவளுடைய வமிசத்தில் பகவான் நாராயணன் தமது அம்சமாக அவதாரம் செய்திருக்கிறார்.

திதியின் பிள்ளைகள் தைத்தியர்கள்; இரண்ய கசிபு, இரண்யாட்சன் முதலியோர் இவளுடைய வமிசத்தில் தோன்றியவர் ஆவர்.

சுருதி என்பவள், கசியபருக்குப் பன்னிரு புதல்வர்களைப் பெற்ருள்.

இவர்களில் அரியமன் என்பவன் ஒருவன்; அவனுடைய மனைவி மாத்ருகை என்பவள்; இந்தச் சதிபதிகள் மூலமே மானுட வர்க்கம் உண்டாயிற்று.

திதியின் புதல்வி ரசனை என்பவள் அதிதியின் புதல்வன் துவஷ்டா என்பவனை மணம் செய்துகொண்டாள். இந்தத் தம்பதிகளுக்கு விஸ்வரூபன் என்று பலமுள்ள ஆற்றல் பெற்ற மகன் ஒருவன் பிறந்தான்.

ஒரு முறை தேவகுரு பிருகஸ்பதி, இந்திரனின் அகந்தையான நடத்தை பிடியாமல் அவனை விட்டு விலகிப் போய்விட்டார்.

அதனால் தேவர்கள் தங்கள் குருவாக, விஸ்வரூபன் என்பவனை நியமித்துக்கொண்டார்கள்; தங்கள் பகைவர் தைத்தியர்களின் மருமகன் இவன் என்பதையும் பொருட்படுத்தாது, விஸ்வரூபனைத் தங்கள் குருவாகத் தேவர்கள் நியமித்துக்கொண்டார்கள்.

## விருத்திராசுரன் வதம்

"பிருகஸ்பதி எதற்காகத் தேவர்களை விட்டுப் பிரிந்து போனர்? தம் குரு பிருகஸ்பதியிடம் தேவர்கள் என்ன தவறு செய்தார்கள்? அதை எனக்குச் சொல்ல வேண்டும்" என்று பரீட்சித்து மன்னன் வேண்டினன்.

"மன்னவனே! கேள்" என்று சொல்லி, அடியில் வருமாறு சுகர் சொன்னர்.

ஒரு முறை மூன்று உலகங்களுக்கும் அதிபனை இந்திரன் தமது சபையில் வீற்றிருந்தான். அவனைப் புடை சூழ்ந்து, தேவதைகள், வசுக்கள், ரிஷிகள் முதலியோர் இருந்தார்கள்.

சித்தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் அவனுக்குப் பணிவிடை புரிந்தார்கள்; முனிவர்கள் அவனைத் துதித்தார்கள்; வித்தியாதரர்கள், அப்சரசுகள், கின்னரர்கள், உரகர்கள் முதலியோர் அவனைப் புகழ்ந்து பாடினார்கள்; வெண்கொற்றக் குடை பிடித்து, சாமரத்தால் வீசி மரியாதை செய்தார்கள்.

இந்திரனுக்குப் பக்கத்திலே, ஆசனத்தில் அவன் மனைவி சதிதேவி அமர்ந்து இருந்தாள்.

இது சமயம், அனைவருடைய மரியாதைகளுக்கும் அருகதையுடைய தேவர்களின் குரு பிருகஸ்பதி இந்திரனுடைய சபைக்கு வந்தார்.

செல்வத்திஞல் செருக்குற்றிருந்த இந்திரன், எழுந்து மரியாதை செய்து பிருகஸ்பதியை வரவேற்கவில்லை; கௌரவித்துப் போற்றவில்லை.

இதைக் கவனித்த பிருகஸ்பதி எதுவும் பேசாமல் தமது இல்லத்துக்குத் திரும்பினார்.

தன் குரு திரும்பியதைப் பார்த்ததும் தேவேந்திரன் துணுக்குற்றான். "ஆசாரியனை மதிக்காமல், நான் தப்பு செய்துவிட்டேனே! 'சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் அரசன், வந்தவர்களை உபசரிக்கும் பொருட்டு எழுதல் கூடாது' என்று கூறுகிறார்கள். இந்தக் கூற்றைத் தருமத்தின்பாற்பட்டதென்று நாம் கொள்ளக் கூடாது. இந்தக் கூற்றை நம்பி அதன்படி நடப்பவர்கள் கெட்டுப் போவார்கள். ஆகவே, எனது குரு பிருகஸ்பதியை அணுகி, அவரிடம் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும்" என்று இந்திரன் நினைத்தான்.

ஆகவே, இதன் பொருட்டு, பிருகஸ்பதியின் இல்லத்துக்கு இந்திரன் புறப்பட்டுப் போனான்.

இந்திரனுடைய உளப்பாங்கை அறிந்த பிருகஸ்பதி, இந்திரன் கண்களுக்குப் புலப்படாது, மாயையால் தம்மை மறைத்துக்கொண்டார்.

இந்திரன் பெரிதும் கவலையுற்றான்; பிருகஸ்பதியை எவ்வாறு அடைவது என்று பலவாறு சிந்தித்தான்; அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

இது விவரம் தெரிய வந்ததும், அசுரர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். தங்கள் குரு சுக்கிராச்சாரியரின் அனுமதி பெற்றுக்கொண்டு, தேவர்களைத் தாக்கத் தொடங்கினார்கள்; பாணங்களைக் கொண்டு தேவர்களின் அவயவங்களைத் துண்டித்தார்கள். கை, கால், தொடை முதலியன துண்டிக்கப்பட்டும், தலை முதலியன பிளவுண்டும் தேவர்கள் அவதிப்பட்டார்கள்.

ஆகவே, இந்திரனையும் தங்களுடன் அழைத்துக் கொண்டு, தேவர்கள் பிரம்ம தேவரிடம் சென்றார்கள். வருத்தமுற்றுத் தலைகுனிந்தவாறு பிரம்ம தேவனைச் சரண் அடைந்தார்கள்.

பிரம்ம தேவர் அவர்களுக்கு ஆறுதல் சொன்னார். "தேவர்களே! குருவை அவமதித்து, நீங்கள் தவறு செய்துவிட்டீர்கள். அதன் பயனை இப்பொழுது அனுபவிக்கிறீர்கள். உங்கள் பகைவர்களான அசுரர்கள் குருவின் ஆதரவையும் ஆலோசனையையும் பெற்று முன்னேறுகிறார்கள். இனி, அவர்கள் ஒரு போதும் சும்மா இருக்க மாட்டார்கள்; சொர்க்கத்தையும் கைப் பற்றிக்கொள்ள முயல்வார்கள். அந்தணனையும், இறைவனையும், பசுக்களையும் தெய்வமாகக் கொள்பவர்களுக்கு ஒருபோதும் தீங்கு நேராது. ஆகவே, நீங்கள் சென்று துவஷ்டாவின் புதல்வன் விஸ்வரூபன் என்னும் அந்தணனை உங்கள் புரோகிதராக ஏற்பாடு செய்து கொள்ளுங்கள். அவரை நீங்கள் பூசித்தீர்களானால், உங்களுக்கு நலம் கிட்டும்படி அவர் செய்வார். அவருக்கு அசுரர்களிடமும் அன்பு உண்டு. அதை நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார்.

பிரம்ம தேவரின் ஆலோசனைப்படி, தேவர்கள் விஸ்வ ரூபனிடம் சென்றார்கள். அவருடைய ஆசிரமத்தை அடைந்து பணிவுடன் அவரை வணங்கினார்கள். "அந்தண சீலரே! எங்கள் பகைவர்களான அசுரர்களிடம் சிக்குண்டு நாங்கள் தவிக்கிறோம். தங்களின் தவவலிமை யால் அவர்களின்பிடிப்பிலிருந்து எங்களை நீர் காப்பாற்ற வேண்டும். வயதில் சிறியவராய் இருப்பினும், எங்கள் தேவையின் பொருட்டு உம்மை நாங்கள் வணங்குகிறோம். வேதம் முதலியவற்றை ஓதினவன் வயதில் சிறியவனாய் இருப்பினும், பூசனைக்கு உரியவன்; ஆகையால்தான் உம்மை எங்கள் குருவாக வரித்து, நாங்கள் உம்மை வணங்குகிறோம்" என்று வேண்டினார்கள்.

தேவர்கள் இவ்வாறு வேண்டியதும், விஸ்வரூபன் சிரித்துக்கொண்டே அவர்களுக்குப் பதில் சொன்னார்: "தரும சுபாவமுடையவர்கள், புரோகிதம் செய்பவனை நிந்திக்கிறார்கள்; புரோகிதம் செய்வதனால் பிரம்ம தேஜஸ் குறைந்து போகிறது என்று கருதுகிறார்கள். உலக பாலர்களான நீங்கள் வந்து என்னை வேண்டும்போது, அதை என்னால் எப்படிப் புறக்கணிக்க முடியும்? உங்க ளுடைய வார்த்தையை அங்கீகரித்து, அதன்படி நடப்பது எனது கடமை. புரோகிதம் என்பது நிந்திக்கத்தக்கது என்பதை அறிந்திருந்தும், உங்கள் விருப்பத்தை என்னால் தட்ட முடியாது. ஆகவே, நான் உங்களுக்குப் புரோகிதனாய் இருக்கச் சம்மதிக்கிறேன்" என்று சொன் னார்.

இதன் பின்னர், அசுரர்கள் கைப்பற்றிக்கொண்டி ருந்த தேவராஜ்யத்தைத் தமது மந்திர பலத்தால் வெற்றி கொண்டு, அதைத் தேவேந்திரனிடம் திருப்பிக் கொடுத் தார்.

அதன் பின்னர், நாராயண கவசம் என்னும் மகிமை வாய்ந்த அந்த மந்திரத்தை, இந்திரனுக்கு விஸ்வரூபன் உபதேசித்தார்.

உபதேசித்துவிட்டு இந்திரனிடம், "இந்தக் கவசத்தை நீ ஜெபித்தால், அசுரர்களை நீ வெல்வாய்; எத்தகைய பயமும் உனக்கு ஏற்படாது" என்று சொன்னார்.

விஸ்வரூபன் தேவர்களை நேசித்தார்; எனினும் அந்தரங்கத்தில் அசுரர்களையும் அவர் நேசித்தார்.

விவரம் தெரிய வந்ததும் ஆத்திரமடைந்து, இந்திரன் விஸ்வரூபனுடைய மூன்று தலைகளையும் துண்டித்து அவரைக் கொன்றுவிட்டான்.

தன் புதல்வன் விஸ்வரூபனை இந்திரன் கொன்றுவிட்டான் என்பது தெரிய வந்து, துவஷ்டா அளவற்ற கோபம்கொண்டார். "இந்திரனுக்குப் பகைவனாக வளர்ந்து விரைவில் அவனை வதம் செய்வாயாக!" என்று சொல்லி ஒரு ஹோமம் செய்தார்.

அந்த ஹோமத்தின் தென் திசை அக்கினியிலிருந்து, பயங்கரமான தோற்றமுடைய ஒரு அசுரன் கிளம்பினான்.

நாள்தோறும் அதிவேகமாக அவன் வளர்ந்தான். எரிகின்ற மலைபோலும், அந்தி நேரத்து மேகம் போலும் பேரொளியுடன் அவன் திகழ்ந்தான்; அவனுடைய தாடியும் மீசைகளும், பழுக்கக் காய்ச்சின செம்புபோல் இருந்தன; நண்பகல் நேரத்து சூரியன் போல, கண்கள் இரண்டும் பயங்கரமாகப் பிரகாசித்தன. மூன்று நுனிகளைக் கொண்ட பயங்கரமான சூலம் அவன் கையில் இருந்தது; பல விலங்குகளை அதில் குத்திக் கோத்துக்கொண்டு, பூமி அதிரும்படி அட்டகாசம் செய்து, அவன் குதித்தான்; அவன் முகத்தில் இருக்கும் கோரைப் பற்கள் நடுக்கத்தை உண்டாக்கின. அடிக்கடி அவன் கொட்டாவி விட்டான்.

இந்த அசுரனின் தோற்றத்தையும் நடத்தையும் கண்டு, உலகத்தில் உள்ளவர் அனைவரும் பயந்து பத்துத் திசைகளிலும் சிதறி ஓடினார்கள். அவன் விருத்திரன் என்னும் பெயரோடு விளங்கினான். இந்திரன் முதலிய தேவர்களை அவன் எதிர்க்கத் தொடங்கினான்.

தேவர்களும் அவனை எதிர்த்தார்கள். அவர்கள் உபயோகப்படுத்திய அத்திரங்கள் அனைத்தும் விருத்திரனிடம் பயன்படாமல் வீணாயின. தேவர்கள் பிரயோகித்த ஆயுதங்கள் அனைத்தையும் விருத்திரன் விழுங்கிவிட்டான்.

இதைக் கண்டு தேவர்கள் ஆச்சரியமும் துயரமும் ஒருங்கே அடைந்தார்கள். என்ன செய்வது என ஒன்றும் தோன்றாது திருமாலைத் துதிக்கத் தொடங்கினார்கள். "நீயே இறைவன்; பக்தர்களை ஆபத்துக் காலத்தில் பாதுகாப்பவன்; அத்தகைய உம்மைச் சரண் அடையாமல் பிறரைச் சரணம் அடைவோர் மூடர்களே ஆவர்; நாயின் வாலைப் பிடித்துக்கொண்டு சமுத்திரத்தைக் கடக்க விரும்புபவனை நிகர்த்தவர் ஆவர். மச்ச அவதாரம் எடுத்து, மனுவைக் காப்பாற்றிய பரமனான நீர், விருத்திராசுரனிடம் இருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று இறைஞ்சினார்கள்.

தேவர்களின் தோத்திரத்தைக் கேட்டு, திருமால் அவர்களுக்குத் தரிசனம் தந்தார்.

திருமாலைக் கண்டதும் தேவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்; உடனே பூமியில் விழுந்து அவரை வணங்கினார்கள். பிறகு எழுந்து நின்று பகவானை நோக்கி, "பகவானே! உம்மை நாங்கள் வணங்குகிறோம்; அனைத்துக்கும் நீரே ஆதாரம்; உமக்கு ஆதாரம் என்பது ஒன்று இல்லை. உமது மாயையினால் நீர் இந்த உலகத்தைப் படைத்து, காத்து, அழிக்கிறீர்; விருத்திரனைக்

கொன்று எங்களைக் காப்பாற்றும்; அனைத்தையும் அறிந்த உமக்கு நாங்கள் தெரிவிக்கத்தக்கது என்ன இருக்கிறது? எங்களின் ஆற்றல், அத்திரம், ஆயுதம் அனைத்தையும் அவன் விழுங்குகிறான்; அவனை எங்களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. எங்களை விருத்திரனிடமிருந்து காப்பாற்றும்'' என்று கெஞ்சினார்கள்.

உடனே திருமால் அவர்களை நோக்கி, ''தேவர்களே! உங்களுடைய தோத்திரத்தால் நான் அக மகிழ்ந்தேன். விருத்திரனைக் கொல்வதற்குத் தக்க உபாயம் ஒன்றை உங்களுக்கு நான் சொல்லுகிறேன். ததீசி என்று மகரிஷி ஒருவர் இருக்கிறார். வித்தையாலும் விரதத்தாலும் தவத்தாலும் தமது உடலை அந்த முனிவர் வஜ்ரம்போல் உறுதி செய்துகொண்டு இருக்கிறார். அவரிடம் இரந்து, அவருடைய சரீரத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள். அவருடைய உடலில் இருக்கும் எலும்புகளைக் கொண்டு விசுவகர்மா உங்களுக்கு ஆயுதங்களைச் செய்து தருவான். அதைக் கொண்டு விருத்திரனை வதம் செய்யுங்கள். என்னைச் சரண் அடைந்தவர்களுக்கு ஒரு போதும் துயரம் நேராது'' என்று சொன்னார்.

இவ்வாறு இந்திரனுக்குக் கட்டளையிட்டுவிட்டு, தேவர்கள் பார்த்திருக்கும்போதே திருமால் மறைந்துவிட்டார்.

இதன் பின்னர், தேவர்கள் ததீசி முனிவரிடம் சென்றார்கள்; விவரத்தைச் சொல்லி, அவருடைய எலும்புகளைத் தருமாறு கேட்டார்கள்.

தேவர்களின் விருப்பத்தை அறிந்த ததீசி முனிவர், சிரித்துக்கொண்டே தேவர்களுக்குப் பதில் சொல்லத் தொடங்கினார்:

''தேவர்களே! மரண காலத்தில் பிராணிகள் சகிக்க முடியாத துயரத்தை அடைகின்றன என்பதை நீங்கள்

அறிய மாட்டார்கள். அதனால் எனது தேகத்தை நீங்கள் கேட்கிறீர்கள். உயிருடன் வாழ வேண்டும் என்னும் விருப்பம் உள்ளவர்களுக்குத் தேகம் இன்றியமையாதது; திருமாலே வந்து யாசித்தபோதிலும் யாராவது தமது தேகத்தைக் கொடுப்பார்களா?'' என்று சொன்னார்.

அதற்குத் தேவர்கள், ''அந்தண சீலரே! பிற உயிர்களிடத்து, கருணையுடன் நடக்கும் இயல்புள்ளவர்கள் தாங்கள்; புகழுடன் கூடிய நடத்தையுடையவர்கள்; தங்களைப் போன்ற மகான்களுக்குக் கொடுக்க இயலாதது என ஒன்று இல்லை. தமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளும் முனைப்புடன் இருப்பவன் எவனும், பிறருக்குத் தம்மால் நேரும் சங்கடங்களை உணர மாட்டான். பிறருடைய சங்கடத்தை அறியும் உணர்வு அவனுக்கு இருக்குமாயின், பிறரிடம் அவன் யாசிக்கவே மாட்டான்; பிறருக்கு இருக்கும் சங்கடத்தை அறிய வாய்ப்பு நேர்ந்தால், பிரபுவாய் இருப்பவன் பிறகு இல்லை என்று சொல்ல மாட்டான்'' என்று சொன்னார்கள்.

தேவர்கள் இவ்வாறு சொன்னதும், ததீசி முனிவர் அவர்களிடம், ''உங்களிடமிருந்து தர்மத்தைக் கேட்க விரும்பித்தான், நான் முதலில் மறுப்புச் சொன்னேனேயன்றி வேறு இல்லை. நான் விரும்பினாலும் சரி, அல்லது விரும்பாவிட்டாலும் சரி, இந்த உடல் என்னைவிட்டுப் பிரிந்து போகக் கூடியது. ஆகவே, அதைத் துறப்பதற்காக நான் வருந்தவில்லை. நிலையற்ற இந்த உடலில் அபிமானம் வைத்து, எவன் தனது புகழையும் தர்மத்தையும் கெடுத்துக்கொள்கிறானோ, அவனுடைய நிலையைக் கண்டு தாவரங்களும் வருந்துகின்றன. பிற உயிர்கள் வருந்தும்போது வருந்துவதும், பிற உயிர்கள் மகிழ்ச்சியடையும்போது மகிழ்ச்சி அடைவதும் மேலான தர்மம் ஆகும் என்று பெரியோர்கள் கூறி இருக்கின்

றனர். ஆகவே, நாய் நரிகளுக்கு இரையாகப் போகும் இந்த உடலை, நான் உங்களுக்கு மனமுவந்து தருகிறேன்" என்று சொன்னர்.

இவ்வாறு சொல்லிவிட்டு, ததீசி முனிவர், சித்தத்தைப் பிரமத்தினிடம் செலுத்தி, தேகத்தை விட்டு விட்டார்.

அந்தத் தேகத்திலுள்ள எலும்புகளைக் கொண்டு, விசுவகர்மா, தேவர்களுக்கு வஜ்ராயுதம் செய்து கொடுத்தார்.

இந்திரன் அந்த ஆயுதத்தைப் பெற்றுக்கொண்டு, ஐராவதத்தின்மீது ஏறினன். தேவர்களும் கணங்களும் புடை சூழ்ந்து வர, விருத்திராசுரனை எதிர்க்கப் புறப்பட்டான்.

விருத்திரனைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு, அசுரர்களும் போருக்கு ஆயத்தம் ஆனர்கள்.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையில், திரேதா யுகத்தின் முற்பகுதியில், நர்மதை ஆற்றங்கரையில் இந்தப் போர் நடந்தது.

இதில் அசுரர்கள் தோற்றுப் போனர்கள். தங்கள் ஆயுதங்களை இழந்து பரிதவிக்கத்தக்க நிலையில் இருந்த அசுரர்கள், கற்களையும் மரங்களையும் எடுத்துத் தேவர்களைத் தாக்கினர்கள். சமாளிக்க முடியாது போகவே, அசுரர்களின் முக்கியமானவர்கள் போர்க்களத்தைவிட்டு ஓடத் தலைப்பட்டார்கள்.

இதைக் கவனித்த விருத்திரன் ஒவ்வொரு அசுரனின் பெயரைச் சொல்லி, போர்க்களத்துக்குத் திரும்பும்படி கூவி அழைத்தான். "அசுரர்களே! ஓடாதீர்கள். பிரமத் தியானத்தில் ஈடுபட்டு மரணமடைவதும், பயப்படாமல் போர் செய்து, போர்க்களத்தில் உயிர் துறப்பதும், புகழுக்கு உரிய மார்க்கமே ஆகும்" என்று சொன்னன்.

தருமத்தினின்றும் வழுவாத இந்த வார்த்தைகளை விருத்திரன் எடுத்துச் சொல்லியும் அசுரர்கள் பயம் நீங்கிப் போர்க்களத்துக்கு வரவில்லை.

தேவர்கள் அசுரர்களை விரட்டி விரட்டித் தாக்கினார்கள். இதைக் கவனித்த விருத்திரன் தேவர்களை நோக்கி, "தேவர்களே! பயந்து புறமுதுகு காட்டி ஓடுகிறவர்களை நீங்கள் தாக்குவது முறையா? வீரர்கள் இவ்விதம் செய்ய மாட்டார்கள். இதனால் உங்களுக்குச் சொர்க்கமும் கிட்டாது. அற்பர்களே! போர் செய்ய வேண்டும் என்னும் விருப்பமும் அதற்கு உரிய வலிமையும் உங்களிடம் இருந்தால், வந்து என்னோடு போர் செய்து பாருங்கள்" என்று முழங்கினான்.

இவ்வாறு விருத்திரன் முழங்கியதும் மனிதர்கள் மூர்ச்சித்துக் கீழே விழுந்தார்கள்; தேவர்களும் பயந்து பூமியில் சாய்ந்தார்கள்.

விருத்திரனோ சூலாயுதத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, பனங்காட்டை யானை மிதித்துத் துவைப்பது போல, மூர்ச்சித்துக் கீழே கிடக்கும் தேவர்களைத் தமது கால்களால் மிதித்துத் துவைத்தான்.

இதைப் பார்த்ததும் கோபமுற்ற இந்திரன் கடுங் கோபமுற்று, தனது கதாயுதத்தை, விருத்திரன்மீது பிரயோகித்தான்.

விருத்திரனோ அநாயாசமாக அதைத் தனது இடது கையில் பிடித்துக்கொண்டான். பிறகு அதைக் கொண்டே இந்திரனுடைய வாகனமான ஐராவதத்தின் தலையில் விருத்திரன் அடித்தான்.

அதனால் அந்த யானை களைப்புற்றுச் சோர்ந்து போயிற்று; இந்திரனும் களைப்படைந்து இருந்தான். யுத்த தர்மத்தை உணர்ந்த விருத்திரன், அதனால் யானையையும் இந்திரனையும் தாக்காது சும்மா நின்றான்.

இந்திரனே அமிர்தப் பெருக்குடைய தம் கையால், யானையைத் தடவிக் கொடுத்து, அதற்கு இருக்கும் அயர்வையும் களைப்பையும் போக்கினான். பிறகு விருத்திரனை எதிர்க்க ஆயத்தமானான்.

இதைக் கவனித்த விருத்திரன், சிரித்துக்கொண்டே இந்திரனை நோக்கி, அடியில் வருமாறு சொன்னான் :

"என் பகைவனான நீ தெய்வச் செயலாய் எனக்கு எதிர்ப்பட்டாய். நீ பிராமணனைக் கொன்றவன்; உனக்குக் குருவாய இருந்த விஸ்வரூபனைக் கொன்றவன்; தீயவர்களிலே கடைப்பட்டவன்; கல் போன்ற உனது இதயத்தை எனது சூலத்தால் நான் பிளக்கப் போகிறேன். உனக்கு இரக்கமும் கிடையாது; வெட்கமும் கிடையாது; அரக்கர்களும் நிந்திக்கத்தக்க காரியங்களைச் செய்பவன் நீ. உனது உடலை எனது சூலத்தால் பிளந்து, கழுகுகளுக்கு இரையாக்கப் போகிறேன். அப்படியின்றி, உனது வஜ்ராயுதத்தால் நான் மடிய நேர்ந்தால், நான் மேலான கதியை அடைவேன். நீ வைத்திருக்கும் வஜ்ராயுதம் ஆற்றல் வாய்ந்தது; வீணாகாதது. ஆகவே அதை உபயோகித்து என்னை வதம் செய். பகவானை அடுத்து இருப்பவர்கள் ஒருபோதும் அழிய மாட்டார்கள். நான் அசுரனாயினும் நரகத்துக்குப் போக மாட்டேன். மோட்சத்துக்குத்தான் போவேன். தன்னைத் தவிர்த்து, வேறு பயன் கருதாது இருக்கும் ஏழை எளியவர்களுக்குப் பகவான் அருள் புரிவான்; பற்றுதலோடு காரியத்தில் ஈடுபடுபவர்களுக்கு அவன் அருள் செய்யான்" என்று சொல்லி, பகவானின் கல்யாண குணங்களைக் கூறி, அவரைத் தோத்திரம் செய்துவிட்டு, சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு இந்திரனைத் தாக்கத் தொடங்கினான் விருத்திரன்.

அப்போது இந்திரன், வஜ்ராயுதத்தைக் கொண்டு, அசுரனுடைய ஒரு கையைத் துண்டித்தான்.

உடனே விருத்திரன் தனது மற்றொரு கையில் பரிகம் என்னும் ஆயுதத்தை எடுத்துக்கொண்டு, இந்திரன் கன்னத்தில் பரபரப்புடன் அடித்தான்; இந்திரன் ஏறி இருக்கும் ஐராவதத்தையும் அடித்தான்.

அதனால் இந்திரன் கையிலிருந்த வஜ்ராயுதம் நழுவிக் கீழே விழுந்தது.

இதைப் பார்த்ததும் தேவர்களும் அசுரர்களும் வருத்தமும் ஆச்சரியமும் ஒருங்கே அடைந்தார்கள்.

இந்திரனே கீழே விழுந்த வஜ்ராயுதத்தை எடுத்துக் கொள்ள நாணப்பட்டான்.

இதைக் கவனித்த விருத்திரன் இந்திரனிடம், "தேவர்களுக்கு அரசே! வஜ்ராயுதத்தை எடுத்துக் கொள்ளும்; உம் பகைவனைக் கொல்லும்; கவலைப்படுவதற்கோ நாணப்படுவதற்கோ இது காலம் அன்று. வெற்றியையோ தோல்வியையோ முன்னதாக அறியலாம் என்பது யாருக்கும் சாத்தியப்படாது. ஆகவே, ஊக்கத்துடன் போர் செய்" என்று சொன்னான்.

விருத்திரன் இவ்வாறு கபடமின்றிப் பேசுவதை அறிந்து, இந்திரன் மகிழ்ச்சி அடைந்தான். சிரித்தவாறே சென்று வஜ்ராயுதத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டு, அசுரனைப் பார்த்துப் பேசத் தொடங்கினான். "ஏ அசுரா! நீ சித்தனாகிவிட்டாய்; உனக்கு இப்படி ஒரு எண்ணம் உண்டாகி இருப்பது வியக்கத்தக்கது" என்று சொன்னான்.

பிறகு இருவரும் தொடர்ந்து யுத்தம் செய்தார்கள். இந்திரன் விருத்திரனுடைய மற்றொரு கையையும் வெட்டினான்.

ரத்தம் குபுகுபு வென்று கொட்டிற்று; விருத்திரன் கீழே விழுந்தான்; பிறகு எழுந்து நடந்து வந்து, இந்திரனையும் அவன் ஏறி இருக்கும் ஐராவதத்தையும் விழுங்கத் தொடங்கினான்.

இதைப் பார்த்ததும், தேவர்களும் மகரிஷிகளும் "துயரம் துயரம்" என்று கதறினார்கள்.

இந்திரன் தனது யோக பலத்தால் மரணம் அடையவில்லை; வஜ்ராயுதத்தால், விருத்திரனின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு, வெளிப்பட்டான்.

பிறகு வஜ்ராயுதத்தால், விருத்திரனுடைய தலையைத் துண்டித்து, அவனை வதம் செய்தான்.

தேவர்களும் மகரிஷிகளும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார்கள்; தேவ துந்துபிகள் முழங்கின. இந்திரனைப் புகழ்ந்து பூமாரி பொழிந்தார்கள்.

விருத்திரனுடைய உடலிலிருந்து ஒரு ஒளி வெளிப்பட்டு, பகவானை அடைந்தது.

## சித்திரகேதுவின் கதை

"விருத்திராசுரன் வதமானதனால், இந்திரனைத் தவிர்த்து, மூன்று லோக பாலர்களும், மற்றவர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள். தேவர்களும் முனிவர்களும் ருத்திரன், இந்திரன், பிரம்மா முதலானவர்களும் தத்தம் உலகங்களுக்குச் சென்றார்கள்" என்று சுக முனிவர் சொன்னார்.

சுக முனிவர் இவ்வாறு சொன்னதும் பரீட்சித்து மன்னன் அவரிடம், "முனிவர் பிரானே! விருத்திரன் வதத்தினால் தேவர்கள் முதலானோர் மகிழ்ந்திருக்க, இந்திரன் ஏன் மகிழ்ச்சி அடையாமல் இருந்தார்? அதற்கு ஏதாவது காரணம் உண்டா?" என்று கேட்டான்.

அதற்குச் சுக முனிவர், "அரசே! விருத்திரனின் ஆற்றலுக்குப் பயந்திருந்த தேவர்களும் முனிவர்களும், அவனைக் கொல்லும்படி இந்திரனை வேண்டினார்கள். தனக்குப் பிரம்மஹத்தி தோஷம் வரும் என்று பயந்து, இந்திரன் விருத்திரனைக் கொல்ல விரும்பவில்லை. 'விஸ்வ ரூபனைக் கொன்றதனால் ஏற்பட்ட தோஷத்தை நான் நிவர்த்தி செய்துகொண்டேன். விருத்திரனைக் கொன்றால் அந்தத் தோஷம் எப்படி நீங்கும்?' என்று இந்திரன் கலக்கமுற்றான்.

"இதைக் கவனித்த தேவர்கள், பயப்பட வேண்டாம். அச்வமேத யாகம் செய்வதனால் இந்தத் தோஷத்தைப் போக்கிக்கொள்ளலாம்" என்று சொன்னார்கள்.

இதன் பின்னர், இந்திரன் விருத்திரனை வதம் செய்தான்

அதன் பயனாய் இந்திரனைப் பிரமஹத்தி பீடித்தது; அதற்குப் பயந்த இந்திரன், மானசரோவருக்குச் சென்று, தாமரைத் தண்டில் நுழைந்து ஆயிரம் ஆண்டுகள் இருந்தான். பிரம்மஹத்தி தோஷம் எப்பொழுது தன்னைவிட்டு நீங்கும் என்ற கவலையுடன் இருந்தான். ருத்திரன் இது சமயம் காப்பாற்றிய காரணத்தால், பிரம்மஹத்தி தோஷத்தால் இந்திரனுக்குத் தீமை எதுவும் நேரவில்லை.

இதன் பின்னர், மகரிஷிகள் அச்வமேத யாகத்தைத் தொடங்கி, இந்திரனுக்குள்ள பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கினார்கள்" என்று சொன்னார் சுகர்.

சுகர் இதைச் சொல்லி முடித்ததும், பரீட்சித்து மன்னன் தமக்கு இருக்கும் மற்றொரு சந்தேகத்தை அவரிடம் கேட்டான்: "முனிவர் பிரானே! விருத்திரன் தீய குணங்கள் உள்ளவன்; அசுர குலத்தில் பிறந்தவன்;

பாவியான இவனுக்குத் திருமாலிடம் எப்படித் திடமான பக்தி உண்டாயிற்று?" என்று வினவினான்.

அதற்குச் சுக முனிவர், "அரசே! இந்தக் கேள்வியை நீ கேட்டதற்காக நான் மகிழ்ச்சி அடைந்தேன். இதுபற்றி நாரதர், வியாசர், தேவலர் இவர்களிடமிருந்து நான் கேள்வியுற்ற ஒரு கதையை உனக்குக் கூறுகிறேன் கேள்.

"சூரசேனம் என்னும் நாட்டில் சித்ரகேது என்று ஒரு அரசன் இருந்தான். அவன் விரும்புவது அனைத்தை யும் பூமிதேவி அவனுக்குக் கொடுத்தாள். அவனுக்குக் கோடி மனைவியர் இருந்தனர். வாலிப மிடுக்குடையவனாய் இருந்தும், இந்த மனைவியர் மூலம் அவனுக்கு மகவே பிறக்கவில்லை. அழகு, உதாரகுணம், வாலிபம், குலம் கல்வி, செல்வம் ஆகியவற்றில் அவன் சிறந்து விளங் கியபோதிலும், குழந்தை இல்லாத காரணத்தால் சித்ர கேது பெரிதும் கவலைப்பட்டான். இதனால் அவனுக்குச் செல்வத்திலும் பிரியம் உண்டாகவில்லை; மனைவியரிடத் திலும் பிரியம் உண்டாகவில்லை; ராஜ்யத்திலும் பிரியம் உண்டாகவில்லை.

இப்படிச் சித்ரகேது கவலையுடன் இருக்கும் சமயம், லோக சஞ்சாரம் செய்துகொண்டிருந்த அங்கிரஸ முனிவர், தற்செயலாகச் சித்திரகேதுவின் அரண் மனைக்கு வந்தார்.

சித்திரகேது மன்னன் முறைப்படி அவரை வரவேற் றுப் பூசித்தான். அவர் ஆசனத்தில் அமர்ந்ததும், தானும் சென்று, அவருக்கு அருகே பணிவுடன் உட் கார்ந்தான்.

அப்போது அங்கிரஸ முனிவர் அவனை நோக்கி, "மன்னனே! நீ நலமுடன் இருக்கிறாயா? உனது படை யும் பரிவாரங்களும் குடிமக்களும் சௌகரியமாய் இருக்

கின்றனரா? உனது கடமைகளை நீ சரிவர நிறைவேற்றி வருகிறாயா? மக்களும் மந்திரி முதலானவர்களும் உனக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றனரா? உன் மனத்தில் ஏதும் வருத்தம் இருக்கிறதா? உன் முகம் வாட்டமுற்று இருப்பதற்குக் காரணம் என்ன?" என்று வினவினார்.

அதற்குச் சித்திரகேது, "முனிபுங்கவரே! தாங்கள் அனைத்தையும் அறிந்தவர்; இருந்தும் தாங்கள் கேட்பதால், எனக்கு இருக்கும் கவலையைக் கூறுகிறேன். புத்திர பாக்கியம் இல்லாத காரணத்தால் ராஜ்யம் முதலான எதிலும் நான் இன்பத்தைக் காணவில்லை. நானும் என் முன்னோர்களும் நரகத்தை அடையாமல் இருப்பதற்கு, தாங்கள் புத்திர பாக்கியத்தை எனக்கு அருள் செய்ய வேண்டும்" என்று இறைஞ்சினான்.

விவரம் தெரிய வந்ததும், அங்கிரஸ மகரிஷி துவஷ்டாவைப் பூஜித்தார். பிறகு யாகத்தில் மிகுந்ததை சித்திரகேதுவின் முதல் மனைவி கிருதத்யுதி என்பவளுக்குக் கொடுத்தார். அதன் பின்னர் அரசன் சித்திரகேதுவை நோக்கி, "அரசே! இன்பத்தையும் துன்பத்தையும் தரக்கூடிய புதல்வன் ஒருவன் உனக்குப் பிறப்பான்" என்று கூறிவிட்டு, அங்கிரஸ மகரிஷி அங்கிருந்து போய்விட்டார்.

யாகத்தின் அவிஸை உண்டதின் பயனாய் கிருதத்யுதி கருவுற்றாள். வளர்பிறை விருத்தி அடைவதுபோல, கருப்பம் விருத்தியடைந்து வந்தது. கருப்பம் பூர்த்தியாகி, கிருதத்யுதி ஆண்மகவு ஒன்றைப் பெற்றாள்.

அரச குமாரன் பிறந்திருக்கிறான் என்பது தெரிய வந்ததும், சூரசேன நாட்டு மக்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள்.

அரசன் சித்திரகேதுவும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தான். அந்தணர் முதலியவர்களுக்குத் தான தர்மங்களைச்

செய்தான்; புண்ணியாவசனம் முதலியன செய்து, ஜாதகர்மம் முதலானவற்றைச் செய்தான். சித்திரகேது வும் அவன் மனைவி கிருதத்யுதியும், தங்கள் குழந்தையை அன்போடும் பெருமையோடும் பேணி வளர்த்து வந்தார்கள்; கண்ணை இமை காப்பது போல் குழந்தையைப் பேணிப்பாதுகாத்தார்கள்.

சித்திரகேதுவின் மற்ற மனைவியர்கள் தங்களுக்குக் குழந்தை இல்லையே என்று மனம் புழுங்கினார்கள். புதல் வனைப் பெற்று இருக்கும் கிருதத்யுதி மீது பொறாமை கொண்டார்கள்.

மன்னன் சித்திரகேது, குழந்தையைப் பெற்ற கிருதத்யுதியிடம் அதிக பிரியமாய் இருந்தான்.

இது சித்திரகேதுவின் மற்ற மனைவியருக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் மன்னனை வெறுத்ததோடு, அவன் மைந்தனையும், வெறுத்து குழந்தைக்கு நஞ்சு கொடுத்துவிட்டார்கள்; அதனால் குழந்தை இறந்து போயிற்று.

கிருதத்யுதி, குழந்தை தூங்குவதாக நினைத்துக் கொண்டு முதலில் சும்மா இருந்தாள். பிறகு குழந்தை யைத் தன்பால் எடுத்து வருமாறு வேலைக்காரியிடம் சொன்னாள்.

குழந்தையை எடுக்கப் போன வேலைக்காரி, அது இறந்து கிடப்பதை அறிந்து, கீழே விழுந்து அழுது புலம் பத் தொடங்கினாள்.

இதைப் பார்த்ததும், கிருதத்யுதி மார்பில் அறைந்து கொண்டு புலம்பி அழுதாள். மூர்ச்சித்தும் கீழே விழுந்து விட்டாள்.

அரசி கதறி அழுவதைச் செவிமடுத்ததும், அரண் மனையில் இருக்கும் ஆண்களும் பெண்களும் அங்கே ஓடி வந்து கதறி அழுதார்கள்; சக்களத்திகளும் ஒன்றும்

அறியாதவர்கள் போல அங்கே வந்து, மற்றவர்களோடு சேர்ந்து அழுதார்கள்.

அரசன் சித்திரகேதுவும் விவரம் தெரிய வந்து, பார்வை இழந்தவன் போல், கதறிக்கொண்டு ஓடி வந்தான்; மந்திரி பிரதானி முதலியோர் அரசன் பின்னே ஓடி வந்தார்கள்.

அரசனே கவலை அதிகமாகி, வரும்பொழுதே வழியில் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். தன் மைந்தன் அருகே வந்து விழுந்த அவன், கண்ணீரைச் சொரிந்து, பேச முடியாமல் மூர்ச்சித்துக் கிடந்தான். தன் புதல்வன் மரண மடைந்ததையும் அதன் காரணமாகத் தன் கணவன் சோகத்தில் ஆழ்ந்திருப்பதையும் பார்த்த கிருதத்யுதி, சோகம் தாங்காது துயரம் மேலிட்டுக் கதறினாள். சோகத்தின் காரணமாக, சிருஷ்டி கர்த்தாவான பிரம்ம தேவரையும் அவள் திட்டத் தொடங்கினாள் :

"ஏ பிரம்ம தேவனே ! நீ ஒரு முட்டாள் ! சிருஷ்டிக்கு விரோதமான காரியத்தை நீ செய்கிறாய் ! வயது வந்தவர்கள் உயிருடன் இருக்கிறார்கள்; குழந்தைப் பிராயத்தில் இருப்பவர்கள் இறந்து போகிறார்கள். உமது சிருஷ்டியில் இப்படி ஒரு மாறுபட்ட நிலைமை நிலவுகிறது. ஆகவே உம்மால் உலகத்துக்கு நன்மை எதுவும் இல்லை. பிறப்பு இறப்பு முதலியன அவரவர் செய்த கருமப்படி நடப்பதாயின், பிரம்மா என்னும் ஒருவன் எதற்கு இருக்க வேண்டும்'" என்று சொன்னான்.

பிறகு தன் புதல்வனை நோக்கிப் புலம்பினாள்: "குழந்தாய் ! என்னையும் உன் தந்தையும் துயரக் கடலில் தவிக்கச் செய்து நீ போய்விட்டாய்; குழந்தை யில்லாத வருத்தம் ஒருவாறு பொறுக்கக் கூடியது; பெற்ற பிள்ளையை இழப்பது பொறுக்க முடியாதது. உன்னைப் பிரிந்து என்னால் வாழ முடியாது; உன்னை அழைத்துக்

கொண்ட யமனிடம் சொல்லி என்னையும் அழைத்துக் கொள்ளச் செய்'' என்று புலம்பினாள்.

தன் மனைவி புலம்புவதைப் பார்த்த சித்திரகேது, தானும் அதிகம் புலம்பினான்; ஆற்றுவார் தேற்றுவார் யாரும் இன்றி அங்கு இருந்த அனைவரும் அழுது புலம் பிக்கொண்டிருந்தார்கள்.

இப்படி அவர்கள் துயரக் கடலில் மூழ்கி இருந்த சமயம், நாரத முனிவரும் அங்கீரஸ முனிவரும் அங்கு வந்தார்கள். அவர்கள் இருவரும் மன்னனுக்கு ஆறு தல் சொல்லி அவனைத் தேற்றத் தொடங்கினார்கள் :

''அரசே! இப்பொழுது யாரை நினைந்து நீ அழுது புலம்புகிறாயோ, அவனுக்கும் உனக்கும் உள்ள தொடர்பு என்ன? முந்தின பிறப்பில் இவனுக்கும் உனக்கும் உள்ள உறவு என்ன? நீரின் வேகத்தால் மணல்கள் ஒன்றோடொன்று சேருவது போலவும், பிறகு பிரிவது போலவும், மக்கள் கால வெள்ளத்தால், சேருவதும் பிரி வதுமாய் இருக்கிறார்கள். நீயும் நானும் இங்கு இருக்கும் மற்றவர்களும், முன் ஜன்மங்களில் சேர்ந்து இருந்தோம் என்பதும் இல்லை. மரணத்துக்குப் பின் சேர்ந்திருப் போம் என்பதும் நிச்சயம் இல்லை. இதை நீ தெரிந்து கொள். இறைவன் தமது மாயையினால் உயிர் இனங் களை உண்டுபண்ணுகிறார்; காக்கிறார்; அழிக்கிறார். விதையிலிருந்து விதை உண்டாவதைப் போல. தேகத்தி லிருந்து தேகம் உண்டாகிறது; அழிந்து போகிறது, ஆயினும் ஜீவன் நித்தியம் என்பதைத் தெரிந்துகொண்டு. பகவானிடம் பக்தி செலுத்து'' என்று சொன்னார்கள்.

முனிவர்கள் இவ்வாறு ஆறுதல் சொன்னதும் சித்திரகேது முகத்தைத் துடைத்துக்கொண்டு, கவ லையை மறந்து, ''தாங்கள் யார்? தோற்றம் பெரியோருக் குரியதாய் இருக்கிறது. அஞ்ஞானிகளுக்கு ஞானத்தை

உபதேசிக்க வந்திருக்கும் பெரியோர் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகவே, சம்சார சாகரத்தில் அழுந்திக் கிடக்கும் எனக்கு ஞானத்தை உபதேசியுங்கள்'' என்று வேண்டினுன்.

அதற்கு அங்கீரஸ முனிவர், ''அரசே! குழந்தையின்றி வருந்திய உனக்கு, குழந்தையை அனுக்கிரகித்த ஆங்கிரஸ் நான். இவர் பிரம்ம தேவரின் புதல்வரான நாரத மகரிஷி. புத்திரனை இழந்து கவலையில் மூழ்கிக் கிடக்கும் உனக்கு, ஞானத்தை உபதேசிக்கும் பொருட்டு, நாங்கள் வந்தோம். வீடுவாசல் மனைவி மக்கள், பணம், அரசு, சேனை, நண்பர்கள் இவை அனைத்தும் நித்தியமானவை அன்று. கனவு போன்ற மாயை ஆகும் இவை; இவற்றை உண்மை என்று நம்பக் கூடாது; உண்மையாய் இருந்தால் இவை எப்பொழுதும் இருக்க வேண்டும் அல்லவா? ஆகவே, எதிலும் பற்றுதல் இன்றி, ஆத்மாவின் உண்மை நிலையை அறிய முயன்று வைராக்கியத்தை அடைய வேண்டும்'' என்று உபதேசம் செய்தார்.

இதன் பின்னர், சித்திரகேதுவின் மனம் தெளிவடையும் பொருட்டு, நாரத மகரிஷி ஒரு காரியம் செய்தார். தமது யோக பலத்தால், சித்திரகேதுவின் இறந்து போன பிள்ளையை உயிர்த்து எழச் செய்தார்.

பிறகு அந்தக் குழந்தையை நோக்கி, ''ஓ ஜீவனே! நீ நலம் அடைவாயாக! உன் தாய் தந்தையரும் நண்பர்களும் உறவினரும் உனது மரணத்தால் வருந்துகிறார்கள். ஆகவே, இந்த உடம்பில் இன்னும் சிறிது காலம் இருந்து, போக போக்கியங்கள் அனைத்தையும் அனுபவி. அரசனுடைய சிம்மாதனத்தை அடைந்து ராஜ்யத்தைக் காப்பாற்று'' என்று சொன்னுர்.

இப்படி நாரத முனிவர் சொன்னதும் அந்த ஜீவன்

அவரை நோக்கி, "அந்தணரே! எந்தப் பிறப்பில் இவர்கள் எனக்குத் தாய் தந்தையராய் இருந்தார்கள்? என் கர்மத்துக்குத் தக்கபடி, பல யோனிகளில் மாறி மாறித் தேவனாகவும் மனிதனாகவும் திரியக் ஜாதியிலும் பிறந்து நான் சுழன்றுகொண்டிருக்கிறேன். அப்படிச் சுழன்று திரியும் எனக்கு நண்பர்களாகவும் உறவினர்களாகவும் தாய் தந்தையராகவும் பகைவர்களாகவும் ஆகிறார்கள். விற்று வாங்கக் கூடிய தங்கம் முதலிய பொருள்கள் மனிதர்களிடம் மாறி மாறிப் போய்க்கொண்டிருப்பது போல, ஜீவனும் அனேக யோனிகளில் சுழன்று திரிகிறான். பசு முதலியன ஒருவனிடம் இருக்கும்வரைதான் தனது என்று அவற்றை ஒருவன் உரிமை கொண்டாட முடியும்; கைமாறிப் போய்விடுமாயின், அது வேறு ஒருவனுக்குச் சொந்தமாய்விடுகிறது. அதுவும் பசு உயிருடன் இருக்கும்வரை ஒருவன் தனது என்று உரிமை கொண்டாட முடியும். பசு இறந்து போமாயின், அந்த உரிமையையும் அவன் இழந்துவிடுகிறான். இதே போல, தேகத்துடன் உயிருக்குச் சம்பந்தம் இருக்கும் வரைதான், தந்தைக்கு, உரிமை இருக்கிறது. ஜீவன் உடலைவிட்டுப் பிரிந்துவிட்டால், தந்தைக்கு இருக்கும் உரிமையும் போய்விடுகிறது" என்று சொல்லி, அந்தத் தேகத்தைவிட்டு ஜீவன் போய்விட்டான்.

இந்த விளக்கத்தைக் கேட்டதும், உற்றார் உறவினர், பந்தம் என்னும் தொடர்புகளை அறுத்துக்கொண்டு சோகத்தை மறந்தார்கள்.

பின்னர், அந்தத் தேகத்தைச் சுடலைக்கு எடுத்துப் போய், ஈமத் தீயிலிட்டுச் செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாம் செய்து முடித்தார்கள்.

நாரதர் சொன்னவற்றைக் கேட்டு, சித்திரகேது விவேகம் அடைந்தான்; குளத்தின் சேற்றிலிருந்து விடு

பட்டு, யானை கரையேறுவது போல, இல்லற வாழ்க்கை என்னும் பாழும் கிணற்றிலிருந்து சித்திரகேது வெளிப் போந்தான்.

பிறகு யமுனை யாற்றில் இறங்கி, நீராடி, தர்ப்பணம் முதலியவற்றைச் செய்து முடித்தான். பரமாத்மாவின் சொரூபத்தை அறியும் பொருட்டு, புலன்களை அடக்கி, மௌன விரதத்தை மேற்கொண்டான். நாரத முனிவரைக் குருவாக அங்கீகரித்து, தரையில் வீழ்ந்து அவரை வணங்கினான்.

நாரதரும் மகிழ்ச்சி அடைந்து, அவனைத் தன் சீடனாக அங்கீகரித்து, சித்திரகேதுவுக்கு மந்திர உபதேசம் செய்தார்.

அதன் பின்னர், அங்கிரஸ முனிவரையும் அழைத்துக்கொண்டு நாரத முனிவர், சத்திய லோகம் போய்விட்டார்.

பிறகு, சித்திரகேது மன்னன் நாரதர் உபதேசித்த மந்திரத்தை ஊக்கத்துடன் ஏழு நாட்கள் தொடர்ந்து ஜெபித்தான். அந்த ஏழு நாட்களிலும் நீரை மட்டுமே ஆகாரமாக உண்டான். அதன் பயனாய் வித்தியாதரர்களுக்கு இருக்கும் ஆற்றல்கள் அனைத்தையும் சித்திரகேது பெற்றான்; பிறகு பகவானைத் தரிசித்து மகிழும் பெரும் பாக்கியத்தை அவன் பெற்றான்.

இதன் பின்னர், அந்த மன்னன் பலரும் போற்ற, குல பர்வதங்களின் குகைகளில் இலட்சக் கணக்கான ஆண்டுகள் ஆனந்தமாக வாழ்ந்தான்.

பிறகு, ஒரு நாள் சித்திரகேது மன்னன் விமானத்தில் ஏறிக்கொண்டு வானவீதியில் சஞ்சரித்தான்.

அப்போது, தம் எதிரே சித்தர்களும் சாரணர்களும் தோத்திரம் செய்ய, பார்வதி தேவியை ஆலிங்கனம்

செய்துகொண்டு, சிவபெருமான் வீற்றிருப்பதைச் சித்திரகேது கண்டான்.

இந்தக் காட்சியைப் பார்த்ததும் உரக்கச் சிரித்தான். "சிவபெருமான் லோக குரு; அனைவருக்கும் தர்மத்தை உபதேசிப்பவர்; சடையைத் தரித்துக்கொண்டு தவம் செய்பவர். அப்படிப்பட்ட ஒருவர், பட்டிக்காட்டான் போல நடந்துகொள்கிறாரே! பலரும் பார்த்திருக்க, ஒரு பெண்பாலை வெட்கம் இன்றித் தழுவிக்கொண்டிருக்கிறாரே! பலர் பார்த்திருக்க இவர் இப்படி நடப்பது முறையா?" என்று பார்வதி காதில் விழும்படி இகழ்ந்து பேசினான்.

சித்திரகேதுவின் இந்தப் பேச்சைக் கேட்டதும், சிரித்துக்கொண்டு சிவபெருமான் சும்மா இருந்தார். ஆனால், பார்வதி, தேவியோ கோபம்கொண்டு "நீ அசுரனாய் பிறப்பாய்," என்று சித்திரகேதுவைச் சபித்தாள்

இந்தச் சித்திரகேதுதான் விருத்திரனாகப் பிறந்தான்.

(முதற் பகுதி முற்றும்)

# இந்த நூல்

ஸ்ரீமத் பாகவதத்தின் முதல் ஆறு ஸ்கந்தங்கள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. இந்தியப் பாணியில் ஓவியங்கள் வரைவதில் திறமைசாலியான ஓவியர் திரு. ராஜம் அவர்கள் வரைந்த ஓவியங்கள் வனப்புடன் காட்சி தருகின்றன.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியும் ஸ்ரீமுகமும் பெற்ற பதிப்பு.

**முதல் பாகம்**